**12:2**

**இடம்:** விழுப்புரம் மாவட்டம், வானூர் வட்டம், இலவம்பட்டு கிராமம், பிள்ளையார்கோயில் எதிரில் உள்ள கற்பலகை.

**காலம்:** சதாசிவதேவ மஹாராயர், கி.பி.1571.

**செய்தி:** அண்ணாமலை தேவி நமசிவாய தேவரடியார் சிடர் குருநமசிவாய உடையார்க்கு, சதாசிவமகாராயர் ஆட்சிக்காலத்தில் வேலூர் திப்பநாயக்கர் குமாரர் திருமலைநாயக்கர் இலவம்பட்டு கிராமத்தை நமசிவாயநல்லூர் என்ற பெயரிட்டு அம்பலத்தாடும் அய்யர் மகா நைவேத்தியத்துக்கு கொடை அளித்தமை குறிப்பிடப்படுகிறது.

*முன்பக்கம்*

1 ஸ்வஸ்தி ஸ்ரீமந் மகாமன்
2 டலேசுர மேதிலி மீசுர கண்ட கட்டா
3 ரி சாலுவ அரியராய விபாட பா
4 ஷைக்குத் தப்புவராய . . .
5 . . . பூறுவ தெக்ஷிண ப
6 ச்சிம உத்தர . . .கெசவே
7 ட்டை கண்டருளிய . . .
8 சதாசிவதேவ மஹாராய பிறுதிவிராச்சி
9 யம் பண்ணியருளாநின்ற சகாற்த மா
10 யிரத்து நானூற்று தொன்னூற்றியி
11 ரண்டு மேல் செல்லாநின்ற பிற
12 மொதூத . . . பங்குனி 3 உ பூறு
13 வ பக்ஷமும் பஞ்சமி திதியில் . . .
14 வாரத்து சுவாமியார் அம்பலத்தா
15 டும் அய்யர் பூறுவ கட்டளைப்பணி
16 விடை திருப்பெயர் அண்ணாமலை தே
17 தவி நமசிவாய தவரடியார் சிட்டி
18 கர் குரு நமசிவாய உடையற்கு ஸ்ரீ
19 மது வேலூர் நிலம் பொம்மு நா
20 யக்கர் அய்யன் அவர்கள் காரிய
21 த்துக்கு கத்தரான வேலூர் திப்ப
22 நாயக்கர் குமாரர் திருமலை நா
23 யக்கரேன் சிவதன்ம சாசநப்
24 பட்டையம் குடுத்தபடி சுவாமிய
25 ார் அம்பலத்தாடும் அய்யர் மகா
26 நவ்வியத்துக்கு நம்மிட சீர்
27 மையான வெளியனூர் சீர்மை
28 யில் நகரைக்காட்டுப் பற்றில் யி

29 லவன்பட்டுக்கு பிறுதி னாமமான

**பின்பக்கம்**

30 நமசிவாய நல்லூர் . . . பூறுவ
31 . . . தன்ம சாசனம்
32 பண்ணிக் குடுத்தோம்
33 . . .
34 . . . நமசிவாய நல்லூர் ஆன
35 . . . அம்பலத்தாடும் அய்ய . . .
36-42 . . .
43 நிக்ஷேபம் செலபாஷாணம் அக்
44 ஷிணியம் என்னப்பட்ட அஷ்ட்ட போ
45 பாகங்களுக்கு . . .
46 . . . சம்மதித்து சிவதன்
47 ம சாசனம் பண்ணிக் குடுத்தேன் அ
48 ண்ணாமலை தேவி நமசிவாய தே
49 வரடியார் சிட்டிகர் குரு நமசிவாய
50 உடையாற்கு வேலூர் திப்பு நாயன்
51 கர் குமாரர் திருமலை நாயக்க தேவ
52 ன் . . . யிப்படி யி
53 வர்கள் சொல்ல எழுதினமைக்கு
54 முஞ்ஞாறுடையார் ஆடவல்லாரெ
55 ழுத்து வழி அடுமை எழுத்து செல்
56 லக்குட்டி எழுத்து, வெளியனூர் நர
57 சரட்டியார் பேராயூர் களப்பாளர் ஆ
58 தனப்பட்டு நரசரட்டியார் சிற்றாமூர் க
59 ங்கு ரட்டியார் வீடூர் சந்திர நயினார்

***12:3***

**இடம்:** விழுப்புரம் மாவட்டம், வானூர் வட்டம், பரிக்கல்பட்டு சிவன்கோயில் மண்டபச்சுவர்

**காலம்:** கி.பி.1737. இணையான கலி (4839) சக (1659) ஆண்டுகளும் தரப்பட்டுள்ளன; இவற்றுக்குமேல் பிறபவாதி கெதாற என்று குறிப்பிட்டுப் பின்னர் 1651 என்ற எண்ணுன் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பகுதி விளங்கவில்லை.

**செய்தி:** அல்லூர் போலம ரெட்டியார் குமாரன் வெங்கடபதி ரெட்டியார், பரிக்கல்பட்டில் சிவன்கோயிலில் செய்த கருங்கல் மண்டப தர்மத்தைக் குறிப்பிடுகின்றது. இக்கல்வெட்டு தெலுங்கிலும் உள்ளது. முதலில் கொடுக்கப்பட்ட தமிழ் கல்வெட்டுச் செய்தியின் கூடுதலாக தெலுங்குக் கல்வெட்டின் இறுதிப்பகுதியில், இத்தர்மம்

காலங்காலமாக விளங்கவேண்டும் என்ற கருத்தில் சந்திரன் உள்ளவரையிலும், சூரியன் உள்ளவரையிலும். இராமகாதை உள்ள வரையிலும் இத்தர்மம் நீடிக்கும் என்னும் வடமொழி வாக்கும் சேர்த்துக் குறிப்பிடப்பட்டுள்ளது.

1 கலியார்த்த 4839
2 சாலிவாகன சகாற்தகம்
3 1659 க்கு மேல் பிறபவாதி
4 கேதாற 1651 க்கு மேல் செ
5 ல்லா நின்ற காளயுத்தி புரட்டா
6 சி மாதம் 12 உ துவாதெசியும் புதவ
7 ாரம் அவிட்ட நஷெத்திரமும் பெத்த
8 நாளில் பரிக்கப்பட்டிலிருக்கும் அ
9 ல்லூர் பொலமரட்டியார் குமாரன்
10 வெங்கடபதி ரெட்டியார் மண்டப த
11 ர்மம் நிறவேறினது குருபாதம் துணை



**தெலுங்குப் பாடம்** *

1 காலயுக்தி ஸம்வத்ஸரம் ஆஸ்வாஜ ஸ்ரீ தா$_3$ த்$_3$ வாத$_3$ ஸ்ரீ புத$_3$ வாரம் ச்$_0$ரவண ந
2 க்ஷத்ரம் நாடு$_3$ பரிக்கப்பட்டுல வுண்டி$_3$ன அல்லூரி போலமரட்$_3$டி$_3$ கு
3 மாருடு$_3$ வெங்கடபதி ரெட்$_3$டி$_3$ கா$_3$ரி மண்ட$_3$ப தர்மம் ஆ
4 யனு யாவத்$_3$ சந்த்ரஸ்ச ஸூரியஸ்ச யாவத்$_3$ . . .
5 நீ யாவத்$_3$ ராம காதா$_2$ லோகே தாவத்$_3$ த$_4$ர்மம் ஸநாதநம்



* இக்கல்வெட்டை சரிவர படித்தறிய உதவிசெய்த பிரெஞ்சு இந்தியவியல் கல்வெட்டறிஞர் முனைவர் கோ. விஜயவேணுகோபால் அவர்களுக்கு நன்றி.

# 13. பள்ளளக்குப்பம் கோட்டைக் கல்வெட்டு

ம. காந்தி, வேலூர்.
ப. வெங்கடேசன், காவேரிப்பாக்கம்.

**இடம்:** வேலூர் மாவட்டம், குடியாத்தம் வட்டம், மேல் ஆலங்குப்பம் அருகில் அமைந்துள்ள பள்ளளக்குப்பம் மலையின் மேற்பகுதிப் பாறை.*

**காலம்:** எதிரிலி சோழ சம்புவராயர், கி.பி. 12 ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** பள்ளளக்குப்பம் மலையில் ஒரு கோட்டை இன்றைக்கு சிதைந்து உள்ளது. இக்கோட்டையின் மதிற் சுவர் சுமார் 2 கி.மீ சுற்றளவில் கருங்கல்லால் கட்டப்பட்டுள்ளது. கோட்டைக்குச் செல்ல, மதிற்சுவரின் நான்கு பக்கங்களிலும் நான்கு வாயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. கோட்டையில் வீரர்கள் தங்குவதற்கு உறைவிடங்கள், மண்டபங்கள் கட்டப்பட்டுள்ளன. கட்டடச் செங்கல் ஒவ்வொன்றும் 10 அங்குலம் நீளமும் 7 அங்குலம் அகலமும் கொண்டவை. வீரர்கள் இளைப்பாறுவதற்கு வசதியாக அமைக்கப் பட்ட நான்குக்கு மேற்பட்ட குளங்களில் இறங்கி ஏறுவதற்கான படிகள் இயற்கையாய் அமைந்த பாறைகளில் வெட்டப்பட்டுள்ளன. கோட்டையின் மேற்கு பக்க வாசலில் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது. சம்புவரையரின் படைத்தலைவர்களில் ஒருவரான சோழகோன் இவ்வாசலை அமைத்துள்ளார்.



1 எதிரிலி சோழ ச
2 ம்புவராயர் முதலிக
3 ளில் பூவாண்டை
4 ஆன சோ
5 ழ கோந்
6 வாசல்

---

* கல்வெட்டு ஆய்வின்போது உதவிபுரிந்த இவ்வூரைச் சேர்ந்த கஜேந்திர நாயுடு அவர்களுக்கு நன்றி.

# 14. தேவதானம் கல்வெட்டு

ப. வெங்கடேசன், காவேரிப்பாக்கம்.

**இடம்:** வேலூர் மாவட்டம், வாலாஜாப்பேட்டை வட்டம் தேவதானம் என்னும் ஊரில் குடிமல்லூரான் கால்வாய்க்கு மேற்குப் பக்கத்தில் உள்ள கற்பலகை.*

**காலம்:** கி.பி. 12-ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** நான்கு அடி நீளமும் ஒன்றை அடி அகலமும் கொண்ட கற்பலகையில் சூலம் வெட்டப்பட்டு வலப்புறம் கல்வெட்டு உள்ளது. மண்ணைநாயகரான அழகிய சோழ விடங்கர் வழிபாட்டுக்காக 850 குழி நிலம் தேவதானமாக கொடுத்தமை.

1 மண்ணை னாய
2 கரான அழ
3 கிய சோழ வி
4 டங்கற்கு ஒரு சந்
5 திக்கு திரு அமுது
6 க்கு வேட்டுமப்
7 பனான இலங்கே
8 சிர தேவந் விட்ட ம
9 டைய நாரி குழி
10 850



* இக்கல்வெட்டு ஆய்வின்போது உதவி புரிந்த வன்னிவேட்டைச் சேர்ந்த திரு. மணிமாறன் கார்த்திக், தேவதானத்தைச் சேர்ந்த திரு. கார்த்திக் ஆகியோருக்கு நன்றி.

# 15. தென்சிறுவளூர்க் கல்வெட்டுகள்

**கோ. விசயவேணுகோபால், பாண்டிச்சேரி.**
**ஆ. துரைரங்கம், பாண்டிச்சேரி.**

விழுப்புரம் மாவட்டம், வானூர் வட்டத்தைச் சார்ந்த கொந்தமூர்க்கு (விழுப்புரம் - திண்டிவனம் சாலையிலுள்ளது) மேற்கே மூன்று கிலோமீட்டர் தொலைவிலுள்ள சிறு கிராமம் தென்சிறுவளூர். இவ்வூர்ப் பெருங்குளத்துக் கரையில் மிக்க இடிபாடுகளுடன் கூடிய சோழர் கலைப்பாணியில் அமைந்த சிறுகோயிலொன்று கள ஆய்வின்போது கண்டறியப்பட்டது. குளக்கரையில் இக்கோயிலைச் சேர்ந்த துவாரபாலகர் போன்ற சிற்பங்களும் பிற்காலப் பல்லவர் பாணியிலமைந்த ஜேஷ்டாதேவியின் புடைப்புச் சிற்பமும் பிற கோயில் பகுதிகளும் சிதறிக் கிடக்கின்றன. இக்கோயிற் சுவர்களில் காணப்படும் உத்தமசோழன், முதலாம் இராசராசன், மூன்றாம் குலோத்துங்கன், கோப்பெருஞ்சிங்கன் ஆகியோர் கல்வெட்டுகளும், வேறு சில உதிரிக் கல்வெட்டுக்களும் புதிதாகக் கண்டறியப்பட்டன. இவை முதன்முறையாக இங்கு வெளியிடப்படுகின்றன. கல்வெட்டுக்களில் ஊர்ப் பெயர் செலூர் எனவும் செளுதூர் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. கோயில் இறைவனின் பெயர் இயமதங்கீஸ்வரத்தாழ்வாரெனவும் செளுதூருடையார் எனவும் ஜயமதங்கீஸ்வரர் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

### 15:1

**இடம்:** சிவன்கோயில் தெற்குச் சுவர்

**காலம்:** உத்தமசோழன் யா:10 (கி.பி.978)

**செய்தி:** கிளிநல்லூர் பராபரன் நாயன் சாத்தன் என்பான் ஓய்மாநாட்டுச் செலூர் இயமதங்கீஸ்வரத்தாழ்வார்க்கு ஸந்திகளிலும் அமாவாசை யின் போதும் திருவமுதுக்கும் பொரிக்கறி அமுதுக்கும் நிலம் வழங்கியமை. பரகேசரி என்ற பட்டப்பெயர் மட்டும் வருதலின் உத்தமசோழன் கல்வெட்டாகக் கொள்ளப்பட்டுள்ளது. கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் செலூர் இன்று தென்சிறுவளூர் என வழங்கப்படுகிறது. ஓ என்ற நெடில் ஒா எனக் குறிப்பிடப்பட்டு உள்ளமை தமிழ் எழுத்துக்களின் வளர்ச்சியை ஆராய்வார் கவனத்திற்குரியது.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகெஸரிவர்
2 மற்க்கு யாண்டு பத்தாவது ஓய்மா நாட்டுச் செ
3 லூர் இயமதங்கீஸ்வரத்தாழ்வாற்க்குக் கிளிநல்
4 லூர் பராபரன் தாயன் சாத்தன் ஸந்(த்)திகளில்

5 னானாழி அரிசியாலும் அமாவாஸிக்கு நானாழி
6 அரிசியாலும் திருவமுது காட்டவும் போது நா
7 ழியால்ப் பொரிக்கறி அமுது நிசதப்படி மூன்று
8 பொழுதும் காட்டவைத்த நிலம் கணியனயன் வ
9 ட்டியில் காற்ச் செறுவும் கழுவலின் பாவாமை ஆக
10 ஒரு செறு னிலமும் கொண்டு இப்பரிசு ஸ்ரீகோ
11 இல் உடையார் செய்யக்கடவர்களாக வைத்தான் பரா
12 பரன்
13 தாயன்
14 சாத்தன்
15 இ தம்மம்
16 ரக்ஷித்தா
17 ர் பாத
18 ம் என் த
19 லை மேலி
20 ன.

### *15:2*

***இடம்:*** *தெற்கு அதிஷ்டான முப்பட்டைக் குமுதம்.*

***காலம்:*** *முதலாம் இராச இராசன், யா : 10 (கி.பி. 995).*

***செய்தி:*** *சோணாட்டு நந்தியநல்லூர் வெள்ளாளன் கலியன் (குன்றன்) ஊர்ப்பக்கல் விலைகொண்டு செலூர் இயமதங்கீஸ்வரத்தாழ்வார்க்கு காளப்போகமாக நிலம் கொடுத்தமை. இக்கோயிலில் காணப்படும் முதலாம் இராசராசனின் 10 ஆம் ஆட்சியாண்டுக் (கல்வெட்டில் 15 போலத் தோற்றமளிக்கிறது) கல்வெட்டில் கொடையாளியின் பெயர் கலியன் குன்றன் என வருவதால் இக் கல்வெட்டிலும் கலியன் குன்றன் எனக் கொள்ளலாம். வாசகங்கள் இரு கல்வெட்டிலும் ஒன்றாகவே இருத்தலால் இதனை முந்தைய கல்வெட்டின் படியாகக் கொள்ளலாம். மீண்டும் கட்டப்பட்டபோது வெட்டப்பட்ட படிக்கல்வெட்டாகலாம்.*

1 ஸ்வஸ்திஸ்ரீ காந்தளூர்ச்சாலை கலமறுத்த கோவிராஜராஜகேசரி
யாண்டு 10 ஆவது செல்லூர் இயமதங்கீஸ்வரத்தாழ்வார்க்கு
2 சோணாட்டு நந்தியநல்லூர் வெள்ளாளன் கலியன் ஊர்ப்பக்கல்
விலைகொண்டு காளப்போகமாகச் செய்த நிலத்துக்கெல்லை
கீழ்பாற்கெல்லை
3 வடக்கு நோக்கிப்போன வாய்க்காலுக்கு மேற்கு தென்பாற்கெல்லை
காலுக்கு வடக்கு மேல்பாற்கென்கை னகர்க்குக் கிழக்கு
வடபாற்கெல்லைக்கு செல்லூர் நிலத்துக்கு தெற்கு
4 இந்நாற்பேரெல்லையிலு உட்பட்ட நிலம் மஹாதேவர்க்குக் காணியாகச்
செய்தான் கலி கலியன் குன்றன் சந்திராதித்தளவு நிற்கு . . .

5 தம்மம் ரக்ஷிப்பார் ஸ்ரீபாத
6 ம் என் தலைமேலிது.

## 15:3

**இடம்:** கோயில் தெற்கு அந்தராளச் சுவர்.

**காலம்:** முதலாம் இராசராசன் யா : 10 (கி.பி.995).

**செய்தி:** செலூர் இயமதங்கீஸ்வரத்தாழ்வார்க்கு வல்லி கம்பன் விக்கிரமன் என்பான் இரண்டு நந்தாவிளக்குகள் எரிப்பதற்காக நிலம் வழங்கியமை. கல்வெட்டின் வரி 9 க்கு மேல் உள்ள வரிகள் கீழேயுள்ள கல்லில் தொடர்ச்சியாக வெட்டப்பட்டுள்ளன.

1 ஸ்வஸ்திஸ்ரீ காந்தளூர்ச் சாலை கலமறுத்
2 த கோவிராஜராஜகேஸரிபமற்கி யாண்
3 டு 10 ஆவது செலூர் இயமதங்கீஸ்வரத்தாள்
4 வார்க்கு வல்லி கம்பன் விக்கிராமன் வைத்
5 த நூந்தா விளக்கிரண்டினுக்குஞ் செய்த நி
6 லத்திற்கெல்லை கீழ்பாற்கெல்லை வெ
7 த்தின்றான் கொல்லைக்கு மேற்குந் தென்பாற்
8 கெல்லை தேவதானத்திற்கு வடக்கு மேல்பா
9 ற்கெல்லை வதியின் கிழக்கு இ வடபாற்கெல்
10 லை பள்ளிஎழுச்சிப்
11 பூமிக்கு தெற்கும் இந்
12 நாற்பேரெல்லையுள்
13 ளுமகப்பட்ட நிலம்
14 ஊரிசைவினோடும்
15 இறையிலியாகச் சந்திரா
16 தித்தவரையும் நிற்க
17 ச் செய்தான் தாழை கிழா
18 ன் வல்லி கம்பன் விக்கிரமன்
19 னேன் இத்
20 தம்மம் ரக்ஷிப்
21 பார் பா
22 தமென்ற
23 லை மேலிது

## 15:4

***இடம்:*** *கிழக்கு வாயில் முன்கிடக்கும் கல்.*

***காலம்:*** *முதலாம் இராசராசன், யா : 12 (கி.பி.997).*

***செய்தி:*** *நிலக்கொடை.*

1 ஸ்வஸ்திஸ்ரீ
2 ... கலமறுத்த கோவிராஜ
3 சரி வம்மக்கு யாண்டு 12 ஆவது
4 ... ணாட்டு ஆர்வலக்கூற்றத்
5 ... றக்கு ... குறைக்கால் ...
6 ...செலூர் ஊர்ப்பக்கல் ஓ ...
7 லி ... யில் கொண்ட நிலத் ...
8 ... கல்லை கீழ்பாற்கெல்லை
9 ... ஞ்செறுவின் மேற்கு க ...
10 ... ற்கெல்லை வண்ண ...

## 15:5

***இடம்:*** *கோயிலின் வடக்கு அதிஷ்டானம்.*

***காலம்:*** *மூன்றாம் குலோத்துங்கன், யா: 16 (கி.பி.1184).*

***செய்தி:*** *கல்வெட்டில் அம்மை அப்பன் பாண்டிநாடுகொண்டான் என்ற குறிப்பு காணப்படுதலாலும் இக்கோவிலில் காணப்படும் மற்றொரு கல்வெட்டில் இப்பட்டப்பெயருடன் இராசராச சம்புவராயர் என்ற பெயர் காணப்படுதலாலும் மூன்றாம் குலோத்துங்கனின் கீழ்ப் பணிபுரிந்த இச்சம்புவராயன் அளித்த நிலக்கொடைபற்றியது இக்கல்வெட்டு எனக் கொள்ளலாம். இராசராச சம்புவராயனைப் பற்றிக் கூறும் புதிய கல்வெட்டு இது. ஏற்கனவே இராசராசச் சம்புவராயர் கண்டரகூளி என அழைக்கப்பட்டமை அச்சரப்பாக்கம் கல்வெட்டால் (தெ.க. தொகுதி 7/453) தெரியவருகிறது.*

1 ... ஸ்ரீ த்ரிபுவன சக்கரவத்திகள் மது ...
2 ய ஸ்ரீகுலோத்துங்கசோழ தேவ ...
3 ம அப்பன் பாண்டிநாடு கொண் ...
4 ண்டசோழமண்டலத்து ஓய்ம ...
5 றையூர் நாட்டுச் செளுதூர் ஆளுடை ...
6 அர்ச்சநாபிஷேகங்களுக்கு ...

## 15:6

***இடம்:*** *சிவன்கோவில் மேற்கு அதிஷ்டானம்.*

***காலம்:*** *கி.பி.1194.*

***செய்தி:*** *செங்கேணி அம்மைஅப்பன் பாண்டிநாடு கொண்டானான இராசராச சம்புவராயன் (அர்ச்சனா) போகத்துக்கும் திருப்பணிக்கும் நிலமளித்தமை பற்றியது. கல்வெட்டின் இறுதிப்பகுதி மட்டும் கிடைத்துள்ளது. இக்கல்வெட்டின் கீழ்த் தரப்பட்டுள்ள துண்டுக் கல்வெட்டு இதன் தொடக்கப்பகுதியாக இருக்கலாம்.*

1 போகத்துக்குன் திருப்பணிக்கும் செல்வதாக என எழுத்திட்டுக்
குடுத்தபடிக்குக் கல்வெட்டிவித்தேன் செங்கேணி அம்மை அப்பன் பாண்
2 டி நாடு கொண்டானான இராசராச சம்புவராயநேன் இக்கல்வெட்டுப்படி
என்றுஞ் செலுத்துக இன் நிலன் தவிற்பார் கெங்கையிடை குமரியிடைச்
செய்த பாவங்கொள்வான்.

### *15:7*

***அரைத்தூண்கொண்ட தனிக்கல்லில் துண்டுக் கல்வெட்டு.***

1 யந் முடித்தலையுங் கொ . . .
2 6 பதிநாறாவது சே
3 ாழ சம்புவராயநேன்
4 சய ராஜேன்திரவள
5 கீஸ்வரமுடையார்க்கு
6 இவ்வூரில் நீர்நிலத் . . .

### *15:8*

***காலம்:*** *கோப்பெருஞ்சிங்கன், யா: 16 (கி.பி.1248).*

***செய்தி:*** *செயங்கொண்ட சோழமண்டலத்து ஒய்மாநாட்டுச் செளுதூரான செயங்கொண்ட சோழநல்லூர் உடையார் ஜயமதங்கீஸ்வரமுடைய நாயனார்க்கு இவ்வூரைச் சேர்ந்த தாழைகிழான் திருவேங்கடவன் பொன்னையன் ஆதன் ஜயங்கொண்டசோழப் பல்லவரையன் என்பான் இரண்டு நந்தாவிளக்குகள் எரிக்க ஆயிரத்திருநூறு காசுகள் கொடுத்தமை.*

1 ஸ்வஸ்திஸ்ரீ சகலபுவனச் சக்
2 கரவத்திகள் ஸ்ரீகோப்பெரு
3 ஞ்சிங்க தேவற்கு யாண்டு 16
4 ஆவது செயங்கொண்டசே
5 ாழமண்டலத்து ஒய்மாந
6 ாட்டுச் செளுதூரான செ
7 யங்கொண்ட சோழநல்லூ
8 ர் உடையார் ஜயமதங்கீஸ்வர
9 முடைய நாயநாற்க்கு இவூர்த் தாழை கி
10 ழான் திருவேங்கடவன் பொன்னையனாத
11 ன் ஜயங்கொண்டசோழப் பல்லவ
12 ரயனேன் இன் நாயனாருக்கு நான் வைத்
13 த சந்திவிளக்கு 2 விளக்கு இரண்டுக்கும் இக்சே

14 காயிலில் சிவப்பிராமணர் இவர்பக்கல் கொண்ட
15 புதுக்காசு 1200 இக்காசு ஆயிரத்திருநூறுங்

***துண்டுக் கல்வெட்டுகள்***

***15:9***

1 முடைய நாயனார்க்கு பக . . .
2 நல்லுழத்தி பெரியாண்டான் . . .
3 த சந்தி விளக்கொன்றுக்கு . . .
4 நற்காசு 250 இக் காசிவர் பால் கொ
5 ண்டு சந்திராதித்தவரை விளக் . . .
6 டவோம் இக்கோயில் படிகடந்து . . .

***15:10***

1 ற்றில் கீழ்பாற்கெல்லை . . . டரைமாவதிக்கும் மேற்கும் முத்திசதிரத்துக்கு
2 வடக்கும் மேல்பா கெல் . . . லவன் மாதேவிவதிக்கு கிழக்கு வடபாற் கெல்லை
3 டாரங்கொண்ட சோழவா . . . லுக்குத் தெற்கும் இன் நாற்பால்லெல்லை யுள்ப்பட்ட சதிரத்
4 ம் புல்லான் திருசத்தர தடிப .. . ல நிலம் இரண்டு வேலியும் விட்டேன் இந்நிலத்து பாடிகாவ
5 லுள்ளிட்ட பலவும் . . . கள் . . . தவற்கு இப்படி சந்திராதித்தவரை அமுதுபடி அர்ச்சனாபோக . . .

***15:11***

1 றுவதிக்கு வடக்கு மேல்பா
2 ற்கெல்லை பொங்காயின கி . . .
3 கரைக்கும் வடபாற்கெல்லை . . .
4 க்காலின் தெற்கும் . . .
5 கெல்லையுள்ள . . .
6 நிலம் அறுமாவரை . . .

***15:12***

1 விழாவுக்கு . . .
2 எழு நாளைக்கு
3 பணி செய்யும்
4 அடியார்க்கு கொ
5 ற்றுக்கு செய்தே
6 ன் குறைக்காலன்
7 பிச்சனேன்
8 இது பன்மா
9 ஹேஸ்வரர் ரகைஷ

# 16. அருப்புக்கோட்டை மீனாட்சி சொக்கநாதர் கோயில் கல்வெட்டுகள்*

பொ. இராசேந்திரன், மதுரை.
சொ. சாந்தலிங்கம், மதுரை.

***16:1***

**இடம்:** விருதுநகர் மாவட்டம், அருப்புக்கோட்டை, சொக்கநாதர் கோயில் அர்த்த மண்டபம் தென் சுவர்.

**காலம்:** முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1216-1238).

**செய்தி:** எண்ணெய் நன்கொடை அளித்தல். கல்வெட்டுக்களின் சில பகுதிகள் சிமெண்ட் பூச்சில் மறைக்கப்பட்டுள்ளன.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ கோமா . . . சக்கரவர்த்திகள் சோணாடு கொண்

2 டருளிய சுந்தரபாண்டிய தே . . . வது செங்காட்டிருக்கை இடத்து வ

3 ளியிற் பழிவிலங்கிப் பெருந் தெரு . . . ஊராய் இசைந்த ஊரோமும் காரணவரோடு .

4 மிவ்வூர் நாயனார் குறள் மாணீசுரவர முடை . . . ற்கைக் கேளற் குழைஞ்சான் மிரளய விடங்க

5 னான இடத்துவளி மாராயனுக்கு நாங்கள் விற்றுக் கொடுத்த நாள் வழி முட்டை யாவது எங்கள் செக்

6 கொன்றி னாள்வழி யோரெண்ணை முட்டை சந்திராதித்தவரை செல்வதாக யிவனுக்கு நாங்கள்

7 விற்றுக் கொடுக்க இவன் இந்னாயனார் கோயிலுக்கு நித்தம் மூன்று விளக்கு இவ்வெண்ணெய் முட்

8 டை யொன்றுங் கொண்டு செலுத்துவதாகக் கொடுத்தமையிலிவனுக் . . . நாள்

9 வழி யெண்ணை முட்டையொன்று முட்டாமற் சந்திராதித்தவற் செலுத்துவ தாகச் சம்ம

10 தித்துக் கல்லிலே வெட்டிக் கொடுத்தோம் பழிவிலங்கிப் பெருந்தெருவி லூராயிசைந்

11 த வூரோமும் காரணவரோமும் .

***16:2***

**இடம்:** முதற்கல்வெட்டை அடுத்ததுள்ளது.

**காலம்:** மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1216-1238).

**செய்தி:** நந்தாவனத்திற்கு நிலக்கொடை.

---

* ஆவணம் இதழ் 12 ல் வெளியான இக்கோயில்க் கல்வெட்டுகளின் தொடர்ச்சி.

1 . . .
2 யருளிய சுந்தரபாண்டிய . . .
3 . . .
4 . . .
5 ற வெண்பு நாட்டு செங்காட்டு இருக்கை இடத்துவெளி உடையார் குறழ்
6 மாணீச்சுர முடைய நாயனார் கோயில் தண்டேசுரனேன் இன்னாயனார்
7 திருமடை விளாகத்து மட பதிகளில் ஆலம்பாக்கமுடையான் பெருமா
8 ன் உதையனான சதாசிவ தேவனுக்கு தண்டேசுவர பிரமாணம்
9 பண்ணிக் குடுத்த . . . இந்நாயனார் மனகுளத்து [தேவனுக்கு] க் காராழ்
10 மை செய்து குடுத்த நிலத்துக்குச் சூழெல்லைக்குக் கீழெல்லை சீகா
11 ரியப் பேற்றுக்கு மேற்கும் தென்னெல்லை சிறுமணக் குளத்துக் கரை
12 க்கு வடக்கும் மேலெல்லை நம்பாண்டான் செய்க்குக் கிழக்கும் வடவெல்லை மா
13 ண போகத்துக்குத் தெற்கும் உட்பட்ட தடி பல நிலம் இருமாவுங் காரா
14 ழ்மை ஆகப் பண்ணிக் குடுத்தோம் தென்னி லங்கைக் [கோன்] . . .
15 ரு னார்க்கு ரெண்டு திரு நந்தவானம் செய்து திருப்பளித் தாமம் . . .

***16:3***

***இடம்:*** *மேலது, அர்த்தமண்டபம் வட சுவர்.*

***காலம்:*** *முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், யா : 10 (1226 கி.பி).*

***செய்தி:*** *கோயில் பஞ்சாச்சாரியர் நிலம் விற்றுக் கொடுத்தல்.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ கோமாற பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணாடு வ
2 ழங்கியருளிய சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு பத்தாவது மி
3 துன நாயற்று அமர பக்கத்து திரையோதசியும் திங்கட்கிழமையும் பெ
4 ற்ற உரோகிணி நாள் வெண்பு நாட்டு செங்காட்டு இருக்கை இடத்துவெளி உ
5 டையார் குறள் மணீசுவரமுடைய நாயனார் கோயில் பதிபாதமூலப் பட்டுடை
6 ப் பஞ்சாச்சாரியரோம் இவ்வூர் சீவல்லவன் பெருந்தெருவான தேசியாசிரியப் பட்டனத்
7 து அரைசூர் உடையான் உடையான் காணியான உலக சமைஞ்சிதனுக்கு நாங்கள் சண்
8 டேசுவர விலையாக விற்றுக் குடுத்த களமாவது இவ்வூர் வினாயகப் பிள்ளை யார் எ . . .
9 . . .
10 தத்து வலிய பிள்ளையார் தேவதானம் சிறுமணக் குளத்துக்குச் சூழெல்லைக்கு கீழெல்
11 லை நிலை தாங்கி யேரி நீரிறுக்கு மேற்கு நாட்டின திருச் சூலக்கல்லுக்கு மேற்கும் தென்னெல்லை

12 பாறையில் கல்லுரலுக்கு நாட்டின திரிசூலக் கல்லுக்கும் வடக்கும் மேலெல்லை
13 இக்குளத்து நீர்நக்கனுக்குக் கிழக்கும் வடவெல்லை உடையார் குறள் மாணீசுவர
14 முடைய நாயனார் தேவதானம் பெரியமணக்குளத்து எல்லைக்குத் தெற்கும் இன்னான்
15 கெல்லைக்கு உட்பட்ட நீர்நிலமும் புன்செய் யும் இக்குளத்து நத்தமும் நத்தப் பாழும்குளமும்
16 குளப்பரப்பும் மேனோக்கிய மரமும் கீனோக்கியகிணறும் புற்று மெப்பேர்ப்பட்டனவும் விலை
17 . . .
18 டுத்தோம் பதிபாத மூலப் பட்டுடை பஞ்சாசாரியரோம் உலக சமைஞ்சிதற்கு இப்படி
19 டி விற்றுக் குடுத்த குளத்தி . . . நிலத்துக்கும் புன்செய்க்கும் பயிரத்துப் பயிர் நிலத்துக்
20 குப் பதினாறு சாண்கோலால் . . . த்தால் இவ்வூர் மிடிகைக் காலால் அளக்குந் நெல்லு நாற்கல
21 மும் புன்செய்க்கு இக்கோல் [மா]த்தால் பதினாறு மேனி காற் திரமும் இறுப்பாராகவும் இப்படி
22 யிற் கொண்ட நிலத்தாலும் . . . நெல்லுக்கற்ப் பதற் செத்தை உள்ளிட்டிவ் வாசி நீக்கி இன்னாய
23 னார் ஸ்ரீபண்டாரத்திலேய் அளந்து . . . ந்த நெல்லுக்குந் திரமத்துக்கும் தரவு கொள்வ
24 னாகவும் இப்படி சம்மதித்து சண்டேசுவர பெருவிலையாகப் பிரமாணம் பண்ணிக்கு
25 டுத்தோம் இன்னாயனார் கோயில் பதிபாத மூலப்பட்டுடை பஞ்சாசாரியரோம் உலக ச . . .

### *16:4*

***இடம்:*** *மேலது, அர்த்த மண்டபம், வடக்கு சுவர்.*

***காலம் :*** *முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், யா:20 எதிர் 13. (கி.பி.1249).*

***செய்தி:*** *அருளாளப் பெருமான் உலக நாராயணச் சக்கரவர்த்தி என்னும் தலைவன் தேவதானமாக நிலக் கொடை அளித்தல்.*

1 . . . திருவாய்க் கேழ்விக்கு மேல்
2 . . .
3 ணாடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீரா
4 பிஷேகம் பண்ணியருளிய ஸ்ரீ சுந்தர பாண்டிய தேவர்க்கு யாண்டு இருபதாவது
5 இதனெதிராமாண்டு 13 . . . நாயற்று பூர்வ பட்சத்து . . . யையும் புத

6 ன் கிழமையும் பெற்ற திருவோணத்து நாள் மதுரோதைய
7 வளநாட்டு சாணாட்டுப் பெருநாங்கூர் அழகன் அருளாளன்
8 . . .
9 . . .
10 கு உலக . . .
11 . . .
12 புகலோக கண்டப் பேரேரியில் மடை . . .
13 விளையும் நிலம் இரண்டுமா முக்காணிக்கு சூழெல்லைக்குக் கீழெல்லை உல
14 . . . மண்டல நாடாள்வான் பற்றுக்கு மேற்கும் தென்னெல்லை மனுகுல தேவப் பே
15 ரரையன் பனையோடு செய்க்கு வடக்கும் மேலெல்லை இக்க சிரன யிரளை செய்க்கு
16 . . .
17 த் தெற்கும் இவ்விசைந்த பெரு நான் கெல்லைக் குட்பட்ட நிலமும் கிணறும்
18 மேற்படி . . . ற் குதியன் பெற்றான் பக்கல் விலைகொண்ட நிலத்துக்கு சூழெ
19 ல்லைக்கு கீழெல்லை பெருந்துவளி நாடாழ்வான் வய
20 லுக்கு மேற்கும் தென்னெல்லை உலக . . . நாடாழ்வான் வய
21 லுக்கும் நிகரிலி சோழப் பே(ர)ரையன் வயலுக்கும் வடக்கும் மேலெல்லை . . .
22 ன் முத்த . . . ங்கனுக்குச் சீதனங் குடுத்த வயலுக்குக் கிழக்கும் வடவெல்லை சீ
23 வல நாடாழ்வானுக்குத் தெற்கும் இவ்விசைந்த பெருநான்கெல்லை யுள்ப்பட்ட
24 நிலமும் உலக நாராயணன் சந்திக்கு அமுதுபடி வேண்டுவன வ
25 . . .
26 ற்று மெய்பேற்பட்டனவும் . . . தேவதானமாக . . . இப்படிக்கு சந்திரா தித்தவற்
27 செல்வதாக கல்வெட்டுவித்துக் குடுத்தேன் அழகன் அருளாளப் பெருமாளா
28 ன உலக நாராயணச் சக்கரவத்தியேன் உடையார் குறள் மானீசுவரமுடையநா
29 யனாற்கு இப்படிக்கு குடுத்த அழகன் அருளாளப் பெருமாளான உலக நாராயண
30 சக்கர வத்தி எழுத்து பூங்கால நாட்டுக் காரையிருக்கை நரபதி வாழையூரா
31 [ன . . . பூ] லோக சுந்தர நல்லூர் பெற்றான் பெற்றானான தமிழ் நாட்டரைய னெழுத்து
32 தொண்டை நாட்டு ஓணமங்கை கிழார் மதிரை யழகன். வடுகனான
33 தமிழ்ப் பல்லவரையன் எழுத்து

# 17. உத்தமபாளையம் தூண் கல்வெட்டு

பா. சாம் சத்தியராஜ், மதுரை.

**இடம்:** தேனி மாவட்டம், உத்தமபாளையம், முகம்மது பாத்திமா பெண்கள் உயர்நிலைப்பள்ளிக்கருகில் இருந்த கல்தூண் (இப்பொழுது மதுரை அருங்காட்சியகத்தில்).

**காலம்:** சுந்தரபாண்டியன், யா:11 (கி.பி. 13ஆம் நூற்றாண்டு).

**செய்தி:** நினைவுத்தூண் (?) அமைத்தமை.

1 சுந்தரபாண்டிய தேவற்
2 கு யாண்டு 11வது நம்பி
3 சீவல்லவனான தேவ
4 னுக்கு ஆலன் ஆ
5 ண்டி தலை நீரழி.
6 ஞத் தறி



# 18. முள்ளிக்குளம் துண்டுக் கல்வெட்டுகள்

ஆ. திருநீலகண்டன், திருநெல்வேலி.

**இடம்:** *திருநெல்வேலி மாவட்டம், சிவகிரி வட்டம், புளியங்குடி நகருக்கு கிழக்கே 5 கிமீ தொலைவில் முள்ளிக்குளம் ஊரில் பேய்குளத்தின் கீழ்ப்பகுதியில் அமைந்துள்ள கலிங்கு.*

**காலம்:** *13 ம் நூற்றாண்டு.*

**செய்தி:** *இவ்வூருக்கு மேற்கே 1.5 கிமீ தொலைவில் சாலைக்குக் கீழ்புறம் அமைந்துள்ள சூரன்குடி குளத்தின் அருகே கல்லோடை எனும் பேய்குளத்தின் நீர்ப்பிடிப்பு பகுதியைச் சுற்றிலும் நுண்கற்காலக் கருவிகள் (Microlithic Tools) பல கிடைத்துள்ளன. அம்மன் கோயிலின் மேற்கே குளத்திற்குள் சற்று தொலைவில் மற்றுமொரு கோயிலின் சிதைந்த பகுதிகள் காணப்படுகின்றன. சங்காத்தம்மன் கோயில் கல் எழுத்துக்களில் காணப்படும் காவீச்சுரமுடைய நாயனார் எனும் இறைவனின் பெயரில் இருந்து, இச்சிதைவுற்ற கோயில் ஒரு சிவன் கோயிலாக அமைந்திருக்க வேண்டும் என்றும், அக்கோயிலின் கற்களே சங்காத்தம்மன் கோயிலின் அடித்தளச் சுற்றுப்புறக் கற்களாக அமைக்கப்பட்டு உள்ளன என்பதையும் அறிய முடிகிறது. 3 முதல் 12 வரையிலான படைகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இவ்விடம் படைகள் நிலைகொண்ட இடமாக இருக்க வேண்டும்.*

## 18:1

1 பெரும்படையோம் இறையிலி
2 இவர் புகழ்பட . . . தலி கள்ளில் கருமாணிமால் . . .
3 [பி]ணக்கறுக்கும் நாயனார் பன்னிரண்டு ப[டை] . . .
4 . . . லும் மூன்றாம் படையார் நிலத்திலும் வட . . .
5 . . . ன்றமாவுட்படக்கிழக்கும் வடவெல்லைக் . . .

## 18:2

1 . . .
2 . . . டயல நமனதகள் . . . மலை மண்டலத்து மண் . . .
3 . . . ரிக்கி நடுவில் கட்டளையில் இட்ட . . .
4 . . . கழ வரம்பு பெற்ற சேவைக்கு . . .
5 பாரிக்காலுக்கு வடக்கு முதலாம் படையார் நில
6 . . .

### *18:3*

1 விளாகத்துத் தென்னிலங்கை . . . ரொமு . . .
2 மந்த கண்டனில் தென்னிலங்கை . . . யரொ . . .
3 க குலசேகரநல்லூர் தென் . . . கை வளஞ் . . .
4 டி பாடு குடுத்த பரிசாவது இக்கே . . .
5 த நாயகர்கும் தம்பிராட்டிக்கு . . . நாங்கள்
6 . . . வைக்குக் குடுத்தபடி இவ்வூர்

### *18:4*

1 . . . முமை உட்பட யிலி தேவதானமாக ச . . . க தச்ச . : . ல உ
2 . . . ாணிக் குடுத்த . . . இசைந்த ஊரோம் தச்சாண்டார் . . . மட
3 . . . லாறு மிருக . . . முக்காவது ஓலைக்குற்ற எழுத்துக் . . . றகுற்
4 ற பட்ட குற்ற . . . இதுவெ பிடிபாடாக்க காராண கமு . . . பட ெ
5 னமாகப் பி . . . ண்ணிக் குடுத்தோம் ஊரா இசைந்த . . . தச்சர்
6 . . . ப முடையாக . . . பூமதெவ விழுப்பரையன் எழுத்து இ . . . ய கொ
7 குலசேகரமு . . . வனான எழுத்து இயவனைவருஞ்சொ . . . டிபா
8 . . . குல சேகர . . . காட்டினான் குலசேகரவி . . . யன் எ
9 . . .

### *18:5*

1 [காவீ]சுரமுடையனாயனார்க்கு உடையான் த . . .
2 . . . மை உட்பட்ட இறையிலி தேவதான
3 . . . னீரும் வாற்துப் பிடிபாட்டு . . . கடை
4 . . . த் திரு வெகம்பமுடையார் கையிலே . . .
5 [காவீ]சுரமுடையனாயனார்க்குக் காராண கி
6 கனாங் கள்ளிரும் வாற்துப் பிடிபா
7 . . . ந் திருச்சுலக் கல்லும் னாட்டிக் குடு . . .
8 . . . ாவது கீழெல்லை பாப்பாளுகள் த . . .

# 19. திருத்தேர்விளைக் கல்வெட்டுகள்

சி. இலட்சுமணன், தமிழூர்.

***19:1***

**இடம்:** இராமநாதபுரம் மாவட்டம், திருவாடானை வட்டம் திருத்தேர்விளை சிவன்கோவில் தெற்குப் பிரகார பீடம்.

*காலம்:* சுந்தரபாண்டியத்தேவர், யா: 8 (கி.பி.13 ஆம் நூற்றாண்டு).

**செய்தி:** ஆலயத்தைத் திருப்புதுக்குச் செய்தல்.

1 சுவஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்ரவர்த்திகள் ஸ்ரீ சுந்தர பாண்டிய தேவற்கு யாண்டு 8 ஆவது திருக்கானப்பேர் கூற்றத்து திருத் தேர்வளை உடையார் திருத்தேர் வளையுடைய நாயனார் திருமலை தில்லை விடங்கா

2 ர காலத்திற்குப் பின்பு அங்காய முதலிகளில் தென் குளக்கரைக்கு கூத்தனான வந்தானான

3 பஞ்சவராயன் திருமலையரு திருப்புதுக்குச் செய்து மங்கலபிரதிஷ்டை செய்தான்

***19:2***

**இடம்:** மேற்குத் தெற்கு உபபீடம்.

**காலம்:** ஸ்ரீ வீரபாண்டியதேவர், யா:13 .

**செய்தி:** சித்திரைத் திருநாள் நடத்துதல்.

1 சுவஸ்தி ஸ்ரீ வீரபாண்டிய தேவற்கு யாண்டு 13 வது திருக்கானப் பேர் கூற்றத்து திருத்தேர்வளை உடைய நாயனார்கோவில் சித்திரைத்திரு

2 நாள் முட்டாமல் எழுந்தருளுவித்து . . . இத்திருநாள் . . . மத்தப்படி யாவ னொருவன் இவ்வூர்தரம்பெற்று வந்தான் திருநாள் மு[ட்டு]

3 விடாதபடி எழுந்தருளுவித்துப் புண்ணியும் பெறக்கடவன் இதுக்கு விரோதம் பண்ணினார் அதிட்டத்தினி பண்ணினார் பெறுமகாதோசம் பெறக்கடவர்

4 திருநாள் முட்டிப்படாமல் எழுந்தருளுவித்தா னான் திருத்தேர்வளை உடையார் ஸ்ரீ பாதங்கள் ரக்ஷிக்க

## 19:3

*இடம்: கருவறை மேற்புறச் சுவர்.*

*காலம்: ஸ்ரீ சுந்தரபாண்டியத்தேவர், யா:8. (13 ஆம் நூற்றாண்டு)*

1 சுவஸ்தி ஸ்ரீ கோச்சடைய பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு 8ஆவது கார்த்திகை மீ திருக்கானப் பேர் கூற்றத்து

2 திருத்தேர் விளையுடைய நாயனார் . . . நாட்டு சிறுகளத்தூர் ரெட்டைப் பிள்ளையான வீரபாண்டிய காங்கயர் குடிநீங்காக் காரணமாக . . . சண்டேசுர தேவற்கு இருகூறும் . . . நாயனார் திருமதிச்சடையு . . . முடையார். . . நாயனார் . . . பெருமானுக்கு ஒரு கூறும்

3 ஆக சந்திராதித்தவர் இறைகழித்து இந்நாட்டு திருத்தேர்வளை பற்றில் விற்குடியான வீரபத்திர நல்லூர் . . . கழித்து . . . திரிசூல[தா]பனம் பண்ணிக் குடுத்து இவ்வூர்செவ்விருக்கை . . .

4 தரிசு . . . கண்டு விளைந்த நிலத்துக்கும் மாத்தால் முக்கல நெல்லு . . .

# 20. கரூர் மாவட்டத்தில் சில புதிய கல்வெட்டுகள்

நாக. கணேசன், கருவூர்.

*20:1*

**இடம்:** கரூர் மாவட்டம், கரூர் வட்டம், வேட்டமங்கலம் கிராமத்தில் நத்தமேட்டுப் பகுதிக்கு வடபுறம் உள்ள புற்பவன ஈசுவரர் கோயில் அர்த்த மண்டபத்தில் புதைந்து கிடந்த செவ்வக வடிவத் தூணின் ஒரு பக்கத்தில் பொறிக்கப்பட்டுள்ளது.*

**காலம்:** கி.பி.13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** காசுவ கோத்திரத்தில் நாராயணன் சாத்தன் என்பவனும் தச்சன் உடையான் கோமுழம்பன் என்பவனும் வேட்டமங்கலம் புற்பவன ஈசுவரர் கோயிலில் கற்கால் எடுப்பித்தமை.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ
2 வேட்டமங்
3 கலத்தில் திரு
4 க் கோயில்லு
5 டையாந் காசுவ
6 கோத்திரத்தில்
7 நாராயணன் சாத்தந்
8 நும் வேட்டம
9 ங்கலத்தில் தச்ச
10 ன் உடையான் கோ
11 முழம்பநும் இவ்
12 விருவோம் இத்தி
13 ருப்பணி கற்கால்
14 நாட்டு விச்சோம்



*20:2*

**இடம்:** கரூர் மாவட்டம், அரவக்குறிச்சி வட்டம், முன்னூர் கிராமத்தில் ஊரின் வடபுறம் உள்ள ஒழுங்கற்ற செவ்வக வடிவிலான தனிக்கல்லின் இருபக்கங்களில்.

---

* தகவலளித்து உதவி புரிந்த கிராம நிர்வாக அலுவலர் பெ. நீலமேகம், உதவியாளர்கள் பி. முருகன், கே. ஞானபிரகாசம், எம். அழகன், கே.தங்கவேல் ஆசிரியர் ஆகியோருக்கு நன்றி.

**காலம்:** கி.பி. 12 ஆம் நூற்றாண்டு

**செய்தி:** 141 செமீ உயரமும், மேல்பகுதியில் 53 செமீ அகலமும் கீழ் பகுதியில் 63 செமீ அகலமும் கொண்ட கல்லின் ஒரு பக்கத்தில் இருபது வரிகளிலும் மறுபக்கத்தில் பத்து வரிகளிலும் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இடையிடையே கல்வெட்டு பொறிந்து காணப்படுகிறது. இக்கல்லினை முனியப்பன் கல் என்று மக்கள் அழைக்கின்றனர். இக்கல்லின் மேற்குப் பக்கத்து தோட்டத்தில் பதினொரு செக்குகள் காணப்படுகின்றன. கொங்குச் சோழனான மூன்றாம் வீரசோழன் (கி.பி.1168-1196)ன் அதிகாரி சிவகரணகண்டன் என்பவன் பதினைந்தாவது ஆட்சியாண்டில் வளஞ்சியரோடு கொண்டிருந்த பகைமை நீங்கியதை நினைவுகூரும் வகையில் இடைபூதி நாட்டு முன்ன ஊர் பெருமாள் கோயிலுக்கு வழங்கிய நிலக்கொடை பற்றி செய்தி.

**முன்பக்கம்**

1 ஸ்வஸ்தி ஸ்ரீ கோபரகேஸரி வர்மக்கு யாண்
2 டு 15 ஆவது கோனோன்மை
3 கொண்டான் திரு . . .
4 . . . பெருமாளுக்கு ஸ்ரீவீரசோழனான
5 சிவஹரண கண்டன் வ
6 ளஞ்சியரோடு பகை திருந்தி
7 குடுதமைக்கு இடைபூதி நாட்டு
8 முன்ன ஊர்க்கு இசைத்த வெ
9 ல்லை கீழ்பார்கெல்லை த
10 லை ஊற்று நிலத்துக்கு மேக்கு
11 நெற்று சாலைக்கு வடக்கும் தென்
12 பார்க்கெல்லை பரமதி நிலதுக்கு வடக்கு
13 ம் மேல்பார்கெல்லை கழலைய் நில
14 துகு கிழகும் நாகமங்கலநிலதுகு கிழ
15 க்கும் வடபாற்கெல்லை விதரிநிலதுகு தெக்கு
16 யிவிசைத்த பெருநான்கெல்
17 லையும் முன்னிலம் மொ
18 ழிவின்றி பல்லுருவில் பசு
19 மரமும் உட்பட்ட உடு
20 ம்போடி ஆமை தவழ்ந்



**பின்பக்கம்**

21 த எப்பேர்பட்டது
22 [புரவும் மிரவும்]

23 [க]ற்று புலும் போ[கா]
24 முற்றூற்று தேவ
25 தாநமாக வளஞ்
26 சியர்க்கு
27 . . .
28 . . . காத்தா
29 ன் . . . முடிமே
30 லின இத்தமம் அழித்
31 . . .

### *20:3*

*இடம்:* கரூர் மாவட்டம், கிருஷ்ணராயபுரம் வட்டம், பழைய ஜெயங்கொண்ட சோழபுரம் கிராமத்தில் நத்த மேட்டுப் பகுதியில் உள்ள செக்கில் பொறிக்கப்பட்டுள்ளது.

*காலம்:* கி.பி. 9-10ஆம் நூற்றாண்டு.

*செய்தி:* நத்தமேட்டின் தென்புறம் மூக்க கவுண்டர் தோட்டத்தின் கிழக்கு பக்கத்தில் இச்செக்கு சாய்ந்த நிலையில் காணப்படுகின்றது. 132 செமீ உயரமுள்ள இச்செக்கின் மேல் வாய்ப்பகுதி 76 செமீ விட்டம் கொண்ட வட்ட வடிவமாகக் காணப்படுகிறது. இதன் நடுவில் 20 செமீ விட்டமும் 36 செமீ ஆழமும் கொண்ட உரல் பகுதி காணப்படுகிறது. வீகம்பட்டன் என்பவன் வடுகம்பட்டன் என்பவனிடமிருந்து நகரம் அறிய பெற்ற செக்கின் வருவாயை பிடாரிக் கோயிலில் விளக்கெரிப்பதற்கு வழங்கியுள்ளான்.

1 ஸ்ரீவடுகம்பட்டன் தன்னுடைய செக்கு வீகம்பட்டனுக்கு நகரமறிய பேர்பேறு குடுக்க இந்ந
2 கரமறிய பிடாரியாக்கு திருவிளக்கினுக்கு நீ(க)ரட்டிக் குடுத்தன் வீகம்பட்டன்
3 இச் செக்கு



# 21. செலக்கரிச்சல் கல்வெட்டு

குருசாமி சித்தர், கோவை.

**இடம்:** கோயம்புத்தூர் மாவட்டம், பல்லடம் வட்டம், சூலூர்-சுல்தான் பேட்டை சாலையில் உள்ள செலக்கரிச்சல்.*

**காலம்:** 13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** ஐங்கைக் குடுமிச்சிகளில் சோழன் உமையான அணுத்திரப் பல்லவரைசி திருநிலையைக் கொடையாகத் தந்தமை. குடுமிச்சி என்பது குடுமி, குடும்பன் என்பதின் பெண்பாற் பெயர் ஆகும். குடுமி என்ற சொல் இலக்கியங்களில் வேந்தர்களைச் சுட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளது. வேள்விக்குடிச் செப்பேடு பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பற்றிக் குறிப்பிடும். குடும்பிகன் பற்றி திருப்பரங்குன்றம் கல்வெட்டும், சேரன் விஷ்ணுவர்மனின் குடும்பிய குலம் பற்றி கேரளம் எடக்கல் குகைக் கல்வெட்டுகளும் குறிப்பிடும். கீரனூர், கண்ணாடிப் புத்தூர் மற்றும் பேரூர்க் கல்வெட்டுகள் தென் குடும்பர் சிங்கன் சோழனான குலோத்துங்க சோழ இருங்கோளன் செய்த கொடைகளைத் தெரிவிக்கும்.

1 ஸ்வஸ்திஸ்ரீ விக்கிரமசோழ தேவற்கு யாண்டு ஏழாவது இக்கோயில் திருநிலை வாகணையும் பொங்க

2 லூர்க்கால் நாட்டுக் கீரனூரில் இருக்கும் ஐங்கைக் குடுமிச்சிகளில் சோழந் உமையான அணுத்திரப்பல்லவரைசி

3 தந்மம்

* இக்கல்வெட்டைப் படியெடுத்துக் கொடுத்துதவியவர் முனைவர் இரா.ப. கருணானந்தன். குடுமிச்சி என்ற குலப்பெயர் பொறிக்கப்பட்ட முதல் கல்வெட்டு இது என முனைவர் இரா. பூங்குன்றன் கருதுகிறார்.

# 22. வேலங்குடி கல்வெட்டு

சு. இராசகோபால், சென்னை.

**இடம்:** சிவகங்கை மாவட்டம் காரைக்குடி அருகில் உள்ள கோட்டையூர் வேலங்குடி சண்முக ஆசாரி வீட்டுத் தோட்டத்தில் நடப்பட்டுள்ள கல்.*

**காலம்:** விஜயநகர அரசன் தேவராயர், குறோத (கி.பி.1445).

**செய்தி:** கல்வெட்டின் மையப் பகுதி சற்றுச் சிதைந்துள்ளது. சூரைக்குடி அரசு வலங்கை வாழ வந்த வீர பாண்டிய விசையாலைய தேவர் வேலங்குடி நகரத்தார், பதிணெண் விசயம், பார்ப்பார்சேரி ஆகிய பகுதிகளைச் சேர்ந்தோருக்கு கொடுத்த பிடிபாடு. அதன்படி இவர்களுக்கும் இங்குள்ள நாலு பட்டடை (தொழில் சாதிகள்) மக்களுக்கும் விதித்த வரிகளில் (இறைமுறைமை) சில சலுகைகள் கொடுக்கப்பட்டன போல்தெரிகிறது.



1 ஸ்வஸ்திஸ்ரீ குறோத வரு
2 ஸ வையாசி மாதம் 3 தேதி வே
3 லங்குடியான தேசினாராயண
4 புரத்து நகரத்தாற்கும் இ
5 தில் வரும் பதிநெண்வி
6 ஷெயத்துக்கும் பாற
7 பாசேரிக்கும் வலங்
8 கை வாழவந்த வீரபா
9 ண்டிய விசையாலை
10 ய தேவர் பிடிபாடு
11 பண்ணிக் குடுத்த பரி
12 சாவது இன்னகரம் ஐய்
13 யந் தேவர்ராய மகாராய
14 ர்க்கு அண்ணா . . .
15 . . . இறைமுறைமை ஒழி
16 த்து . . .
17 . . . ணமாநவர் ராய
18 . . . ணோக்க தீட்டுவனாக
19 வும் இவர்கள் தங்களில்
20 கணக்கு வழக்கு ஏற்றவாட்ட
21 முண்டானால் நகரமாக கே
22 ட்க கடவதாகவும் நகரத்தா

---

* இக்கல்வெட்டு 1980ல் முனைவர் ந.வள்ளியால் அறியப் பட்டுத் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை கல்வெட்டுப் பயிற்சி நிறுவன மாணவர்களால் 2001ல் படியெடுக் கப்பட்டது.

23 ர் கேட்க சொன்ன குறை கேட்
24 க கடவோமாகவும் இதில் வ
25 ரும் நாலு பட்டடையில்
26 உள்ளாற்கு இதுவே பிடி

**பின்பக்கம்**

27 பாடாகவும் இம் மு
28 றைமை பூலோக
29 நாயனார் அம்
30 மை ...
31 ... கவும் இப்படிக்
32 கு வீரபாண்டிய வி
33 சையாலைய தேவரா
34 ந வலங்கை வாழ
35 வந்த தேவர் எழுத்
36 து ௳.



# 23. அருச்சுனாபுரம் கல்வெட்டுகள்

தே. கோபாலன், நாகர்கோவில்.

**23:1**

***இடம்:*** *விருதுநகர் மாவட்டம், திருவில்லிபுத்தூர் வட்டம், அருச்சுனாபுரம் சாந்தவனப் பெருமாள் கோவில் வெளிச்சுற்று தென்புறச் சுவர்.**

***காலம்:*** *வீரபாண்டியன், யா: 22 (கி.பி.1458).*

***செய்தி:*** *நயினார் தனிமாலையழகியார் கோயில் திருப்பணிக்கும் திருவாரா தனைக்கும் திருவுடையாட்டம் வழங்கியமை மற்றும் குடமுழுக்கு செய்தமை.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ கோமாரபன்மரான திரிபுவனசக்கரவத்திகள் ஸ்ரீ பெருமாள் வென்று மாலையிட்ட பெருமாள் வீரபாண்டிய தேவர்க்கு யாண்டு இரண்டாவதின் எதிர் இருபது ஆவது சகாப்தம் ஆயிரத்து முன்னூத்து எண்பது இதன் மேல் செல்லா நின்ற தாருண வருஷத்து விருச்சிக ஞாயிற்று இருபத்து ஆறாந்தியதியும் அமரபக்சத்து தெசமியும் மந்த வாரமும் பெற்ற அத்தத்து நாள் கண்ட நாட்டு சாந்தனேரியில்

2 நயினார் தனிமாலையழகியார் கோயிலில் திருப்பதி ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு நாம் இன்நாயினார்க்கு மண்ணாள் கலசமும் ஆடுவித்து திருவாராதனத்துக்கும் திருப்பணிக்கும் திருவுடையாட்டமாக இருபதுஆவது முதலுக்கு நாம் விட்ட குளம் இரண்டுக் கடைக்கூட்டாயிரவர்க் காட்டின கைத்து படினொவைவரில்-பணிக்கன் குளம் ஆன

3 அழகிய மணவாளப் பேரேரிக்கும் வீரபாண்டியன் கால்ப் போக்கில் ஊளைக்குளம் ஆன வீரபாண்டியப் பேரேரிக்கும் எல்கை ஆவது அழகிய மணவாளப் பேரெரிக்கும் கீழ் எல்கை வத்தராயன் குளத்து நீர் நத்தத்துக்கு மேற்குத் தென் எல்கை சிவில்லிபுத்தூர்க்குப் போகறதும் வழிக்கு வடக்கு மேல் எல்கை ஊரணிக்கு கிழக்கு வட எல்கை கலிங்கு ஆற்றுக்குத் தெற்கும் வீரபா

4 ண்டியப் பேரேரிக்கு கீழ் எல்கை பக்கத்தார் குளத்து நீர் நக்கலுக்கு மேற்கு

---

* *கல்வெட்டுகளைப் படிக்கும்போது உதவிய தெய்வத்திரு ச. ஹரிஹரன், முனைவர் வெ. வேதாசலம், மதுரை மற்றும் கல்வெட்டு ஆய்வின்போது உதவிய தியாகி எஸ்.கே.பொன்னையாத்தேவர், வத்திராயிருப்பு முனைவர் அய்யப்பன், முனைவர் அ.கா.பெருமாள், அறிஞர் அண்ணா கல்லூரி, ஆரல்வாய்மொழி ஆகியோருக்கு நன்றி.*

தென் எல்கை சிவலனேரியை யடுத்த மேற்கு வடக்கு மேல் எல்கை பூபதி குளத்துப் புரவுக்கு கிழக்கு வட எல்கை கோரை ஆற்றுக்கு மேற்கும் ஆக இப்பெரு நான்கு எல்கைக்கு உட்பட்ட குளமும் மற்றும் எப்பெயர்பட்ட ஸமஸ்த பிராப்திகளும் நீர் . . . பக்கு திருவிடையாட்டம் ஆக விட்டது . . . க்குமெ மரியாதியிலே சந்திராதித்யவர்

***23:2***

***இடம்:*** *விருதுநகர் மாவட்டம், திருவில்லிபுத்தூர் வட்டம், அருச்சுனாபுரம் சாந்தவனப் பெருமாள் கோவில் வெளிச் சுற்றின் வடபுற சுவர்.*

***காலம்:*** *வீரபாண்டியன், யா: 4 (கி.பி.1442).*

**செய்தி:** தனிமாலையழகியார் கோயில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும், கோயில் திருப்பணி, திருவாராதனைக்கும் திருவுடையாட்டமாக நிலக் கொடை வழங்கியதினையும் அதற்குரிய எல்லைகளையும் குறிப் பிடுகிறது.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ கோமாரபம்மராந திரிபுவனசக்கரவத்திகள் ஸ்ரீ பொன்னின் பெருமாள் பராக்கிரம பாண்டிய தேவர் ஆன வீரபாண்டிய தேவர் நம் யாண்டு இரண்டு ஆவதின் எதிர் இரண்டாவது ஸகாப்தம் 1364 இதன் மேல் செல்லா நின்ற கர வருஷத்து தனு ஞாயிற்று 22 ௳ பூர்வபக்ஷத்து நவமியும் சுக்ர வாரமும் பெற்ற அஸ்வதி நாள் கண்ட நாட்டு சாந்தனேரி நயினார் தனிமாலை யழகியார்

2 கோயில் திருப்பதி ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இன் நாயினார் திருவாராதனைக்கும் திருப்பணிக்கும் நாம் திருவிடையாட்டம் ஆக விட்ட இன்னாட்டு இவ்வூர் பற்றில் வீரபாண்டியன் கால்ப் போக்கில் காஞ்சரங் குளத்துக்கும் பாதுகாத்தான் குளத்துக்கும் கடம்பன் குளத்துக்கும் நான்கு எல்கை ஆவது காஞ்சரங் குளத்துக்கும் பாதுகாத்தான் குளத்துக்கும் கீழ் எல்கை பாரைக்

3 குளத்துக்கு மேற்கு தென் எல்கை சிரரூற்றுக்கு வடக்கு மேல் எல்கை கிழவனேரி புரவுக்கு கிழக்கு வட எல்கை வீரபாண்டியன் காலுக்கு தெற்கும் கடம்பன் குளத்துக்கு கீழ் எல்கை பூதி குளத்து நத்தத்துக்கு மேற்கு தென் எல்கை வீரபாண்டியன் காலுக்கு தெற்கும் கடம்பன் குளத்துக்கு கீழ் எல்கை பூதி குளத்து நத்தத்துக்கு மேற்கு தென் எல்கை வீரபாண்டியன் காலுக்கு வடக்கு மேல் எல்கை இட்ட கோனாட்மாவுக்கு கிழக்கு வட எல்கை

4 கோரை ஆற்றுக்கு தெற்க்கும் ஆக இப்பெரு நான்கு எல்கைக்கு உட்பட்ட குளமும் புரவும் மற்றும் எப்பெயர்பட்ட சமஸ்த பிராப்திகளும் இன்னாள் முதலுக்கு திருவிடையாட்டம் ஆக விட்ட அளவுக்கு இம்மரியாதியிலெ

சந்திராதித்யவத் கையாண்டு கொண்டு திருவாராதனையும் திருப்பணியும் நடத்திப் போதவும் பார்க இவை கருவூர் பொன் பெற்றி உடையான் எழுத்து

உ.

**23:3**

***இடம்:*** *விருதுநகர் மாவட்டம், திருவில்லிபுத்தூர் வட்டம், அருச்சுனாபுரம் சாந்தவனப் பெருமாள் கோவிலுக்கு வடமேற்கே உள்ள கிணற்றின் அருகில் கல்தூண்.*

***காலம்:*** *குலசேகர பாண்டியன், யா: 21 ( 13 ஆம் நூற்றாண்டு).*

***செய்தி:*** *நங்கன் சொக்கன் என்பவன் தோட்டம் விலைக்கு வாங்கி அதில் கிணறு வெட்டி அமைத்ததினைக் குறிப்பிடுகிறது.*

1 ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீகுல
2 சேகர தெவர்க்கு
3 21 வது நங்க
4 ன் சொக்கன் வி
5 லை கொண்ட தோ
6 ட்டக் கிணற்றின்
7 பேர் திரியாக் கண்டன்

# 24. கூமாபட்டி கண்மாய்மடைக் கல்வெட்டு

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.

**இடம்:** *விருதுநகர் மாவட்டம் ஸ்ரீவில்லிபுத்தூர் வட்டம் கூமா பட்டி வத்திரா சமுத்திரம் கண்மாயின் பெரிய மடைத்தூணில் உள்ள கல்வெட்டு.*

**காலம்:** *கி.பி.1522.*

**செய்தி:** *தும்மிச்சிராயன் என்பவன் மடை செய்து கொடுத்ததைத் தெரிவிக்கிறது.*

1 சுபமஸ்து
2 ஸகாத்தம்
3 1444 ல்
4 விருஷ ஷும்
5 ஆவணி
6 அந்தம்பர்
7 கண்டன்
8 உரிகோல்
9 சுரத்தாணன்
10 வாகைதர்
11 தும்மிசி ராயன்
12 மடை உ.

# 25. தன்னூத்தானேந்தல் கல்வெட்டு

*மா. செந்தில் செல்வக்குமரன், திருநெல்வேலி.*
*சொ. சந்திரவாணன், குற்றாலம்.*

*இடம்:* *சங்கர நயினார் கோயிலிலிருந்து 4 கிமீ தொலைவில் அமைந்துள்ள தன்னூத்தானேந்தலின் தலைமடையின் அருகில் அமைந்துள்ள சதுரத் தூணில் நாலு புறமும் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.*

*காலம்:* *தென்காசிப் பாண்டியன் குலசேகர தேவன், கி.பி.1556.*

*செய்தி:* *தூணின் மேற்பகுதியில் இரட்டை நாகத்தின் கீழ் லிங்கம் இருப்பது போன்று சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. சங்கர நயினார் கோவிலுக்கு அரசனால் இறையிலி தேவதான நிலமாக தனியுண்ணாநேந்தல் நீர் பாயும் நிலங்கள் வழங்கப்பட்டமை. இந்த நிலத்தில் வருகின்ற வருவாயைக் கொண்டு சங்கரநயினார் கோவிலில் அர்த்த சாம பூஜை, வரகுணராமன் என்ற மன்னன் பிறந்த மூல நட்சத்திரத்தில்சிறப்பு வழிபாடு நடத்தியமை.*

1 ஸ்வஸ்த்தி ஸ்ரீகோ ஜடில வம்மரான திரிபுவந சக்கரவர்த்தி கோ நேர்மை கொ
2 ண்டாந் ஸ்ரீபெருமாள் . . . நன் குமாரரான திரு
3 நெல்வேலி பெருமாள் ஸ்ரீ குலசேகர தேவர்க்கு யாண்டு சகாப்தம் 1478 வ
4 ருசங் இராக்சஷ வருஷம் பங்குனி மாதம் 15 ஆம் தேதி அமர பக்ஷத்து பூரணையும் ஷோம
5 வாரமும் அதிகண்ட யோக கரஜிகரண பெற்ற அஸ்த்த நட்ஷத்திரத்து நம்
6 பெருமாள் குலசேகர தேவரான பராக்கிரம பாண்டிய தேவர் நம் குமாரரான அழகிய சொ
7 க்கனார் உடையார் சங்கரநாராயண தேவர்க்கு தேவதானம் . . . மானியமாக நம்
8 வாசல் கணக்கர் கற்றடிப்படி சேர்த்துக் கொடுத்த கோட்டூர் நாளும் பத்தூர்பி
9 டாகைத் தனியுண்ணா தான் ஏந்தலான மேற்படி பிடாகை குளம் உள்ளிட்ட பற்று
10 இதுக்கு பெரு நான்கெல்கையாவது கீழ் எல்கை நாராயணக்க னேந்தல் எல்
11 கைக்கு மேற்கு தென் எல்லை பொட்டைக் குளத்து எல்லைக்கு வடக்கு மேல்
12 எல்கை பாறைக் குளத்து எல்கைக்கு கிழக்கு வட எல்கை வாணங்க ராமன்
13 எல்கைக்கு தெற்கு ஆக இந்நான் கெல்கைக்குட்பட்ட தனியுண்ணா நேந்தல் உள்
14 ளிட்ட பற்ற சாங்காராண்மை நெல் வகை பண வகையும்அத்தசாம பூசை செ
15 லவுக்கும் . . . ராமவரகுண ராமன் மாத நட்சத்திரத்து மூல திருநாள் செலவு
16 க்கும் இன்னாள் முதலுக்கு தேவதானமாக கையாண்டு கொள்ளவும் இதுவும் நல

17 ஞு ஆடி மாதம் . . . புத்தூர் பிடாகையில் . . . தேசங்களிக்கு மேல் கா
18 ணிக்கை குத்தகை காணிக்கை வெச்சு விலாவும் . . . ட்டைதி முதல் உள்ள
19 யந்தரகு திருக்கடைமை ஊத்தைப் பாட்டம் மற்றும் நான் கொள்[ளும்] கோமு
20 [றை] எப்பேர்ப்பட்டதும் நிலமாக இன்றென்றைக்கும் திரு
21 ப்பணிப்பிரமாக நம் வாசல் கணக்கிலும் இறை கணக்கிலும் தவிர்
22 த்து ஆச்சந்திராத்திபர் செம்பிலும் சிலையிலும் வெட்டி கையாண்டு
23 கொள்ளவும் இராச வாடை மறுவுரை தவிர்த்து தெரிசைத்தின் தீரா
24 க் கேள்வியாகப் பாவித்துக் கொள்ளவும் பார்க்க இவை ஒக்கர் யுடையா
25 ன் எழுத்து இவை இந்த சிலையிலே எழுதினது காராலன் முரி
26 யாத நயினார் பரிய திருவு நயினார் எழுத்து

# 26. சின்ன பொம்ம நாயக்கனின் கெட்ராலலமிட்டா கல்வெட்டு

ப. வெங்கடேசன், காவேரிப்பாக்கம்.
ப. பூபாலன், இராணிப்பேட்டை.

**இடம்:** ஆந்திர மாநிலம், சித்தூர் மாவட்டம், பொம்ம சமுத்திரத்திற்கு 2 கிமீ தொலைவிலுள்ள கெட்ராலல மிட்டா என்னும் கிராமத்தில் அமைந்துள்ள குன்றின் அடிவாரத்தில், ஏரிக்கு அருகிலுள்ள பாறைகள்.*

**காலம்:** சின்ன பொம்ம நாயக்கர், (கி.பி. 1571 ?).

**செய்தி:** சின்ன பொம்ம நாயக்கன் குருகுன்றம் என்னுமிடத்தில் பொம்ம சமுத்திரம் என்ற ஏரி வெட்டியமை.

*முதல் பாறை*

1 பிரசோஜபதி வருஷம் ஆவணி மாதம் 20 க்கு
2 பிறுதினாகச் சகண்
3 டன் புண்டரிக ஸ்ரீமது கண்டர் கண்டன்
4 கான பிறதாச சண்டமர்கானமன் வல்லாலயிராய மகா மண்டலேசுரன் . . . அறு
5 குலபனு எ . . . சிங்கம கலிவுக தேவேந்திரன் பெரியவ
6 ய்யன் பெரிய வீரப்பனாய்யன் காளமுன நாக நாயக்கரய்யன் சின்ன வீரப்பனாக்க
7 ரய்யன் . . . திப்புனாயக்கரய்யன் பாப்புனாயக்கரய்யன் . . . திப்புனாயக்கர்
8 சகோதரமான சின்னண்ணாயக்கரய்யன் நல்ல பொம்மனா
9 யகரய்யன் சின்ன திப்புனாயக்கரய்யன்
10 சின்ன வீரப்பனாயகரய்யனவர்கள் மற்று முண்டானகோத்திர
11 ங்களுக்கு புண்ணியமு உண்டாகத் தக்கதாக சின்ன வீரப்ப
12 னாயக்கரய்யன் குமாரர் சின்ன பொம்முனாயன்
13 குருகுன்றம் ஏரியும் ஊரும் நாற்பது
14 வருஷமாய் யிறந்த
15 போகையில்

---

* ஆய்வில் உதவிபுரிந்த தேவதானத்தைச் சேர்ந்த திரு. சீனிவாசன் அவர்களுக்கும், கெட்ராலலமிட்டாவைச் சேர்ந்த எம்.தாண்டவமூர்த்தி ஆகியோருக்கு நன்றி.

*இரண்டாவது பாறை*

16 கங்கன கோத்திர மத்தனநக கோமகுரல மக்கள்
17 சகெற் தக்கதாக ஏரியும் வெட்டிவிச்சு யிந்த பே
18 ரையும் விளங்கவிச்சு தனாம் சேற்
19 க தக்கதாக கட்டளை பண்ணி . . .
20 கள் யிந்த ஏரி பொம்ம சமுத்
21 திரம் எடுப்பிச்ச முகிற. . . ம தேவந்திர பய
22 தமு விபூஷப் பயமுமாறமாக
23 சகாயாலிவதா வறப்பிறசாதமு

# 27. வேலூர் மாவட்டக் கல்வெட்டுகள்

கி. குமார், சென்னை.

**27:1**

**இடம்:** வேலூர் மாவட்டம், வேலூர் வட்டம், கந்தனேரி கிராமம் சென்னை -பெங்களூர் நெடுஞ்சாலை வடபகுதிக் குளக்கரை கற்பலகை.

**காலம்:** சுமார் கி.பி. 16ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** வேலூர் காங்கயன் என்பவரின் மகள் தளவாயி என்பவரால் இக்குளம் வெட்டப்பட்டமை. இதற்கு கீழே ஏழு வரிகளில் உள்ள தெலுங்கு கல்வெட்டும் இதே செய்தியைத் தெரிவிக்கின்றது.

1 வேலூர்
2 காங்க
3 யன் மக
4 ள் தள
5 வாயி வெ
6 பாம்மய்ய
7 மணக்கத்
8 தன் புண்
9 ணியம்.

*தெலுங்குப் பகுதி*

1 வேலூர்
2 கெங்கய்ய
3 குந்துரு
4 தளவாயி
5 பொம்மய
6 சேஸின
7 புண்ய தர்மம்

**இடம்:** வேலூர் மாவட்டம், வாலாஜாப்பேட்டை வட்டம், அனந்தலை கிராமத்திற்கு மேற்கே அமைந்துள்ள குளக்கரையில் கற்பலகையில் செதுக்கப்பட்டுள்ள தெலுங்கு கல்வெட்டு.*

**காலம்:** *18.7.1810.*

**செய்தி:** வாலாஜாப்பேட்டை செட்டியார் குலத்தைச் சேர்ந்த நகரத்தாரின் தருமத்திற்காக நைனி செட்டி மற்றும் வெங்கம்ம செட்டியாரின் மனைவி ரெங்கநாயகம்மாள் ஆகியோரால் இக்குளத்தின் படிக்கட்டுகள் கட்டப்பட்டமை.

1 ஸ்ரீ ராம ஜெயம்
2 சாதாரண நாமாசம்
3 ஆனி நெள 32
4 தேதி வாலாஜாப்பேட்ட ஸ்தா
5 தேஸாச நோட்டஇம்ப
6 ற்று நகரம் வாரதர்மா
7 தூர்ப்புரு திருமேளம்பத
8 மட்ட துவாரம் படிக்
9 கட்லு கட்டட கார்யமு
10 நெனி செட்டி வெங்கம்ம
11 செட்டி பாரியா ரெங்கநாய
12 கம்மா காரி கைங்கர்யமு

---

* *கல்வெட்டைப் படித்தளித்த இந்தியத் தொல்பொருள் பரப்பாய்வுத் துறையின் உதவி கல்வெட்டியல் கண்காணிப்பாளர் திரு எஸ். நாகார்ஜுனா அவர்களுக்கு நன்றி.*

# 28. மேல் ஆலங்குப்பம் கல்வெட்டு

ம. காந்தி, வேலூர்.

***இடம்:*** வேலூர் மாவட்டம், குடியாத்தம் வட்டம், பள்ளளக் குப்பம் மலைக்கு வட கிழக்கில் மேல் ஆலங்குப்பத்திற்கு அருகில் உள்ள பாறை.

***காலம்:*** விஜய நகர ஆட்சி.

***செய்தி:*** பிள்ளையாருக்குக் கொடுத்த நிலம்.

1 சிங்கண் [ண] உடையார் கன்மந்

2 தேவன் மலையிற்

3 பிள்ளையார் மாதுய

4 ர் மித்திரர் தேவதா

5 னம் மலுக்கர் கிணற்று

6 க்கு மேற்கு குக்கிலி குட்டை வி

7 ரோவுக்கு கிழக்கு பாறைக்

8 கு வடக்கு ...

# 29. சிரிரங்க தேவ மகாராயரின் மழையூர்க் கல்வெட்டு

**து. துளசிராமன், ஆர்க்காடு.**
**ப. வெங்கடேசன், காவேரிப்பாக்கம்.**

**இடம்:** வேலூர் மாவட்டம், ஆர்க்காடு வட்டம், மழையூர் வெள்ளாளத் தெருவில் சம்பத் என்பவரின் வீட்டிற்கு கிழக்கே உள்ள பாறை.*

**காலம்:** *சிரிரங்க தேவ மகாராயர், சகம் 1557 விகாரி (கி.பி. 1635).*

**செய்தி:** பொட்டிள பள்ளியைச் சேர்ந்த ரங்கப்ப நாயக்கர் மழலூர் பெருமாளுக்கு பூசைக்கு ஒரு காணி நிலம் விட்டமை.

1 ஸ்வஸ்திஸ்ரீ மகாமண்லெசுவரர் சாலிவாகன
2 சகாற்த்தம் 1557 க்கு மேல் செல்
3 லா நின்ற சிரிரங்க தேவ மகாராயர் பிறுதி
4 விராச்சியம் பண்ணியருளிய வி
5 காரி வருஷம் மாசி மாதம் 9 ௳மழலூர்
6 வரம் தரும் பெருமாளுக்கு பூசைக்கு
7 பொட்டிள பல்லி றங்கப்ப னாயக்கரவர்
8 கள் தற்மமாக விட்ட காணி ஒன்றும் சந்த
9 ராதித்த வரைக்கும் நடக்க கடவதாகவும்
10 யிந்த தற்மத்துக்கு யாதாமொருவருகிதம் பண்றி
11 னால் கெங்கை கரையிலே காராம் பசுவை கொன்ற
12 தோஷத்திலே போக கடவராகவும் யிந்த தானம்
13 எழுதினநமைக்கு பல்லி ஊர் கணக்கு நல்ல தம்பி
14 எழுத்து மழலூர் கணக்கு யிராசப்பன்
15 எழுத்து

---

* ஆய்வின்போது உதவி புரிந்த மழையூரைச் சேர்ந்த ஏ.இரத்தினசாமி அவர்கட்கு நன்றி.

# 30. மிதிலைப்பட்டி திருச்சிற்றம்பலக் கவிராயர் வீட்டுக் கல்வெட்டுகள்

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.

*30:1*

**இடம்:** சிவகங்கை மாவட்டத்திற்கும் புதுக்கோட்டை மாவட்டத்திற்கும் பொதுவான (இராங்கியத்துக்கு அருகில்) மிதிலைப்பட்டியில் சிவகங்கை மாவட்டத்தின் எல்லை ஓரத்தில் உள்ள கவிராயர் வீட்டின் முன்பாக நடப்பட்டுள்ள தூண்.

**காலம்:** கி.பி.17 ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** தூணின் கிழக்குப் பகுதியில் திரிசூலம் வரை கோட்டு உருவமாக வரையப்பட்டும் அதன் கீழ் ஒரு கல்வெட்டும் அடுத்த பக்கத்தில் மற்றொரு கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளது. இரண்டுமே பாடல் கல்வெட்டுகளாகும். முதல் கல்வெட்டு சிந்தையூர் மன்னன் வெங்களப்பன் திருச்சிற்றம்பலப்புலவருக்கு மடப்புறமாக சேயூரையும் இரண்டாவது கல்வெட்டு மிதிலைப்பட்டியையும் தானமாகக் கொடுத்த செய்தியைத் தெரிவிக்கின்றன. கல்வெட்டின் எழுத்தமைதியைப் பார்க்கிறபோது கி.பி.17ஆம் நூற்றாண்டை ஒட்டியதாகத் தெரிவதால் இவ்விரு பாடல்களையும் இப்புலவரே பாடியிருக்கலாம் எனக் கருதலாம். சேயூர் இன்றைக்கு செவ்வூர் என்ற பெயரில் சிவகங்கை மாவட்டத்தில் திருப்பத்தூர் வட்டத்தில் பூலாங்குரிச்சிக்கு அண்மையில் உள்ளது. திருச்சிற்றம்பலக் கவிராயர் கி.பி.17ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் மிதிலைப்பட்டியில் வாழ்ந்தவர். இக்கவிராயர் மிகச் சிறந்த புலவர். பல நூல்களை இயற்றியவர். இவர் மட்டுமல்லாது இவர் வழித்தோன்றல்கள் பலரும் கவிராயர்களாக இருந்துள்ளனர். இவருக்குப் பின் இவரது குடும்பத்தில் குமாரசாமிக் கவிராயர், குழந்தைக் கவிராயர், பாண்டியக் கவிராயர், அழகிய சிற்றம்பலக் கவிராயர் எனக் கவிராயர்கள் தோன்றி தமிழ் வளர்த்ததன் காரணமாக இவரது குடும்பம் கலைமகள் அருள் பெற்ற குடும்பமாக திகழ்ந்துள்ளது.

1 தானமா
2 மென்ன
3 வே சந்திர
4 ாதித்தவ
5 ரை மான
6 மாய்க் க

7 ாப்பவனே
8 மன்னவா
9 ம் நானில
10 மேற் சிற்றம்
11 பலந்தன்
12 கதச் சிந்தை
13 தவரு வெங்
14 களையனு
15 ற்ற மடப்பு
16 றஞ் சேயூர்

***30:2***

1 மழைக்
2 கன்னதா
3 ரைக் கட
4 ா யானை
5 ச் சிந்தை
6 யர் மன்
7 னன் ை
8 க மாவ
9 ழைக்க
10 முன்னே
11 வந்த வெ
12 ங்கள பூப
13 ன் சிற்றம்
14 பலம்பான் கை
15 மா . ன்ன
16 ாவ பெருகு
17 முதலைப்பட்டு
18 ரைச் செல்வ
19 ந் தழைக்க
20 வின்னான
21 மிதிலைய்
22 பட்டின மெ
23 னத் தந்தன
24 னே.

# 31. காசி கண்ணப்பசாமி மடம் கல்வெட்டுகள்

ச. கிருஷ்ணமூர்த்தி, சிதம்பரம்.

**31:1**

**இடம்:** காசி திருவாவடுதுறை கண்ணப்பசாமி மட வாயிலின் மேல்பகுதி.

**காலம்:** கி.பி.1787.

**செய்தி:** இது திருவாவடுதுறை ஆதீனத்துமடம் என்ற அறிவிப்பு.

1 காசியில் திருவாவடு
2 துறை மடம் கண்ண
3 ப்ப தம்பிரான் சுவாமி
4 வயித்திய லிங்க தம்பிரான் சுவாமி
5 க்கே செலா அம்பலவாண குருதே
6 சிகர் சீசர் நமசிவாய குருபரம்பரை
7 யில் மெயிகண்டான் சந்தானம்
8 திருவாவடுதுறை ஆதீனத்துமடம்

**31:2**

**இடம்:** மேலது.

**காலம்:** *13.4.1787.*

**செய்தி:** *எழுத்து அரபியிலும் மொழி தமிழ், பாரசிகம் கலந்தும் எழுதப்பட்டு உள்ளது. மாலிக் = உரிமையாளர், சேலே = சீடர், ஷெகர் = நகர், மகல்லா = பகுதி, சோனார் புர என்பது காசியில் இப்பகுதியின் இன்றைய பெயர்.*

1 காசி நகரி திருவாவடுதுறை ஆதீனம் காசி
2 மாலிக் கண்ணப்ப தம்பிரான் சுவாமி வைத்திய லிங்க தம்பிரான் சுவாமி அம்பலவாண குரு
3 சுவாமி கேசேலே பரம்பரி ஆதீன தம்பிரான்
சுவாமி குரு தற்குஹத் கோசேலே ஆதீன
4 திருவாவடுதுறை ஷெகர் காசி
5 நிவாசி மகல்லா சோனார்புர மரக்கூம்
6 சீ ஸ்தஹம்மாஹ் ஏப்ரல் 1787 சனே ஈசவி

31:3

**இடம்:** இம்மடத்தினுள் உள்ள கோயிற் சுவர்.

**காலம்:** ஈசுவர (1806?).

**செய்தி:** இராமலிங்கத் தம்பிரான் 7 லிங்கங்கள் பிரதிஷ்டை செய்தமை.

1 ஸ்ரீகாசி திருவாவடுதுறை ஆதீன
2 கண்ணப்பசாமி மடத்தில் 1804 (?)வருடம்
3 தை மாதம் 10 தேதி குருவாரம் கும்பலக்கன
4 ம் இராமலிங்கத்தம்பிரான் . . . ர்களால் ஏழு சிறு
5 லிங்கம் ஸ்தாபித்து கும்பாபிஷேகம் செய்
6 யப்பட்டது [ஈசுவ] ர வருட சுபதினத்தில்



# 32. தனிச்சியம் கண்மாய் கல்வெட்டு

கரு. இராஜேந்திரன், புதுக்கோட்டை.

**இடம்:** மதுரை, வாடிப்பட்டி வட்டம், தனிச்சியம் , அய்யங்கோட்டைக்கு அருகிலுள்ள தனிச்சியம் கண்மாய் பெரியமடையின் தூண்.

**காலம்:** கி.பி.1802.

**செய்தி:** அம்மைய நாயக்கனூர் ஜமீன்தார், அம்மைய நாயக்கரவர்களின் பேரனும் சங்குநாயக்கர் மகனுமான ஆறுமுக நாயக்கர் சகோதரன் அம்மையக்கநாயக்கரது சொந்த கிராமம் தனிச்சியத்தின் கண்மாயில் மடை அமைத்து என்றைக்கும் தனிச்சியம் நிறை விளைச்சலாக இருக்க வேண்டிக்கொண்டமை.

**முன்பக்கம்**

1 உசுவத்தி
2 ஸ்ரீ சாலி
3 வாகன
4 சகாப்பி
5 த்தம் 17
6 24
7 கலியுகம்
8 4903
9 யிதன்
10 மேல்ச்செ
11 ல்லா நின்
12 ற துந்துமி
13 ஞூ ஆனி
14 மீ ம் 20 வ
15 பூற்வபட்
16 சத்து திறு
17 திகையும்
18 சுக்குரவா
19 ரமும் பூச
20 நட்செத்தி
21 ரமும் அரு
22 ஷண நா
23 மயோக
24 மும் கவுல
25 வாகரண
26 மும் கூடி
27 ய சுபதின
28 த்தில் பெ
29 ஞ்சை நக
30 ராதி பணி
31 களங்கம
32 . . . னிலை
33 க் கோட்டை
34 ராயன் அ
35 ருபத்தாரு
36 மண்டலீ
37 கர் கண்ட
38 ன் வேள்
39 காப்பக்க
40 றைடால
41 வீரகண்டா
42 மணி வி
43 றது பலவு
44 ம் பெற்ற சா
45 மத்துறோ
46 கற் கண்

47 டன் வஸ
48 க்கற குலதி
49 லகன் சன
50 கைக்கு திரி
51 நரசிம்ம
52 மூர்த்தி ஸ்ரீ
53 பரசு சே
54 ற்வை அக
55 லாத ராசா
56 திராசன் ரா
57 சமாற்த்தா
58 ண்டன்
59 ராச கெம்
60 பீரன் ரா
61 சகுல தில
62 க யெதுகு
63 ல வமிச
64 த் தரான
65 ராகிய ஸ்ரீ
66 வேத வியா
67 ச பட்டரா
68 சாறியற்
69 குரு கிறு
70 பையுள்
71 ள அம்மை
72 யக்கை
73 கய ணாயக்
74 கறவர்க
75 ள் பவுத்தி
76 ரரான அ
77 ம்மைய

*பின்பக்கம்*

78 குமா(ர)
79 ரு சங்
80 குனாய
81 க்கறவ
82 ற்கள்
83 புத்திரரா
84 ன ஆரு
85 முகனா
86 யக்கற
87 வர்கள்
88 சகோ
89 தரான
90 அம்மை
91 மயக்
92 கனக
93 யனாய
94 க்கறவ
95 ர்கள்
96 சொந்த
97 க்கிறா
98 மம்த
99 னிச்சி
100 யம் க
101 ண்மா
102 யில்
103 மடை
104 க்கி
105 தோரண
106 த்தல
107 ஸ்த்த
108 ம்பம்
109 நிலை நா
110 ட்டி
111 வைய்த்த
112 படியி
113 னாலே
114 யேக
115 தேச
116 கால
117 மும் வத்
118 தாத
119 சமுத்
120 திரமா
121 கிய
122 நித்தி
123 ய செ
124 ல் நிதி
125 யாக
126 முப் பூ
127 வும் வீ
128 ரபோ
129 கமாக
130 நிரை
131 வெளை
132 ச்சலா
133 க விளை
134 ஞ்சு சு
135 கவச
136 தியா
137 கயி ரு
138 க்க வே
139 ண்டி
140 யதாக
141 சிறும
142 லைத் தெ
143 தய்வ
144 ங்கள்
145 வெள்
146 ளி மலை
147 யாண்டி
148 . . .

# 33. கோட்டாறு சுமைதாங்கிக் கல்வெட்டு

செந்தீ நடராசன், நாகர்கோவில்.

**இடம்:** நாகர்கோவில், கோட்டாறு புனித சவேரியார் கோயில் அருகே ஏகாலியர் மடம் என அழைக்கப்படும் உமிக்கரி மடம் இருந்த இடத்தில் உள்ள கோயில் கல் (சுமை தாங்கி).

**காலம்:** (கொல்லம்) 990, கி.பி. 1814.

**செய்தி:** கோட்டாறு கடைசன் குலத்தைச் சார்ந்த பூமி பட்டங் கெட்டி என்பாரின் மகன் பெருமாள் பட்டங்கெட்டிக்கு குமரன் துணை - என்பதால் பெருமாள் பட்டங்கெட்டி என்பாரின் அகால மரணத்தில் நிறுவப்பட்ட சுமை தாங்கிக்கல் அல்லது நினைவுக் கல்லாக இது இருக்க வேண்டும். *கடைசன்* என்ற குலம் *கடையன்* என்றும் அறியப்படுகிறது. இச் சமூகத்தினரின் அநேக குடும்பங்கள் சவேரியார் கோயிலின் வடப்புறம் வாழ்ந்திருந்திருக்கின்றனர். தற்போது இக்குலத்தோர் கோட்டாறு, வடசேரி, புத்தேரி, பாலூர் சத்திரம் பகுதி, வள்ளியூர், நெல்லை பேட்டை கடையனோடை, தூத்துக்குடி முதலிய இடங்களிலும் இருக்கின்றனர். திருச்செந்தூர் தேரடி முடுக்கினை அடுத்த தெற்குத்தெருவில் கடைசர் குலம் மடம் உள்ளது.

1 990 ௵
2 அல்ப்பசி மீ
3 12 கோட்டா
4 று கடைசன்
5 பூமிபட்ட கெட்டி
6 மகன் பெரு
7 மாள் பட்ட கெ
8 ட்டிக்கு
9 குமரன் துணை

# 34. லாலா சத்திரம் கல்வெட்டு

மா. செந்தில் செல்வக்குமரன், பாளையங்கோட்டை.

**இடம்:** திருநெல்வேலி நகரம், லாலாசத்திரம்.*

**காலம்:** கொல்லம் 1012, கி.பி.1837.

**செய்தி:** கி.பி.19ஆம் நூற்றாண்டில் திருநெல்வேலியில் லாலாக்கள் வெங்கிடாசலபதிக்கு கோயில் கட்டி கும்பாபிஷேகம் நடத்திய செய்தியினைத் தெரிவிக்கின்றது. இந்த இடம் தற்காலத்தில் லாலா சத்திரம் என்று அழைக்கப்படுகின்றது. லாலா என்பவர்களே திருநெல்வேலி அல்வா என்ற இனிப்பு வகையை அறிமுகப் படுத்தியவர்கள்.

1 1012 ஐ துர்முகி ஐ ஆவனி மாதம் 30 உ தியதி பூறுவ

2 பட்சம் துதிகை சோமவாரம் அஷ்த்த நட்செத்திரம் விரிச்சிக லக்கனம் கூடிய

3 சுபதினத்தில் திருநெல்வேலி சாதிரதிராம் அவர்கள் குமாரன் ரூபுராம் லாலா சிரஞ்சீவி

4 தவுலத்துச் சந்துராம் சதாவர்த்தரம் சத்திரம் பகல் நாழிகை பதினஞ் சில்க் கும்ப

5 அபிஷெகம் முகுர்த்தம் ஸ்ரீவெங்கிடாசலபதி சகாயம்

---

* கல்வெட்டைக் கண்டுபிடிக்க உதவிய பாளையங்கோட்டை திருவாளர் செ.முத்துக்கனி, பே. அருண் பிரசாத் ஆகியோருக்கு நன்றி.

# 35. சைதாபேட்டை காரணீஸ்வரர் கோயில் கல்வெட்டுகள்

க. ஈஸ்வரன், சென்னை.

**35:1**

**இடம்:** சைதைவட்டம், சைதாப்பேட்டை திருக்காரணீஸ்வரர் கோயில் மகாமண்டபத்தின் தென்புற சுவர்.

**காலம்:** சர்வசித்து வருடம் கார்த்திகை மாதம் 4 ம் தேதி - *15.3.1886* (நவம்பர் 1887).

**செய்தி:** *பரங்கிமலைப் பகுதி மௌண்ட் சாலையில் உள்ள ஒரு பங்களா வீடு காரணீசுவரர்கோயில் பேரில் பதிவு செய்யப்பட்டு அதன் வாடகை வருவாய் காரணீசுவரர் கோயில் பெரிய திருவிழா, ஆருத்ர திருவிழா மற்றும் விநாயகர், சுப்ரமணியர், இராமர் கோயில்களின் வழிபாட்டிற்காக வழங்கப்பட்டமை.*

1 சர்வஜித்து ஞு கார்த்திகை மீ 4 ௨
2 சைதாப்பேட்டையைச் சார்ந்த காரணி
3 கிராமத்திலிருக்கும் செங்குந்த ஜாதி வீர
4 பாகு சுவாமி கோத்திரம் வா. ஆறுமுக முத
5 லியார் குமாரர் சுப்பராய முதலியார் 1886
6 மார்சு மீ 15 ௨ பரங்கிமலை கண்டோன்
7 மெண்டு மவுண்டு ரோட்டில் கீழண்ட வா
8 டை 6 வது நெம்பர் என் பங்களாவை
9 காரணீஸ்வரர் பேரால் ரிஜிஸ்டர் செ
10 ய்து வைத்திருக்கிற படியால் அதில்
11 வரப்பட்ட குட கூலியை ஷ பங்களாவின்
12 மராமத்து சிலவு போக மீதியை
13 காரணீஸ்வரர் பிரம்ம உச்சவசம்
14 செய்வதற்கும் ஷெயூர் செல்வ விநாய
15 கர், ஞான விநாயகர், சுப்ரமணியர்
16 இராமசாமி சந்நிதானங்களுக்கும் நெய்
17 தீபதாம கைங்கர்யத்திற்காக நான் மனப்
18 பூர்வகமாய் ஏற்படுத்திருக்கிறபடியால்
19 இதை என் வம்சத்தாரும் காரணீஸ்வர
20 சந்நிதான தர்மகர்த்தாக்களும் சந்திர சூரி

21 யாளுள்ள வரைக்கும் குறைவில்லா
22 நடத்திக் கொண்டு வரவேண்டியது. இந்
23 த பங்களாவை கோது வைத்த
24 வனும் விக்கிரயம் செய்யவும் கூடாது இந்
25 த தர்மத்திற்கு வில்லங்கணம் செய்
26 யப் பட்டவர்கள் கவர்ன்மெண்டாரால்
27 தண்டிக்கப்பட்டு மீளா நரகத்திற்கு
28 ம் குள்ளாவார்கள்

1887 ஆ
நவம்பர்மீ

இப்படிக்கு
செங்குந்தினர்
வா. சுப்பறாயர்

***35:2***

***இடம்:*** *சைதைவட்டம், சைதாப்பேட்டை திருக்காரணீஸ்வரர் கோயில் மகா மண்டபத்தின் தென் புற சுவர்.*

***காலம்:*** ***4.11.1919.***

***செய்தி:*** *ஆண்டியப்ப முதலியார் மனைவி அம்மாயி அம்மாள் தேர்ப்பேட்டை, குடியம்மன் பேட்டை ஆகிய இடங்களில் உள்ள இரண்டு வீடுகளைக் காரணீசுவரர் கோயில் முதற்கால பூசை வழிபாட்டிற்குத் தந்தமை. ஒரு வீட்டின் வாடகை சரிவர வராததால் ரூ.400/-க்கு விற்று அத்தொகையை தன்பேரில் அடமானம் எழுதி அதன் வட்டி வருவாயைக் கொடுத்தமை.*

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

1 கலியாகாதி ஆ 5021 சித்தார்திரி ஆ ஆனி மீ 20
2 சைதாப்பேட்டை காரணி கிறாமத்திலிருக்கும் செங்
3 குந்த குலம் பி. ஆண்டியப்ப முதலியார் பாரியாள் அம்மாயி அ
4 ம்மாள் 25.6.1912 தேர்ப்பேட்டையில் 53 நெ வீடு 1. குடி
5 யம்மன் பேட்டையில் 4 நெ. வீடு 1. ஆக இரண்டு வீட்டை
6 யும் ஸ்ரீ காரணீஸ்வரர் பேரால் தானப் பத்திரம் ரிஜிஸ்டர்
7 செய்திருக்கிறேன். ஷை 4.நெ. வீட்டில் சரியான வரும்படி
8 வராத்தினால் நான் 29.4.1918 ல் ரூ.400 க்கு விற்பனை
9 செய்து ஷை துகையை ஷை தேவஸ்தானத்தின் பேரால்
10 அடமானம் வாங்கியிருக்கிறேன். ஷை 23. நெ. வீட்டின்
11 வரும்படியினாலும் ஷை துகை வட்டியானாலும் ஷை வீட்

12 டின் மறாமத்து வரிபோக மிகுதியை ஷெ காரணீஸ்
13 வரருக்கு நடந்து வரும் 1 வது கால பூஜை நடத்த ஏற்
14 படுத்தி இருக்கிறபடியால் இதை ஷெ தேவஸ்தான
15 த்தார் சூரிய சந்திரர் உள்ள வரையில் நடத்தி வரவே
16 ண்டியது. ஷெ வீட்டை விற்றொற்றி செய்யவும் ஷெ
17 ரொக்கத்தை பராதினம் செய்யவும் யாருக்கும் ச
18 ம்மந்தப் படமாட்டாது ஷெ தர்மத்தை வில்லங்
19 ஙனம் செய்யப்பட்டவர்கள் கவர்ண்மெண்டா
20 ரால் தண்டிக்கப்படுவதும் தவிர மீளா நரகத்தி
21 ற்காளாவார்கள். இந்தபடிக்கு என் மனப்பூர்வ
22 மாய் எழுதி வைத்த சிலாசாஸனம்

சைதாப்பேட்டை
4.17.1919

இப்படிக்கு
பி. அம்மாயி அம்மாள்.

# 36. வேதாரண்யம் கோயிலில் யாழ்ப்பாணத்தார் கல்வெட்டுகள்

வ. மகேஸ்வரன், இலங்கை

சோழ மண்டலச் சைவத் திருத்தலங்களுள் சிறப்புப் பெற்றது வேதாரண்யம் வேதாரண்யேசுவரர் திருக்கோயிலாகும். பல்லவர் கால நாயன்மார்களான அப்பரும், சம்பந்தரும் இக்கோயில் கதவுகள் திறக்க பதிகம் பாடினர் என்று பெரியபுராணம் குறிப்பிடுகின்றது. அகச்சான்றுகளாக இதனைத் தேவாரங்களும் உறுதி செய்கின்றன. இதன்பின்னர் சோழப் பேரரசர், விஜயநகரப் பேரரசர், தஞ்சை மராட்டிய மன்னர் முதலியோரது காலங்களிலும் இக்கோயில் சிறப்புடன் விளங்கியுள்ளது. கோயில் கருவறைச் சுவர்களிலும் தூண்களிலும் சுற்றாலைச் சுவர்களிலும் காணப்படும் பல கல்வெட்டுக்கள் இதன் சோழர்கால வரலாற்றுச் சிறப்பை உணர்த்துகின்றன.

மேற்படி கோயிலுடன் ஈழநாட்டு யாழ்பாணத்துக்குத் தொடர்புகள் இருந்து வந்துள்ளன. யாழ்ப்பாணத்தவரது முக்கிய யாத்திரைத் தலங்களாகத் தமிழகத்தின் சிதம்பரமும், வேதாரண்யமும் விளங்கி வந்துள்ளன. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்துக்கு முன்பிருந்தே இத்தொடர்பு நிலவி இருக்க வேண்டும். 18ஆம் நூற்றாண்டில் யாழ்ப்பாணத்து நல்லூரில் வாழ்ந்த சின்னதம்பிப் புலவர் வேதாரண்யம் கோயில் மீது மறைசை அந்தாதி என்னும் இலக்கியம் ஒன்றைப் பாடியுள்ளார். வேதாரண்யத்தில் வரணி ஆதீனம் என்னும் மடாலயம் ஒன்று உண்டு. இது 550 வருடங்களுக்கு முற்பட்டது என்று குறிப்பிடப்படுகிறது. யாழ்ப்பாணத்துத் தென்மராட்சிப் பகுதியில் வரணி என்ற ஊரில் வாழ்ந்த தில்லை நாயகத் தம்பிரான் என்பவர் இதனை நிறுவினார் எனக் குறிப்பிடப்படுகிறது. யாழ்ப்பாணத்து கரணவாய் என்ற இடத்தில் வரணி ஆதீனம் நிறுவப்பட்டு அது பின்னர் வேதாரண்யத்திற்கு மாற்றப்பட்டது என்றும் குறிப்பிடப்படுகிறது. இதனுடைய 19வது சந்நிதானம் கதிர்காமப் பண்டாரச் சந்நிதி என்பவர் ஆவர். 20வது சந்நிதானம் செவ்வந்தி நாத பண்டாரச் சந்நிதி ஆவர். தற்போது பொன்னையா பண்டாரச் சந்நிதி என்பவர் இவ் ஆதீனத்தின் தலைவராக உள்ளார். செவ்வந்தி நாத பண்டாரச் சந்நிதிகள் காலத்திலேயே இக்கோயில் புனருத்தாரண வேலைகள் நடைபெற்றிருக்க வேண்டும். இதனால் யாழ்ப்பாணத்தவர் பலர் இக்கோயிலின் திருப்பணியில் பங்குகொண்டு உள்ளார்கள்.

வரணியில் குருக்கள் குடியிருப்பு என்ற பகுதி உண்டு. இங்கு பெரும்பாலும் வீரசைவ மரபைச் சேர்ந்தவர்களே வாழ்கின்றனர். தமிழகத்து வீரசைவரது புலப்பெயர்வு யாழ்ப்பாணத்து வரணியிலும் கிழக்கு

மாகாணமான மட்டக்களப்பில் குருக்கள் மடம் முதலான இடங்களிலும் நிகழ்ந்துள்ளது. வரணி ஆதீன கர்த்தாக்கள் வீரசைவ மரபினராவர். இலங்கை சுதந்திரம் பெறுவதற்குமுன் தமிழகத்துக்கும் ஈழத்துக்கும் இடையேயான போக்குவரத்து சுமுகமானதாகவும் இலகுவானதாகவும் இருந்துள்ளது. இதனால் மறைக்காட்டு தரிசனமும் சிதம்பர தரிசனமும் யாழ்ப்பாணத்தவருக்கு இலகுவாக இருந்திருக்க வேண்டும். யாழ்ப்பாணத்தாரது தொடர்புகள் மறைக்காட்டில் அதிகரித்து இருந்ததற்கான சான்றுகளாக வரணி ஆதீனமும் யாழ்ப்பாணத்தார் தெரு என்ற வீதியும் (இது தற்போது புதுவீதி என அழைக்கப்படுகின்றது) மறைக்காட்டு கோயிலில் காணப்படும் கல்வெட்டுகளும் விளங்குகின்றன.

இக்கோயிலின் மேலைக் கோபுரத்தின் வாயிலிலும் அம்மன் சந்நிதியிலும் கட்டைக்கோபுர வாயிலிலும் காணப்படும் நூற்றுக்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் பலவற்றில் யாழ்ப்பாண மாவட்ட ஊர்ப்பெயர்கள் காணப்படுகின்றன. இவற்றின் எழுத்தமைதி 19ம் நூற்றாண்டுக்கு உரியனவாக காணப்படுகின்றன. கொடையாளியின் ஊரும், பெயரும் சதாசேவை என்ற வாசகமுமே காணப்படுகின்றது. திருப்பணி தொடர்பான தகவல்கள் எவையும் இல்லை. வகைமாதிரிக்கு கீழே மூன்று கல்வெட்டுகள் தரப்படுகின்றன. அதன் கீழ் உள்ள அட்டவணையில் ஊரும் பெயரும் தரப்பட்டுள்ளன. சில பெயர்களின் பதவி நிலை, குழுமம் முதலியன பற்றிய குறிப்புகளும் இடம்பெறுகின்றன. இத்தரவுகள் மறைக்காட்டு கோயிலுக்கும் யாழ்ப்பாணத்தார்க்கும் இடையே நிலவிய தொடர்புகளை ஆய்வு செய்வதற்கான சான்றுகளாக விளங்குகின்றன.

கிழக்குப்புற கட்டைக் கோபுர வாசலில் உள்ள இக்கல்வெட்டுகள்* ஆறு சிறு வரிகளில் அமைந்தவை. இங்கு ஒரே வரியில் தரப்பட்டுள்ளன.

**36:1**

வரணி சோளங்கச்சேனாதார் ய முதலியார் பெண்சாதிகதிரியார்

**36:2**

வரணிமாணிக்கவாசக பண்டாரதின் பிள்ளைசிவப்பிறகாச பண்டாரம்

**36:2**

வரணி சோளங்கச் சேனாதாராயமுதலியார் மகன் விரகத்தியார்

---

கல்வெட்டுகளைப் படியெடுக்க உதவிய தமிழ்ப் பல்கலைக்கழக கல்வெட்டியல் துறை கல்வெட்டு மைப்படி உதவியாளர் திரு. மு. செல்வராஜ், முனைவர்பட்ட ஆய்வாளர் திரு. ஆ. துளசேந்திரன், வேதாரண்யம் வரணி ஆதீன முதல்வர் முதலியோருக்கு நன்றி.

| இடம் | ஊர் | கொடையாளி பெயர் | குறிப்பு |
| --- | --- | --- | --- |
| கட்டைக் கோபுர வாயில் | வரணி | சோளங்கச் சேனாதிராய முதலியார் பெண்சாதி கதிரியார் | முதலியார் என்பது ஒருவருடைய பதவி நிலைப் பெயர். |
| '' | வரணி | மாணிக்கவாசக பண்டாரத்தின் பிள்ளை (மகன்) சிவப்பிராகாச பண்டாரம் | பண்டாரம் என்ற சொல் யாழ்ப்பாண மாவட்டத்தில் வீரசைவ மரபினரைக் குறிக்கும் |
| '' | வரணி | சோளங்கச் சேனாதிராய முதலியார் மகன் வீரகத்தியார் | --- |
| மேலைக் கோபுரம் (வலது ) | சுழிபுரம் | நடுநாயக முதலியார் | --- |
| '' | காரைதீ வு | சிதம்பரநாத முதலியார் | --- |
| '' | வரணி | மாணிக்கச் சித்தர் சின்னவன் | --- |
| '' | வரணி | சேனாதிராய முதலியார் சிதம்பரன் | --- |
| '' | --- | சிதம்பரனார் பெண்சாதி வள்ளி நாச்சி | |
| '' | --- | கைக்குளர் அம்பலவாணர் | கைக்குளர் எனும் சாதிப்பிரிவினர் யாழ்ப்பாணத்தில் வசிக்கின்றனர் |
| '' | வரணி | மளவராய வல்லியர் | மளவராயர் என்பது இக்காலத்தில் சாதி சார்ந்ததாகக் குறிப்பிடப்படுகிறது |
| '' | சுழிபுரம் | கதிர்காமர் பெண்சாதி வேதநாயகி | |
| '' | சுழிபுரம் | முதலியா(ர்) கந்தப்பர். | |
| '' | மூளாய் | சின்னாத்தை முதலிக்குட்டி குணாதன முதலியார் குமரப்பெருமாள் | |

| | | | |
|---|---|---|---|
| '' | பலாலி | மருதர் | |
| '' | மண்டை வேலி | குளந்தையார் மகள் நளத்தியார் | |
| '' | வரணி | நிர்ச்சிங்க வளதரையர் | வளதரையர் அரசியல் அதிகாரத்துடன் தொடர்புடையதா என்று தெரியவில்லை |
| '' | மந்துவில் | சிதம்பர உடையாரும் பெண்சாதியும் | |
| '' | வரணி | பொடுங்கர் சிதம்பர(ர்) | |
| '' | வரணி | பொடுங்கர் அம்பலவர் | |
| மேலைக் கோபுரம் இடதுபக்கம் | சுழிபுரம் | சிதம்பர நாதரும் பெண்சாதியும் | |
| '' | மாதகல் | பெரியைய்ய னான உடையார் | ஆங்கில அரசின் கீழ் கடமை புரிந்த கிராமத் தலைவர் |
| '' | முகாவில் | தியாகர் சிதம்பர உடையார் பனங்காம வன்னிபம் குலசேகர பண்ணவன் | பனங்காமம் என்பது வன்னி பெருநிலப் பரப்பின் பிரிவு இது யாழ் மாவட்டத்துள் அடங்காதது |
| '' | திரு நெல் வேலி | கைக்குள நிலக்குடபூதரும் அவர் பெண்சாதி மயிலாத்தை | |
| '' | வரணி | வரணி இராசிங்க மாபாண முதலியார் சிதம்பரர் பெண்சாதி பொடுங்காத்தை | மாப்பாண முதலி என்பதும் யாழ்ப்பாண இராச்சிய காலத்தில் இருந்து வழங்கி வரும் அரசியல் அதிகார வம்சா வழி யினரைக் குறிக்கும் பெயர் |
| '' | --- | கைக்குளர் சித்திராண்டார் மகன் ஆனந்தன் | |
| '' | கரண வாய் | உடையார் மகன் குள நகையார் | |

| | | | |
|---|---|---|---|
| ,, | உடுப் பிட்டி | குள நகையார் மகன் தொ . . . ன் | |
| ,, | கைதடி | சந்திரசேகர முதலியார் மடந்தை பாகர் பெண்சாதி குள நகையார் | |
| ,, | நவிண்டில் | மயில் நிச்சிங்கர் | |
| ,, | உடுப் பிட்டி | மு.க.கா. கந்தர் | |
| ,, | துன்னா லை | சிதம்பர உடையார் புத்திரன் அளியாரும் கந்தர் மகள் சின்னாத்தையும் | |
| ,, | இடைக் காடு | வேலாயுதன் | |
| ,, | நல்லூரர் | செயம் மருதாத்தை மகள் நழவாத்தை | |
| ,, | மூளாய் | குன்றன் முதலியார் வெள்ளையர் | |
| ,, | மந்துவில் | மயில்வாகன முதலியார் பெண்சாதி பெருமாத்தை | |
| ,, | மந்துவில் | இலங்கை அதிகார முதலியார் | |
| ,, | கரண வாய் | மாப்பாணர் அய்யன் பெருமாள் பெண்சாதி நாச்சிப்பிள்ளை | |
| அம்மன் சந்நிதி பின்புறம் | நல்லூர் | தட்டார் பூதர் பெண்சாதி | தட்டார் என்பது பொற்கொல்லர் |

# 37. காசியில் நகரத்தார் கல்வெட்டுகள்

சு. இராசகோபால், சென்னை.

***37 : 1***

**இடம் :** காசியில் உள்ள விசாலாக்ஷி அம்மன் கோயில் வாயிற் சுவர்.

**காலம் :** பிலவங்க - தை - 25 தேதி *(கி.பி.1908)*

**செய்தி:** கோயில் கும்பாபிஷேகம் செய்தமை.

1 நாட்டுக்கோட்டை நகறத்தா
2 றால் ஸ்ரீ விசாலாக்ஷி கோ
3 யில்த் திருப்பணி செய்து
4 பிலவங்க வருடம் தை மாதம்
5 25வ கும்பா அபிஷேகம்
6 நடத்தியது



***37 : 2***

**இடம்:** மேற்சுட்டிய வாயிற் சுவரின் மறுபகுதி.

**காலம்:** *7.2.1908.*

**செய்தி:** மேலது

1 THIS TEMPLE OF SREE VISALAKSHI DEVI
2 WAS ERECTED BY NATTUKOTAI CHETIY
3 NAGARTHAR AND THE KUMBAVISHAKAM
4 FINISHED ON FRIDAY THE SEVENTH
5 OF FEBRUARY 1908 SUBAM
6 ப்ராசீத்
7 ஸ்ரீ விசா$_0$ லாக்ஷி ஜிகா மந்திர்
8 காசி$_0$




**37 : 3**

**இடம்:** நாட்டுக்கோட்டை நகரத்தார் சத்திரம் உட்பகுதி வாயில் நிலைச்சுவர்.

**காலம்:** *கி.பி.1863 ருத்ரோத்காரி, ஆவணி 10.*

**செய்தி:** அன்னதானமடம் தொடக்கம் பற்றி.

1 உ ருது றோற்காரி ஷு ஆவணி
2 மீ 10 வ நாட்டுக் கோட்
3 டை நகரத்தார் அன்
4 ன தான மடம் கிறக
5 ப் பிறவேசம் வ
6 கலியுகாதி வருடம் 4964
7 யிங்கிலீசு வருடம்
8 1863



# 38. அழகன்குளம் செப்பேடு

எஸ். எம். கமால், இராமநாதபுரம்.

**இடம்:** இராமநாதபுரம் மாவட்டம், அழகன்குளம் வடக்குத்தெருவில் உள்ள தங்கசாமி கோனார் இடம் உள்ளது.

**காலம்:** முத்து ரகுநாத சேதுபதியின் சகோதரர் முத்துவயிரவநாத சேதுபதி சகம் 1631, விகாரி (கி.பி.1710).

**செய்தி:** கிழவன் ரெகுநாத சேதுபதிக்குப் பிறகு சேதுநாட்டை இருபிரிவுகளாகப் பிரித்து முத்துவயிரநாத சேதுபதியும் முத்து விஜய ரகுநாத சேதுபதியும் ஆட்சி புரிந்துள்ளனர். அல்லது ஏதோ ஒரு காரணத்தினால் முத்து விஜய ரகுநாத சேதுபதி ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள இயலாத நிலையில் சேதுபதியாக பதவியேற்ற முத்து வயிரவநாத சேதுபதி என்பவர் சேது நாட்டின் மன்னராக இருந்தார் என்பது உறுதிப்படுகிறது. இதே மன்னர் தொடர்ந்து கி.பி.1711இல் சிறப்பாக இராமாயணப் பிரசங்கம் செய்ததற்காக மேலச்செல்லனூர் சாந்துப் புலவர் மகன் சர்க்கரைப் புலவருக்கு இரு ஊர்களைத் தானமாக வழங்கியுள்ளார். நமக்குக் கிடைத்துள்ள சேதுபதி மன்னர் செப்பேடுகளில் முத்து விஜய ரகுநாத சேதுபதியின் முதலாவது செப்பேடு கி.பி.1713ஐ சார்ந்ததாகும். ஆதலால் இராமநாதபுரத்தில் கிழவன் ரெகுநாத சேதுபதியை அடுத்து முத்து வயிரவநாத சேதுபதி என்பவர் கி.பி.1710 முதல் கி.பி.1712 வரை ஆட்சி புரிந்துள்ளார் என்பதை மேலே கண்ட செப்பேடுகள் தெரிவிக்கின்றன. சேதுபதி மன்னர்கள் சேது மார்க்கத்தில் நடைப்பயணமாக வருகின்ற பயணிகளுக்கு ஆங்காங்கு அன்ன சத்திரம் வைத்து உணவு வசதிகள் செய்ததைப் போன்று சில தனியார்களும் திருமடங்களை நிறுவி பயணிகளின் பயன்பாட்டிற்கு உதவி வந்ததை இந்தச் செப்பேட்டில் குறிப்பிடப்படுகின்ற மூர்த்திமடம் வாயிலாக அறிகின்றோம். இந்தச் செப்பேட்டில் தானம் வழங்கப்பட்ட பின்னாணியாரேந்தல் செவ்விறாக்கை நாட்டு அழகன் குளத்தில் அமைந்திருந்ததாக குறிப்பிடப்பட்டுள்ளது. செவ்விறாக்கை நாடு என்பது இன்றைய இராமநாதபுரத்திற்கு வடக்கே தேவிபட்டணத்திற்கு தெற்காக அமைந்துள்ள பகுதியாகும்.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ மன் மகாமண்டலேசுவரன் அரியராயிர தளவிபாடன் பாசைக்கு
2 த் தப்புவராய கண்டன் மூவராய கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநா
3 டு கொடாதான் பாண்டிமண்டலத் தாபநாசாரியன் சோழமண்டலப்
4 பிறதிட்டாபணாசாரியன் தொண்டமண்டலப் பிறசண்டன் பூறுவ தெட்சண

5 வுத்தர திக்கு சப்த சமுத்திராதிபதி ஈளமுங் கொங்கும் மியாழ்பாண பட்டினமும்
6 கெசவேட்டை கண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுவர
7 ராசமாத்தாண்டன் ராசகுலதிலகன் ராசகெம்பீரன் ராசமனோபயங்கர
8 ன் மன்னரில் மன்னன் மன்னர் கெம்பீரன் துட்டரில்த் துட்டன் துட்டர் த
9 கம்பீரன் துட்டராய கண்டன் உரிகோல் சுல்தானன் நவகண்ட சக்கிர
10 வத்தி மலை கலங்கினும் மனங் கலங்காதான் ஒட்டியர்தளவிபாடன் ஒட்
11 டியர் மோகந்தவிழ்த்தான் துலுக்கர்தள விபாடன் துலுக்கர் மோ
12 கந் தவிழ்த்தான் தொண்டியந்துறை காவலன் ராமனாத சுவாமி காரிய
13 துரந்தரன் தாலிக்கு வேலி அடுத்தாரைக் காத்தான் செங்காவிக் கொ
14 டையான் ஆத்துப் பாச்

-ராமலிங்கம் துணை -

15 சி கடலில்ப் பாச்
16 சி அந்தம்பிற கண்டன் பூலோக துரந்தரந்தன் அறிவுக்கு அகத்தியன் சொல்
17 லுக்கரிச்சந்திரன் வில்லுக்கு விசையன் பொறைக்குத் தருமன் கொடைக்குக்
18 குமணன் ஸ்ரி மல்லி காச்சுன மகாராயர் சிக்கராயர் சீரங்கராயர் ஆ
19 னைகுந்தி வேங்கிடபதிராயர் புசபெலராயர் அசுபதி கஜபதி நரபதி இர
20 ணியகெற்ப சுதாகரனான சேதுபதி நா லுகாற் பீடத்திருந்து பிறிதிவி
21 ராச்சியம்பண்ணி யருளாநின்ற கலியுக சகார்த்தம் 1631 ந் மேல்
22 செல்லா நின்ற விகாரி வருஷம் ... உத்தராயணத்தில் வசந்த
23 ருதுவில் வைய்யாசி மாசத்தில் சுக்கல பட்ச சதுர்த்தி வி
24 ரித்தியில் ரேபதி நட்செத்திரமும் சுபையோக சுபகரணமும் பெத்த பு
25 ண்ணிய தெனத்தில் துகவூர்க் கூற்றத்தில் காத்தூரான குலோ
26 த்துங்க சோளநல்லூரில் கீள்பால் விரையாத கண்டனிலிரு
27 க்கும் இரணிய கெற்பயாதி ரகுனாதச் சேதுபதியவர்கள் குமா
28 ராகிய முத்துவிசைய ரகுனாதச் சேதுபதியவர்கள் சகோ
29 தரரான முத்துவயிரவநாதச் சேதுபதியவர்கள் மூர்த்திமடத்துக்
30 குச் செவ்விருக்கை நாட்டில் அழகன் குளத்தில்ப் புரவில்
31 என் குட்டத்துக்குக் கீழ்கரைக்குக் கிழக்கு தாவுச் செய் தென்வரப்பு
32 க்கு தெற்கு சிங்கனுடையான் குளத்துக்கு மேற்குச் சேதுப்பாதைக்கு வடக்
33 கு இன்னான்கெல்லைக் குள்பட்ட பின்னாணியாரேந்தல் தா
34 ம்பிற சாசனமாகக் கட்டளையிட்டோம் சந்திராதித்தவரை
35 சந்ததிப் பிறவேஷமாய் ஆண்டு அனுபவித்துக் கொள்ளக் கட
36 வராகவுமிந்தத் தர்மத்தை யாதாமொருத்தர் பரிபாலனம் பண்
37 ணினபேர்களுக்கு காசி சேதுவில் ஆ
38 யிரம் விறும பிறதிஷ்டை ஆயிரம் சிவலிங்கப் பிறதிஷ்டை
39 யும் கோடிலிங்க தானமும் லட்சங் கோதானமும் பண
40 ணின பலன் பெற்று[டு] ழி வாழக்கடவராகவும் விற்கின்னம்
41 பண்ணின பேர்கள் கெங்கைக்கரையிலே காராம்பசுவை
42 க் கொன்ற தோஷத்திலேயும் பிரம்மத்தை வதைத்த பாவத்தினுமே
43 லயும் போகக் கடவராகவும் இந்த சாசனம் எழுதினேன் அந்த
44 நாலங்கராய ரகுநாதபிள்ளை குமாரன் கந்தசுவாமி எழுத்து ராயசத்திர
45 படிக்கு ஆனந்தநாத நாலங்கராயன் மகன் வெள்ளை நா
46 லங்கராயன் கையெழுத்து உ

# 39. நாஞ்சியூர் செப்பேடு

கி. ஸ்ரீதரன், சென்னை.

**இடம்:** புதுக்கோட்டை மாவட்டம், நாஞ்சியூர்.

**காலம்:** கி.பி.1734 புதுக்கோட்டை மன்னர் ஸ்ரீ விஜய ரெங்க சொக்கநாத ராமசுவாமி தொண்டைமான்

**செய்தி:** புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள நாஞ்சியூர் என்ற ஊரை நமணராய சமுத்திரம் என்று பெயரிட்டு, அவ்வூரை அக்கிரகாரமாக மாற்றி பிராமணர்களுக்கு அளித்ததைச் செப்பேடு கூறுகிறது. நீளம் 55 செமீ அகலம் 27 செமீ கொண்ட இச் செப் பேட்டின் தலைப்பகுதியில் திருமாலின் வாமன வடிவமாகக் குடை ஏந்திய சிறு வடிவம் பொறிக்கப்பட்டுள்ளது. பிராமணர்களுக்கு அளிக்கப்பட்ட கொடை ஆதலால் திருமாலின் வாமன அவதாரம் பொறிக்கப் பட்டிருக்க வேண்டும். அளிக்கப்பட்ட கொடை 50 பங்காகப் பிரித்து அளிக்கப்பட்டுள்ளது. அளிக்கப்பட்டவர்களின் பெயர்களும் பொறிக்கப்பட்டுள்ளன. அதற்குக் கீழே ஸ்ரீராம ஜயம் எனத் தெலுங்கு எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ மகாமண்டலே
2 லசுவர அரிய விபாடன் பாஷெஷ
3 க்குத் தப்புவராய கண்டன் மூவராய கண்டன்
4 கண்டர் கண்டன் தண்டைய பிறதாபன் கட்டாரி
5 ச் சாளுவன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு
6 கொடாத னொரு பரி கொண்டு திரள் பரி வேட்டமுடை
7 ய குலோத்துங்கன் எம்மண்டலமும் கொண்டு யீழமு
8 ந் திரை கொண்ட ராசாதிராசன் ராசமாற்த்தாண்
9 டன் ராசகண்டீரவன் கோட்டத்து மன்னியர்கள் சோர் மன்னிய
10 ரவன் கெடி மன்னியர் காலாந்தகன் தொண்டை மண்டல ஸ்
11 தாபாணாச்சாரியன் சோழமண்டல பிரதிஷ்டாபானாச்சாரியன்
12 பாண்டி மண்டலத்து பிரிதிஸ்டாபானாச் சாரியன் மறுமண்ண
13 யார் கோடாரி குறுமண்ணியர் கோளரி ஒட்டியர் தள
14 விபாடன் ஒட்டியர் மோகந் தவிழ்த்தான் துலுக்கர் மோகந்தவிள்த்தான் ப
15 டை கண்டு தத்தளிப்பார்கள் மிண்டன் பஞ்சப
16 ரணாவதாரள் தற்க்காற்குறதறகன்க விநே
17 ாதன் தண்டுவார் மிண்டன் சண்ட பிறசண்டன் புறு
18 வ தெட்சணப் பூமி உத்தரசத்த சமுத்திராதிபதி அசு
19 ப்பதி கெசபதி நரவேட்டை கண்டருளிய மல்லிகா

20 ர்சுன தேவமகாராயர் பிறபுட தேவமகாராயர்
21 னை குந்தி தேவமகாராயந் கிஷ்ணதேவ மகாராயர்
22 ராமதேவ மகாராயர் விருப்பாச்சி தேவமகா
23 ராயர் சீரங்க தேவ மகாராயர் பிறுதிவிரா
24 ச்சியம் பண்ணியருளா நின்ற சாலியவாக
25 ன சகாப்த்தம் 1656 மேல் செல்
26 லா நின்ற ஆனந்த ஷு சித்திரை மீ 26 அட்சய தி
27 றிதியையும் புதன் கிழமையும் ரோகிணி நட்சத்திரமும் கூ
28 டின சுபதினத்திலே ராசராச வளனாடு ராசேந்திர சோ
29 ழ வழநாடு பன்றி சூழ்நாடு அன்பில்த் தெற்கூரிலிருக்கும்
30 யந்திர குலோத்துங்கனான காணியுடைய அரையமக்க
31 ளில் ராயரால் பெர்பெத்ந ஸ்ரீமநுராய தொண்டைமானார் பே
32 ரனாராய ஸ்ரீ ரெங்க கிஷ்ண முத்து வீரந் மன்ன தொண்டைமானா
33 ர் குமரானான ஸ்ரீ விசையரெங்க சொக்கனாத ராமசு
34 வாமி தொண்டைமானார் அக்கிறகார தான சாசனம் பண்
35 ணிக் குடுத்தபடி நம்முடந் கெட்டனாசிரெங்க கிஷ்ணமுத்து வீரந் மன்
36 ன தொண்டமானார் பேரிலே சொல்ல நமக்கு சொந்தமாக நடக்
37 கிற நாறுத்தாமலைச் சீமையில் சேறுவாசி நாட்டில் வள
38 நுகும் நாஞ்சியூரை நமனராய சமுத்திர மென்று பிறுதி நா
39 ம்மாகப் பண்ணித் தேவதாயமுள்பட்டப் பங்கு 50 மனை 50
40 சகிரணியோதக தாராபூருவமாகக் குடுத்தபடியினாலே யிந்த
41 நாஞ்சியூர் நஞ்சை புஞ்சை நாற்கெல்லைக்குள்ப்பட்ட மாவடை
42 ட மரவடை கோசஞ்சார பூமிசல்மாறாக பூமிந்தி நிக்ஷேபஜன
43 திருபாஷாண அக்ஷிண ஆகாமி சித்த சாஸித்திய அஷ்ட போக
44 சுவாமியங்களும் சறுவமானியமாக புத்திர பவுத்திரபார
45 ம்பரியமாக ஆசந்தார்க்குமாக தானாதி வற்கிறிய வனிம
46 யொக்கியமாக அனுபவித்துக் கொள்ளவும் யிந்தப் பங்
47 கு 50 க்கும் பாகை விபரம்.
48 நமனராய சமுத்திரம் கீன சங்கை பங்கு 50 பேருவழி
49 வாத்தியார் வைத்திய அய்ய பங்கு - 1
50 உதையாத்திரி காத்தியார் பங்கு - 1
51 விசுபதி காத்தியார் பங்கு - 1
52 ரெங்கய்யன்மார் பங்கு - 1
53 புரோகித வைத்திய அய்யன் பங்கு - 1
54 சீத்தாராம அய்யன் பங்கு - 1
55 கோகருண்ணா சாத்திரியார் பங்கு - 1
56 அய்யப்பரசாபய்யன் பங்கு - 1
57 வேங்கிட்டராயர் ரெங்கய்யன்கார் பங்கு - 1
58 ஆதிநாறாயணப்பய்யன் பங்கு - 1
59 திருமலையறாமய்யன் பங்கு - 1
60 ராயசம் ரெங்கய்யன் பங்கு - 1

61 ராமய்யன்கார் பங்கு - 1
62 ஆந்தை ரெங்கய்யன் பங்கு - 1
63 தின சேரி ராமசுவாமிய்யன் - 1
64 சீட்டு நாறப்பய்யன் - 1
65 காந்த பதானி சுப்பய்யன் - 1
66 லெசிர வெங்கிட்டாரய்யன் - 1
67 ரம பிங்கய்யன் - 1
68 வீணை அய்யவாரய்யன் - 1
69 திருவமுடையார் பாஷராய - 1
70 வெங்கிட்ட நரசிங்கய்யன் - 1
71 தனுசுகோடி அய்யன் - 1
72 பூசை ரெங்கய்யன் பங்கு - 1
73 தேவதாயம் - 1
74 ராமச்சந்திரிய்யர் பங்கு - 1
75 வெங்கிட்டையர் பங்கு - 1
76 நத்தம சீனிவாசமம் மாசிரியர் பங்கு - 1
77 தன்மாசாரியார் பங்கு - 1
78 குப்பர் பட்டாசாரி பங்கு - 1
79 சோனாத்திரி சாத்தியார் - 1
80 சின்ன கிஷ்ணயன்கார் - 1
81 சிங்காச்சாரியார் பங்கு - 1
82 வெங்கடாசலய்யன் பங்கு - 1
83 கோபாலசாமி அய்யன் பங்கு - 1
84 அழகிரி அய்யன் பங்கு - 1
85 சூரிய நாராயண அய்யன் - 1
86 தச்சாணி ராமய்யன் - 1
87 வேங்கை வெங்கிட்டயன் நாராயணன் - 1
88 சீட்டு வேங்கடாசலமய்யன் 2
89 ராணுவ நாறாய்யன் 1
90 ராமா பண்டிதரய்யன் -1
91 துக்கை பூசை ராயரங்கய்யன் 1
92 பூசை சேஷ கிறி நாரண பட்டந் 1
93 ராயபுரம் தருமி அய்யன் பங்கு 1
94 சுப்பையர் பாவுதற் பங்கு 1
95 புல்லதரு வேங்கிடாசாமி 1
96 பூசை முத்தய்யன் பங்கு 1
97 ரெங்க யோகி யய்யன் பங்கு 1
98 ஆகக் கிணசங்ன பங்கு 1

**பின் பக்கம்**

ஸ்ரீ ராம ஜயம் (தெலுங்கு)

99 தான பாலனயோர் மத்யே தானாச்ரேயா னுபாலனம்
100 தானார் ஸ்வர்க மவாப்னோதி பாலநாதச் யுதம் பதம்
101 ஸ்வதத்தம் பரதத்தம் வா பூமிம் விப்ரஸ்ய யோஹரேத்
102 ஷஷ்டர்வர்ஷ ஸஹஸ்ராணி விஷ்ட்டாயாம் ஜாயதே க்ருமி :
103 இந்த தர்மத்துக்கு யாதாமொருவன்
104 விகாதம் பண்ணாகு
105 றான் அவன் கெங்கைக் கரையிலே நல்லபிராமண
106 னையும் காராம் பசுவையும் கொன்றதோஷத்தி
107 லெ போவான்.





# 40. செவ்வாய்பேட்டைச் செப்புப்பட்டயம்

ப. காசிலிங்கம், சேலம்.

**இடம்:** செவ்வாய்பேட்டை சின்ன எழுத்துக்காரத் தெருவில் உள்ள ஸ்ரீபிரசன்ன வெங்கடேசப் பெருமாள் கோவில்.*

**காலம்:** சக ஆண்டு 1762 சார்வரி (கி.பி. 1840)

**செய்தி:** 36.5 செ.மீ, அகலம் 23 செ.மீ, எடை 1250 கிராம், முன்பக்க வரிகள் 39, பின் பக்க வரிகள் 36. தலைப்பகுதியில் வேல் போன்ற அமைப்புடையது. இதில் வைணவ சின்னங்களான திருச்சக்கரம், திருநாமம், சங்கு உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இதில் உள்ள துளையில் உறுதியான செம்பு வளையம் கோர்க்கப்பட்டுள்ளது. சேலம் புதுப்பேட்டையைச் சேர்ந்த 18 வண்ணத்தார் (வணிக சாதியார்) ஒன்று கூடி இப்பட்டயத்தை உருவாக்கியுள்ளார்கள். இப்பட்டயத்தை எழுதியவர் அழகப்பன். பிரசன்ன வெங்கடேசுவரர் சுவாமிக்கு பூசை செய்யும் ஸ்தானிகர் சேமைய்யன் குமாரன் ராமய்யன் சுவாமியாருக்கு இப்பட்டயம் எழுதி அளிக்கப்பட்டுள்ளது. மேற்படி 18 வண்ணத்தாரும் தாம் செய்கின்ற தொழிலாலோ வியாபாரத்தாலோ பெறுகின்ற வருமானத்தில் ஒரு பகுதியை சுவாமி காரியத்திற்கு கொடுக்க வேண்டும் என்பது இப்பட்டயத்தின் முக்கிய நோக்கமாகும். பட்டயம் 18 வண்ணத்தார் என்று குறிப்பிட்டிருந்தாலும் 11 வண்ணத்தார் பெயர்கள்தான் குறிக்கப்பட்டு உள்ளன. அவர்கள் முறையே,

1 வலங்கையார்
2 தொழுவ நாயக்கபாடிகள்
3 கன்னடியர்
4 வெள்ளாஞ் செட்டியார்
5 குச்சலியர்
6 பட்டு நூல் செட்டியார்
7 பத்துமசாலியர்

---

* இந்த செப்பேட்டை கொடுத்தவர் : திரு. மு. ராசா (உரிமையாளர் திருமுருகன் எலக்ட்ரிக்கல்ஸ்), நாமக்கல். இச்செப்பேடு படிக்க உதவியவர்கள் : திரு வெ. இரா. துரைசாமி, திரு. நா. குமாரசாமி, கூட்டுறவு சார்பதிவாளர் (ஓய்வு) ஆகியோருக்கு நன்றி.

8 சேடர்
9 சேனக் குடையர்
10 சிவனடியார்திருவிளக்கு குடி
11 நாடார்

சுவாமிகாரிய செலவுக்காக வரி விதிக்கப்பட்ட பொருள்கள் நதிஷ்டம், ஜவுளி, நெடுமுலம், சிகப்புநூல், புகையிலை, பாக்கு, மிளகு, பூண்டு, தவசம் (தானியம்) மற்றும் சில்லறைப் பொருள்கள். சில்லறைக் கடை, ஜவுளிக்கடை, ஆமணக்கானக்கடை இவைகளுக்கு மாத வரி வசூலிக்கப்பட்டது. எழுத்து (ஓவியம்) மற்றும் நகைக்கூலிப் பெறுபவர்கள் பத்துப்பணத்துக்கு ஒரு காசு செலுத்த வேண்டும் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது.

## செப்பேடு

ஸ்ரீபிரசன்ன வெங்கடாசலபதி சகாயம்.

சுவாமியாருக்கு மகமைப் பட்டயம் எழுதிக் குடுத்த சாசனம். ஸ்ரீமது ஸ்வஸ்தஸ்ரீ மகா மண்டலேசுவர அரியதளவிபாசாக்கி தப்புவராயகண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு குடாதான் இம்மண்டலமு யீளமுந் திறை கொண்டருளிய ராசாதிராசன் ராச பரமேசுபரன் ராச மாற்தாண்டன் ராசாக்கள் தம்பிரான் றணமுகத்துக்கு வீரன் ராச கோலாகலன் ராச கெம்பீரன் பூமண்டலாதிபன் பூலோக னாமகன் புரந்தர சவுந்தராதிபன் சொல்லுக்கு அரிச்சந்திரன் வில்லுக்கு விசையன் மல்லுக்கு பீமன் பொருமைக்கு தருமரு குகத சோழன் குடைக்கு கற்ன்னன்

இப்படி நீதி நெறி தவறாமல் செங்கோல் வழுவாமல் றாச்சிய பாறம் நடத்திக் கொண்டு வருகிற காலத்திலே புசபலராயர் வல்லாளராயர் கதம்பறாயர் கஷ்தூரிறாயர் வீரவசுந்தறாயர் இப்படி றாச்சிய பாறம் நடத்திக் கொண்டு வருகிற காலத்திலே சாலிய வாகன சகாத்தம் கலியுகம் 4762 மேல் செல்லாநின்ற காலத்திலே மயிசூர் ராசா திரிகிஷ்ணராசுடையார் காரியத்து முகற்த்தனாகிய சேலஞ் சென்னராசா வய்யனவர்கள் நாளயில்லே சாறுவரி ஸு ஆவணி மீ 2 தெசமி 56 னாழிகை சுபனாம யோகம் 30 னாழிகை பாலவாகறண 22 னாழிகை அவுட்ட நட்சத்திறம் 15 நாழிகை பிறயோற்ப்பதினாள் இந்த சுப தினத்தில் புதுப்பேட்டையில் எழுத்துக்காற வீதியில் எழுந்தருளிய பிறசன்ன வெங்கிடேசுபர் சுவாமியாருக்கு பூசைபண்ணுகிற ஷ்தானு சேமய்யன் குமாரன் ராமயன் சுவாமியாருக்கு தேசம் பதினெட்டு வண்ணத்தாரும் கூடி மகமை பட்டயம் உண்டாக்கி குடுத்த விபரம்



வலங்கையாரில் சேலம் னாகி செட்டியார் சீரங்க செட்டியார் முகுந்தய்ய செட்டியார் பாலய வறதப்ப செட்டியார், தொழுவநாயக்க பாடிகளில் சித்தப்ப செட்டியார் தினா செட்டியார் ஆதிமூலமாங்கப்ப செட்டியார் திருப்பணி செட்டியார், கன்னடிய நஞ்சைய செட்டியார் வீறன் செட்டியார் சீரங்க பட்டணம் கொள்ளேபாலம் வீறண செட்டியார் கொள்ளுநாங்கப்ப செட்டியார்,

வெள்ளாஞ்செட்டிகளில் வசந்தராய செட்டியார் ஆண்டா செட்டியார் தாதி செட்டியார், குச்சலிய கெங்கராயன் தயறாமயன், பட்டுனூல் புட்டா கிஷ்ண செட்டியார் அம்மாபேட்டை வசந்த செட்டியார் ஏகாம்பற செட்டியார், பத்துமசாலயுரில் கிஷ்ண செட்டியார் கோவிந்த செட்டியார், சேடரில் அய்யங்காரு செட்டியார் தாமோதர செட்டியார், சேனக் குடையாரில் சிவத்தா செட்டியார், சிவனடியார் திரு விளக்கு குடியில் சேலம் தித்தா செட்டியார் சந்திரமாலை செட்டியார் அரிய புத்திர செட்டியார், னாடார் முத்துக் கருப்ப செட்டியார் வேறியஞ் செட்டியார் சேலம் நாம கிஷ்ணயன் வெங்கிடபதி செட்டியார் பிச்ச செட்டியார் பின்னையும் பலரும் பதினெட்டு வண்ணத்தாரும் கூடி இந்த சுபதினத்திலே பிறசன்ன வெங்கடேசுபர் சுவாமியாருக்கு மகமை பட்டயம் எழுதிக் குடுத்த விபரம் நதிஷ்ய பொதிக்கு விசை 1/4 வெரும் பொதிக்கு விசை 1/4 சவுளிப் பொதிக்கு பணம்* 1/2 நெடுமுளப் பொதிக்கு பணம் 3/8 செகப்புனூர் பொதிக்கு பணம் 1/4 புகயிலை பொதிக்கு பணம் 3/8 பல சறக்குப் பொதிக்கு பாக்கு மிளகு பூண்டு எப்பேறபட்ட பொதிக்கும் பணம் 3/8 தவசப் பொதிக்கு பணம் 1/16 உப்புப் பொதிக்கு பணம் 1/5(?) சில்லரைக் கடைக்கி மாசம் பணம் 3/8 சவுளிக்கடைக்கி பணம் 1/4 ஆமணக்காணத்துக்கு சேருவ எழுத்து நகை யாதாமொரு வாகாயக்கம் பண்ணினாலும் பத்துப்பணத்துக்கு ஒரு காசு வீதம் தடுக்கித்து இந்தப்படி சம்மதிச்சுப் பதினெட்டு வண்ணத்தாரும் எழுதிக்குடுத்தது புத்திர பவுத்திர பரியமாயி சந்திர சூரியர்கலுங் காவேரியுள்ள மட்டும் இந்த தற்மத்தை யாதாமொருவன் இடைகூரு செய்தானாகில் அவனுக்கு சொக்கம் புத்தியீர்லோ பரலோகம் வைகுண்டம் கெடையாமல் கங்கைக் கரையிலே காறாம் பசுவை கொன்ற தோஷத்திலே போகக்கடவேறகவும் காசி றாமேசுரத்துக்கு போற பிறாமணனை கெற்ப ஸ்த்திரியை கொண்ண தோஷத்திலே போகக் கடவேறாகவும் இந்த தற்மத்தை மனசிலே வச்சு நடத்தி வந்த பேர்கள் வங்கிஷம் பரிபாலனமாயி அஷ்ட்ட அசுபிறிய வந்தார் பூலோகத்திலே வாழ்ந்து சுகமாயிருக்க கதவேறாகவும் இந்த தாம்பிற சாசனம் எழுதின நன்மைக்கு அழகப்பன் எழுதின சாசன பட்டயம் பிரசன்ன வெங்கிடாசலபதி சகாயம். குரு கடாஷம் முண்டாகதாகவும் உ கூலி எழுத்துக்காரர் மாசம் மத்தியானம் சம்பளம் உண்டானது. சம்பள மேனாக்கி குடுக்க கடவேறாகவும் வெங்கிடாசலபதி சகாயம்.

---

* ப என்னும் குறியீட்டில் காட்டப்பட்டுள்ளது.

# 41. மேல்சேவூர் நாயக்கர் கல்வெட்டு

கோ. உத்திராடம், சென்னை.

**இடம்:** விழுப்புரம் மாவட்டம் செஞ்சிவட்டம் மேல்சேவூர் நல்ல தண்ணி குளம் தென்பகுதிப் பாறை.*

**காலம்:** கி.பி.16-17ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** நல்லமங்கை நாச்சியாருக்கு சுக்கிரவார பூசைக்கு நிலம் கொடுத்தது.

1 கீலக வருடம் பங்குனி மாதம் 15 சேவூர்
2 நல்லமங்கை தாயாற்கு ஙளட்டுநாளைசி சுக்கிரவார பூசை
3 க்கு மாச்சிநாயக்கர் புண்ணியமாக ஈருக்கு இயத்து நாயக்கர்
4 உபையமாக கட்டளை விட்டநிலம் அய்யனார் கோயில் முன் ஓடை
5 நஞ்சையும் புன்சையும்

---

* தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை மாணவர் திரு. ச.வெங்கடாசலம் தகவல் தந்து படியெடுக்க உதவினார்.

# 42. உடன்படிக்கை ஓலைகள்

மா. செந்தில் செல்வக்குமரன், பாளையங்கோட்டை.

**42 : 1**

**இடம்:** சேரன்மகாதேவி ஊரைச் சேர்ந்த திரு.எம்.இ. முகமது அலி வசம் உள்ளது.*

**காலம்:** 1837.

**செய்தி:** ஏழு ஓலைகளைக் கொண்டுள்ளது. இருபக்கமும் எழுதப் பட்டுள்ளது. செய்தி தமிழிலும், கையெழுத்து அரபு மொழியிலும் உள்ளன. சையது முகமது யூசுபு என்பவர் தஞ்சாவூர் சீமையைச் சேர்ந்த அமத்தீசுரம் என்ற கிராமத்தில் பள்ளிவாசல், மகலம், பள்ளிக்கொல்லை, பாவுவெளிக் கொல்லை, வீடு, தோட்டம் ஆகியவைகளை உண்டாக்கியுள்ளார். அதில் ஒரு பகுதியை தன்னுடைய மகளுக்கு சீதனமாக வழங்கியுள்ளார். மேலும் அந்த பள்ளிவாசலினுடைய நிலைமையும், காணியாட்சி மாற்றிக் கொடுக்கப்பட்ட செய்தியினையும் இவ்வேடுகள் தெரிவிக்கின்றன.

1 விசற்த்தி ஞூ [10]12 இதுக்கு யெகவிளம்பி ஞூ தை மீ [18]இல் தஞ்சாவூர் சீமையை அமத்தீசுர மகலி காணியாஷ்ச்சிக்காறானான்ாகிய சயிது மகமது யிசுபு என் குமாரன் சயிது பகுற்

2 தீனுக்கு னான் யெழுதிக் குடுத்த யிபத்து பகீசு குடுக்குமிடத்தில் மேப்படிஅமத்தீசுவரம் பள்ளி வாசல் மகலம் அதைச் சேந்த சுத்துப்பட்டு கிறாமத்து மகலம் பள்ளிக் கொல்லை பாவு கெளிக்கொ

3 ல்லை வீடு தோட்டம் அடங்கலும் னான் உண்டாக்கி அனுபவிச்சு வந்ததில் நெட்டப்பாவு மகமதுக்கும் யென் பொண்ணுக்கும் னான் குடுத்த பள்ளிவாசல் கிணத்து தெற்கு படுகைக்கு வடக்கு மேல் படுகை

4 க்கி கிழக்கு வெளி நடப்புக்கு மேற்கு யிந்த நாலு சதிரத்துக்கு உட்பட்ட நிலமும் சுத்துப்பட்டுக் கிறாமத்து வருமானத்தில் மூணிலெ ரெண்டு பங்கு அவனுக்கு போக ஒரு பங்கு எனக்கு சேந்ததும் இதுக்கெல்லாம்

5 நான் அனுபவிச்சு வந்த மகலம் நான் யிவ்விடம் வரும் போது என் மகன் மகமது சரீபை அந்த மகலத்தில் வைச்சுப் போட்டு நான் யிவ்விடம் வந்த பின்பு அவன் காயீலாவாய் யிவடம் வந்து மவுத்தாப் போனான் பி

6 ற்ப்பாடு அந்த மகலம் ஆளுகுறதுக்கு என் பிள்ளைகளில் சயிது அபுதல்

---

* இச்சுவடிகளை அறியவும் படிக்கவும் உதவிய பாளையங்கோட்டை திருவாளர் செ. முத்துகனி, பே. அருண்பிரசாத், ஆகியோருக்கு நன்றி.

காதர் சயிது யாசீன் சயிது மகமது சயிது சுலுத்தான், யிவாளில ஒருவரை அவடம் போகச் சொன்னால் [illegible] ரூப்டபைக் காட்டு மக

7 ல தங்களுக்கு அக்கரையில்லை யென்று சொல்லிப் போட்டதின் பேரில் நீ அவடம் போகுறதாச் சம்மதித்து என்னை கொண்டபடியினாலே ஒனக்கு ஷெ மகலம் நான் அனுபவிச்சு வந்த மேலெழுதிய படிக்கி பள்ளி

8 க் கொல்லை பீற வெளிக் கொல்லை வீடு மனை தோட்டம் மகலம் மத்துமுள்ளதும் உனக்கு என் சம்மதியும் பேரில் யிபத்து பக்குவசாய் குடுத்துவிட்டேன் நீனும் சம்மதித்து வாங்கி கொண்ட படியினாலே நீனும்

9 உன் பிள்ளைகள் தலைமுறைக்கு ஆண்டு அனுபவிச்சு கொள்ளவும் மத்தபடி எனக்கும் என் வாரிசாய் அனந்தகாரருக்கும் காவுக்கும் உன்னை தவிர மத்தவாளுக்கு சுவந்திரிக்கம் யென் ணெண்ணைக்கும் அக்கரை

10 யில்லை யின்ன தேதி முதல் கொண்டு மேலேழுதிய படிக்கி நீனெ ஆண்டு அனுபவிச்சு கொள்ளவும் மேலும் அமுதீசுரம் பள்ளிவாசல் பேருக்கு செட்டிலிங்கம் கிராமத்தில் நஞ்சை நிலம் 10 லியும்

11 சாரி ஆகி சிறுதுநாளைக்கி பிற்ப்பாடு பந்தாகி போனதுக்கு அதற்காக னான் உண்டாக்கி யிருகுற பாச்சி மாசநம் அதுவும் ஒன்றுக்கே யிபத்து பக்கு சீசாயாயி குடுத்து விட்டேன் நீனெயெடுத்துக் கொண்டு ஆண்டு

12 அனுபவிச்சு கொள்ளவும் யென் தமையமாற்கள் யென் பேருக்கு யெழுதிக் குடுத்து யிருக்கிற ஆதரவுகளும் மத்தவர் ஆதரவுகளும் உன்னிடத்தில் குடுத்துவிட்டேன் நீனே வைத்து ஆண்டு அனுபவிச்சு கொண்

13 டு சொகத்திலே யிருக்கவும். இந்த படி யென் மனோராசீயாய் உனக்கு யெழுதி குடுத்த யிபத்து பக்குசீசு சையி எழுதின நம்மைக்கி வெள்ளுர் அசன் பாயிராவுத்தன்.

யிந்த கீரல் சாஷ்ச்சி அபத்தீசுரம் நாட்டாமை பீற்மமது றாவுத்தர் யிந்த கீரல் சாஷ்ச்சி ஷெயூர் சின்னப்பா றாவுத்தர் யிந்த கீரல் சாஷ்ச்சி கறத்தையா றாவுத்தர் சாஷ்ச்சி கையெழுத்து அபுபக்கர் றாவுத்தர் யிந்த கீரல் சாஷ்ச்சி சுல்தான் லெப்பை பீர் முகமது அறிவேன் யிப்படிக்கு குலமாலை கறச்சாற் அபுதுற் றகிமான் அறிவேன்

***42 : 2***

1 எறவிளம் ஷு தையி மீ 1ல் தஞ்சநகர் சீமை அமத்தீசுறம் காணியாசக்கி லெப்பை சயிது மகமது யீசுபு சாய்பு குமாரன் சயது புகுர்தீன்

2 சாய்பு அவர்களுக்கு ஷெ அமத்தீசுறம் நாட்டாமை பீறுமகமது றாவுத்தர் அபுபக்கர் றாவுத்தற் சின்னப்பா றாவுத்தற் படேசா ராவுத்தற் யிபிராயி றாவுத்தற்

3 மத்து முண்டான சாமித்து அனபேரும் தங்களுக்கு யெழுதிக் குடுத்த வாக்கு ஒப்பு உடம்பிடிக்கை குடுக்குமிடத்தில் தங்கள் தொகப்பனார் நெடுநாளாய் ஷெ மகலம் காணி

4 யாஷ்ச்சியை ஆண்டு அனுபவிச்சு வரச்செ அவற் தமையன்மார்கள் சுலுத்தான் லெப்பை சயிது உசேன் லெப்பை யிவாள் யிருபேரும்

தொப்பனார் பட்ட

5 கடனில் தங்கள் ரெண்டு பங்கு கடன் குடுக்க திறுவாகமில்லாமல் அந்தக் கடனுக்கு யீடாய் ரெண்டு பங்கு மகலம் பள்ளிக் கொல்லை பீறவெளி கொல்லை வீடு

6 மத்துமுள்ளதும் உங்கள் தொகப்பனாருக்கு கிறெயமாய் யெழுதி குடுத்து விட்டார்கள் வேலூர் சயிது மகம்மது லெப்பையும் தன்னுடைய பங்கு மகலம் மத்துமுள்ளதும்

7 தங்கள் தொகப்பனாருக்கே தானே யெழுதிக் குடுத்து விட்டார் ஆக பங்கு மூனும் யுங்கள் தொகப்பனார் பங்கு ஒண்ணும் யிந்த நாலு பங்கும் யுங்கள் தொகப்பனாரே

8 ஆண்று அனுபவிச்சு வரச்செ அவர் வடக்கே நபாபு சாய்பு யிடத்தில் மானியம் சம்பாதித்து அந்த வருமானத்தில் பள்ளிக் கொல்லை தெற்க்கு கொல்லையில் அவர் மருமகன் நெட்ட

9 பீறமகமதுகு குடுத்த நிலம் போக மத்த பள்ளிக் கொல்லை மேல்படுவை வடக்கு கொல்லை தெற்குப்படுவை மனைக்கொல்லை பீறவெளிக் கொல்லை யிது பாழாய் கிடந்த

10 தை வேலியுண்டாக்கி கூலி ஆள் மூலமாய் செடி மரங்கள் வைத்து அதை காப்பாத்தி அதை ஆண்டு அனுபவிச்சு வரச்செ அவர் குமாரன் மகமது சரீபை அந்த மகலத்தில் வையித்து

11 அவரும் யிவடம் வந்து மவுத்தாய் போன படியினாலே ஷெயூருக்கு லெப்பை வேணுமென்று நாங்கள் யும்முட தொகப்பனாரை கேட்டதின்பேரில் அப்போ தாம் சம்மதித்ததின் பேரில் யுங்கள் தொகப்பனார் ஷெமகலம் மத்துமுள்ளதும் அனுபவிச்சபடிக்கி தமக்கு

13 அவற் யெழுதிக் குடுத்து விட்டு தாமும் சம்மதித்து ஷெமகலம் முழுதும் தோட்டங்களும் வாங்கிக் கொண்டபடியினாலே தங்களுக்கு யிச்சைபடிக்கி யாராகிலும் தமக்கு துணையாய்

14 வைத்துக் கொண்டு ஷெ மகலமும் தோட்டங்களும் வீடும் நீரே ஆண்டு அனுபவிச்சு கொண்டு வரவும் யிந்த படிக்கி யிதுக்கு யாராகிலும் விரோதம் செய்தால்

15 நாங்கள் அனபெறும் தமக்கு யெண்ணைக்கும் ஒத்தாசை செய்து கொண்டு வருவோம் யிந்தபடிக்கி நாங்கள் சமாத்து அனபெரும் சம்மதிச்சு யுங்களுக்கு யெழுதிக் குடுத்த

16 யுடம்பிடிக்கை சையி யிந்த கீறல் கையெழுத்து னாட்டாமை பீறு மகம்மது றாவுத்தர் யிந்த கீறல் கையெழுத்து சின்னப்பா றாவுத்தர் நெட்டெழுத்து கொல்லைமலை பொன்னம்பல வாத்தியார்

17 யிந்த கீறல் கையெழுத்து படேசா றாவுத்தர் அசன் றாவுத்தர் கையெழுத்து யிந்த கீறல் கையெழுத்து கர்த்தய்யா றாவுத்தர் யிந்த கீறல் கையெழுத்து கொஞ்சிப்பிள்ளை றாவுத்தர் யிந்த கீறல் கையெழுத்து அகிலாங்கதடிகாத றாவுத்தர் அபுபக்கர் றாவுத்தர் கையெழுத்து

# 43. சிவகங்கை காகித ஆவணம்

கே.பி.ஏ. நல்லமுகம்மது, சிவகங்கை.

**இடம்:** *சிவகங்கை, சமஸ்தானம் தேவஸ்தான அலுவலகம்.*

**காலம்:** *30.5.1876.*

**செய்தி:** *நூற்றி எட்டு வைணவ திவ்வியத் தலங்களுள் ஒன்றும், இராமானுஜரின் வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்புடையதுமான திருக்கோஷ்டியூர் சௌமிய நாராயணப் பெருமாள் கோயில் சம்பந்தப்பட்ட ஆவணம் இது. கி.பி.1730-இல் தொடங்கிய சிவகங்கை சீமையின் ஆட்சிப்பொறுப்பில் பதினோராவது அரசியாக கி.பி.1864 முதல் 1877 வரை ராணி காத்தம நாச்சியார் ஆட்சி செய்தார். அவரது காலத்தில் எழுதப்பட்டது தான் இந்த ஆவணம். இந்த காகித ஆவணம் 16 ரூபாய் பத்திரத்தில் (பத்துப் பக்கம்) எழுதப்பட்டு மெட்ராஸ் முத்திரைத்தாள் (Stamp Office, Madras) அலுவலகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது. 9 பக்கங்களில் ராணி காத்தம நாச்சியாரும், தேசிகய்யங்காரும் கையொப்பமிட்டுள்ளனர். முதலிரண்டு பத்திரங்களின் மேல்புறத்தில் வட்டமாக அச்சிடப் பட்ட முத்திரையின் நடுவே ஆங்கில அரசின் இலாஞ்சனை காணப்படுகிறது. ஒரு பத்திரத்தில் Fifteen Rupees என்றும் மற்றொன்றில் One Rupee என்றும் ஆங்கிலத்தில் மட்டுமல்லாமல் தெலுங்கு, தமிழ், உருது மொழிகளிலும் எண்ணிலும் அச்சிடப் பட்டுள்ளது. சிவகங்கை ராணி காத்தம நாச்சியாரவர்களும், தேசிகய்யங்காரும் திருக்கோஷ்டியூர் சௌமிய நாராயணப் பெருமாள் கோயிலில் வருடந்தோறும் நடைபெறுகின்ற சைத்திர உற்சவம், திரு ஆடிப்பூர உற்சவம், தெப்ப உற்சவம், பங்குனி உத்திர உற்சவம் ஆகிய உற்சவங்கள் நடத்துவது குறித்து செய்து கொண்ட உடன்படிக்கை பத்திரம் இது.*

***பத்திரத்தாள் - 1***

1 1876 -ம் வருஷம் மே மாதம் 30ந் தேதி தமிள் தாது வருஷம் வைய்யாசி மாதம் 19-ம் தேதி
2 மதுரை டிஸ்திரிக்கட்டு சிவகெங்கை சப்டிஸ்திரிக்கட்டு கசுப்பா
3 சிவகெங்கையிலிருக்கும் மறவஜாதி சிவமதம் ஷெ சிவகெ
4 ங்கை சீர்மை இஸ்தி மிராரி ஜமீன்தார் ஸ்ரீமது முத்து விஜய
5 ரெகுனாத கெவுரிவல்லவ பெரிய உடையாதேவரவற்கள்
6 குமாரத்தியும் சின்னய்யா பாளையப்பட்டு ஜமீன்தார் சின்னய்யா
7 சின்னதம்பி தேவரவற்கள் பாரியையும் ஷெ சிவகெங்கை சீமை

8 . . . ஜமின்தாருமான ஸ்ரீமது முத்துவிஜய ரெகுனாத ராணி
9 காத்தம நாச்சியாரவற்களும்
10 சிவகெங்கையில் பனையூர் அக்கிறகாறம் வடசரகிலிருக்கும்
11 விவசாய ஜீவனம் பிராமண ஜாதி விஷ்ணு மதம் லட்சுமி நரசிம்
12 மாசாரியார் புத்திரன் தேசிகய்யங்காரும் செயிது கொண்ட
13 உடன்படிக்கை
14 ஷெ மதுரை டிஸ்திரிக்கட்டு திருப்பத்தூர் சப்டி
15 ஸ்திரிக்கட்டு கசுப்பா திருக்கோஷ்ட்டியூர் அக்கிறகாறம் மேல
16 வீதி மேல்சறகிலிருக்குறது இதுனடியில்-1-அடயா
17 ளமிட்ட நாங்கெல்கைக்குள்ப்பட்டதும் தேசிகய்யங்கா
18 றாகிய யெணக்கு தான பாதியமாக கிடைத்து யென்னுடை
19 ய அனுபவத்திலிருப்பதுமான கல்லு மண்டபத்தில் ஷெ ஜ
20 மின்தாரிக்கிச் சேர்ந்த திருக்கோஷ்ட்டியூர் தேவஸ்தானம்
21 சவுமிய நாறாயண பெருமாளுக்கு நடக்கிற வைத்திரோஸ்ஸவம்
22 ஐந்தாந் திருநாளில் யென் சொந்தத்திலிருந்து சிலவு செயி
23 து ஷெ பெருமாளை யெழுந்திருளப் பண்ணி ஷெ தற்ம்மத்தை
24 நான் நடத்தி வருவதில்
25 அத்துடனே ஷெ பெருமாளுக்கும் கோதை நாச்சியா
26 ருக்கும் வருஷந்தோரும் நடந்து வருகிற திருவாடி
27 ப்பூற உக்ஸவத்திலும் ஷெ பெருமாளுக்கு நடக்கிற தெப்போ
28 த்ஸவதத்திலும் ஐந்தாந்திருநாள் தினங்களில் ஷெ ...
29 மண்டபத்தில் ஷெ பெருமாள் நாச்சியாற்களை யெழு
30 ந்தருளப் பண்ணியும்
31 ஷெ தேவஸ்தானம் திருமாமகள் நாச்
32 சியாருக்கு நடக்கிற பைங்குனி உத்திற உத்ஸவத்தில் முதல்
33 திருநாள் முதல் பத்தாந் திருநாள் பரியந்தம் பத்து தி
34 னங்களிலும் தினம் பாதி சக்கறை பொங்கல் தளிகை செ
35 யிது அமுது செயிதருளப்பண்ணி விநியோகம் செயிதும்*

***பத்திரத்தாள் -2***

36 சாசுவதமாக ஷெ தர்ம்மங்களை தாள்வின்றி நடத்தி வற
37 வேணுமென்ங்குற யெண்ணத்தால் மேல்கண்ட விபறப்படி நட
38 த்திவற வேண்டிய தர்ம்மங்களின் சிலவுகளுக்காக
39 ஷெ திருப்பத்தூர் சப்டிஸ்திரிக்கட்டு ஷெ
40 திருப்பத்தூர் தாலுகாவில் கோர்ட்டு யேல கிரய சாசன
41 மூலமாக யெனக்கு பாத்தியமாகி யென்னுடைய அ
42 னு போகத்திலிருக்கிற சுண்ணாம்பிருப்பு கிராமத்தில் இதுனடி
43 யில் -2 அடையாளமிட்ட யெல்கைக்குள்பட்டது.
44 ராணியவற்களாகிய தங்களிடத்தில் 1873-ம் வருஷத்தில்
45 நான் கொடுத்து 448-ம் நம்பரில் தாக்கலான விண்ணப்பத்தை

46 . . . பெர் பெத்த திருக்கோஷ்ட்டியூர்ச் சோனகர் பேஷ்கார்
47 சவுமிய நாறாயணய்யங்காற் கண் பார்த்தளற்ந்து ஷெ வருஷம்
48 அக்டோபற் மாதம் 31-ம் தேதி யெழுதிய ஜவாபுடன் அ
49 னுப்பியிருக்கிறதுமான கணக்கு படிக்குள்ள நஞ்சை
50 . . . ஒன்பது மாமுக்காணி அரகாணி மிந்தி
51 ரியையும் - 1 அடையாளமுள்ள மேல்கண்ட மண்டப
52 த்தையும் அதன் காலி பாகத்தையும் ஷெ திருக்கோ
53 ஷ்ட்டியூர் தேவஸ்தானத்துடன் சேர்த்து கொண்டு
54 மேல் குரித்த விபறப்படி தர்ம்மங்களை நடத்தி வற
55 வேண்டியதாயி
56 ராணி காத்தம நாச்சியாற்வர்களாகிய தங்களை
57 தேசிகய்யங்காருகிய நான் கேட்டுக் கொண்ட பிறகாறம்
58 தாங்களும் சம்மதித்து ஒப்புக் கொண்டிருப்பதுனாலே
59 ஷெ மண்டபத்தையும் அதன் காலி நிலத்தை
60 யும் ... தர்ம்மங்களை நடப்பிவித்து வறவேண்டி
61 ய சிலவுகளுக்காக ஷெ ... யுடனே அதை
62 யடுத்து மேல் பக்கத்தில் இப்போது ஜாஸ்தியாக
63 ... பத்து மாவு
64 க்கும் தேசிகனேந்தலென்றும் பேரிட்டு ஷெ ...
65 மாவையும் ராணி காத்தம நாச் சியாறவற்களாகிய தங்க
66 ளது சுவாதினத்திலும் விசாரணைக்கும் நாளது தேதி
67 யில் நான் உள்ப்படுத்தியும் ஒப்புவித்துமிருப்பதால்
68 ஷெ ... நிலங்களுக்கு ஷெ சுண்ணாம்பிருப்பு கி [ராம] கண்மாயி
69 தண்ணீற் பாய்வதற்க்காக குளவெட்டு மட்டும் செலு
70 த்தியும் பொருப்பு வரியன்றிலும் ஷெ நிலங்களை
71 சுத்தமானியமாக தாங்கள் ஷெ திருக்கோஷ்ட்டியூர் தே
72 வஸ்தான(த்)துடனே சேந்து தங்கள் விசாரணைக்குள்
73 ப்படுத்தி அனுபவிச்சு கொண்டு மடைப்படி வகைறா*

***பத்திரத்தாள் -3***

74 தர்மம் நடப்பிவித்து வற வேண்டியதற்க்காக யேர்ப்படுத்தி
75 யிருக்கிற இதுனடியில் கண்ட தஸ்தீகு திட்டத்தில் யெ
76 ழுதியிருக்கிற விபரப்படிக்கி ஷெ தேவஸ்தானத்திலிருந்து
77 செலவுகள் செயிது 1286 பூர்த்தி ஈசுவற வருஷம்
78 சித்திரை மாதம் முதல் வருஷந்தோரும் மேல்கண்டபடி ஒவ்வொ
79 ரு உத்ஸவங்களிலும் தங்கள் தரப்பில் தர்ம்மங்களை நடப்பி
80 வித்து வருதுதெற்க்கும் அந்த தினங்களில் நானும் யென்
81 வார்சுகளும் யென் வகையில் வரும் மனுஷாளும் பரிவ
82 ட்ட மரியாதை பிரசாதம் காளாஞ்சி முதலியதுகளை பெ
83 த்துக் கொள்ளுகு தெற்க்கும் ஷெ நிலங்களில் வரும்ஆ

84 மிஷத்தையும் ஷெ மண்டபத்தை சுத்தியிருக்கிற காலியிடத்தில்
85 தாங்கள் தென்னம்பிள்ளைகள் வைக்கும்படி செயிது
86 அதுகளில் கிடைக்கும் வரும்படிகளையும் ஷெ தற்மம்
87 சிலவுகளுக்கு உபயோகப்படுத்தி கொள்வதற்க்கும் அதில்
88 நிகறாதாயத்திலிருந்து ஷெ மண்டபம் வகையறாவை ...
89 செயிவதற்க்கும் மண்டபத்தையடுத்து அதின் மேல்பக்கத்தில்
90 அறைகுறையாயிருக்கிற கெர்ப்ப கிரகத்தை கட்டிவிப்பதற்க்கும்
91 தேசிகய்யங்காறாகிய நானும் யென் சந்ததிகளும்
92 இதின் மூலமாயி சம்மதித்து கட்டுப்பட்டிருக்கிறோம்
93 மேலே கண்டிருக்கிறபடி மண்டபத்தையும் அ
94 தின் காலியிடத்தையும் நஞ்சை நிலங்களையும் ஷெ திரு
95 கோஷ்ட்டியூற் தேவஸ்தானத்துடன் சேர்த்து கொள்ளவும்
96 மேலே கண்டிருக்கிறபடி தேசிகய்யங்காறாகிய தம்மு
97 டைய மண்டபத்தில் அடுத்த ஈசுவற வருஷம் சித்திரை மாதம் முதல்
98 வருஷந்தோரும் சைத்திரோத்ஸவம் திருவாடிப்பூற
99 உத்ஸவம் தெப்போத்ஸவம் இம்மூன்று உத்ஸவங்களிலும்
100 ஐந்தாந்திருநாள் தினங்களில் ஷெ பெருமாளை யெலுந்த
101 ருளப்பண்ணியும் பங்குனி உத்திரஉத்ஸவம் பத்து நாட்க
102 ளிலும் சற்கரை பொங்கல் செயிவிச்சு அமுது செயி
103 து அருளப்பண்ணி விநியோகம் செயிதும் ஷெ தஸ்தீகு தி
104 ட்ட பிறகாறம் ஷெ தேவஸ்தானத்திலிருந்து சிலவுகள் செயிது
105 விமரிசையாகவும் சாசுவிதமாகவும் தர்ம்மங்களை நட
106 ப்பிவித்து வருதுதெற்க்கும் அதுகளுக்கு ஷெ நிலங்களி
107 லும் மண்டபத்தை சுத்தி வைக்கப்படும் தென்னம்பிள்ளை
108 களினாலும் கிடைக்கும் வரும்படிகளை உபயோ
109 கப்படுத்தி கொள்ளுகுதெற்க்கும் அதுகளின் நிகாரதாய
110 த்திலிருந்து ஷெ மண்டபம் வகையறா*

***பத்திரத்தாள் -4***

111 ... செயிவிக்கறதுக்கும் அதின் பின்பக்கத்திலி
112 ருக்கிற கெற்ப்ப கிரகத்தை சுட்டி விப்பதற்க்கும் ஷெ மண்ட
113 பப்படிக்கி அக்தானான தேசிகய்யங்காறாகிய தமக்கும்
114 தம்மிட சந்ததிகளுக்கும் தாமனுப்பும் மனுஷியாளுக்கும் ஷெ
மண்டபப்படி வகையறா
115 தினங்களில் ஷெ தஸ்தீகு திட்டத்தில் கண்டிருக்கிற விப
116 றப்படி பரிவட்டம் காளாஞ்சி பிரசாதம் முதலான ம
117 றியாதைகளை யென்றென்றைக்கும் நடப்பிவித்து வரு
118 குறதற்க்கும் ஷெ நிலங்களுக்கு ஷெ சுண்ணாம்பிருப்பு
119 கி[ரா]ம கண்மாயி தண்ணீர் பாய்ந்துவற வேண்டியதாகச்சே
120 அந்த கிராம வளக்கப்பிரகாறம் ஒவ்வொரு பசலியிலும்

121 ஷெ நிலங்களி ... மாப்படி கூடுகுற குளவெட்டு மக
122 சூலை தம்முடைய ஷெ கிராம விசாரணைக்காறன்ங்களி
123 டம் கொடுத்து ரசீது வாங்கி வரும்படி செயிவதற்கு
124 ம் ஷெ நிலங்களுக்குள் றோட சேஸை ஷெ தேவ
125 ஸ்தானம் கி[ராம] நிலங்களுடனே சேர்த்து கெவற்ன்மெண்டா
126 ருக்கு செலுத்திவிச்சு வருகுறதற்க்கும்
127 அகுதானான தாமும் தம்மிட சந்ததிக
128 ளும் ஷெ தர்ம்ம காரியங்களை மேல்பார்த்து வருகுறதற்க்கு
129 ராணிகாத்தம நாச்சியாரவற்களாகிய நாமும் நம்மி
130 டவார்ஸ்களும் இதுனால் சம்மதித்தும் ஒப்புக்கொ
131 ண்டு மிருக்குறோம்.
132 ஷெ மண்டபத்துக்கு சம்மந்தமான ஷெ நில
133 ங்கள் வகையறாவின் வறவு சிலவுக்குச் சேற்ந்த சகல
134 கணக்குகளையும் றாணி காத்தம நாச்சியாறவர்களா
135 கிய தங்களுடையவும் தங்கள் உத்தியோகஸ்[தர்க]
136 ளுடையவும் வகுத்திக்குள்படுத்தி கொள்வது தேசிக
137 ய்யங்காராகிய யெனக்கும் யென் வார்ஸ்களுக்கும்
138 சம்மதம்
139 ஷெ மண்டபம் பூர்வத்தில் துரபாண்டியனாகிய கெ
140 வுரிவல்லவ தேவர்-1, செல்ல துரையாகிய வெங்கம பெரி
141 ய உடையாதேவர்-2, இவர்கள் அனுபவத்திலும் ஷெ
142 நஞ்சை நிலங்கள் பூர்வத்தில் ராணி பிச்சம நாச்சியாறவர்கள்*

***பத்திரத்தாள் -5***

143 அனுபவத்திலும் தர்க் காலத்தில் ஷெ மண்டபமும் நஞ்சை நில
144 ங்களும் தேசிகய்யங்காறாகிய யென்னுடைய அனுப
145 வத்திலுமிருக்குது.
146 ஷெ திருக்கோஷ்ட்டியூறில் மேல தெருவில் தேறோ
147 டும் விதிக்கி மேர்க்கு சாமண்ணாவய்யாங்காற்மனைக்
148 கும் தற்ம்மகற்த்தா சின்ன சாமிய்யன் தோட்டத்துக்கும்
149 வடக்கு ஷெ சின்னசாமிய்யன் தோட்டத்துக்கும் கிள
150 க்கு கோவிந்தய்யங்காற் மனைவீட்டுக்கு தெற்க்கு இதற்
151 க்குள்பட்ட காலியிடம் வகையறாவுள்பட கிளமே
152 ல் ஜாதியடி - 195 - தென் மடல் ஜாதியடி - 40 அ
153 டங்கியதால் கல்லுமண்டபம் ...1 .
154 திருப்பத்தூர் தாலுக்கா ஷெ சுண்ணாம்பிருப்பு
155 கிராமத்தில் ஷெ கிராமம் சேகரம் தேவஸ்தானம் சி[ன்]
156 னபட்டாகுரிச்சி பிரவுக்கும் தாணிப்பட்டி பிரவுக்கும்
157 யெல்லைக்கல்லுக்கும் மேற்க்கு ஷெ தேவஸ்த்தானம்

158 நென்மேனி வயலுக்கும் ஷெ கண்மாயி பிரகறைக்கும்
159 வடக்கு - தென்னந்தோப்புக்கும் மனந்தோப்புக்கும்
160 புஞ்சைக்கும் கிளக்கு கோட்டையிருப்பு நாரேந்த
161 ல் வயலுக்கும் தேவஸ்த்தானம் காக்காகிளரிவயலு
162 க்கும் தெற்க்கு இதற்க்குள்பட்டதும் அச்சு திரு
163 த்தி இப்போது சாகுபடிக்கி லாயக்காகயிருப்ப
164 துமான தேசிக புரமென்ங்கிற நஞ்சை உள்பட
165 தஸ்தீகு திட்டம் வருஷம் ரூ.215-8-0*

*[பத்திரத்தாள் - 5 முதல் 9 முடிய [வரிகள் 166 - 474] 1/4 பக்க அளவில் இப்பத்திரத்தில் எழுதப்பட்டுள்ள நீண்ட பட்டியலில் இக்கோயிலில் நடைபெறும் ஒவ்வொரு திருவிழாக்களின் போது நடைபெறும் பூஜைக்குரிய பொருள்கள் மற்றும் பலசரக்கு சாமான்கள் போன்றவைகள் என்னென்ன பொருள்கள் எந்த அளவில் வாங்க வேண்டுமென்றும் அதற்கு ஒதுக்கப்பட்டுள்ள பணம் குறித்தும் கூறப்பட்டுள்ளது. மேலும், திருவிழாக்களின் போது இக்கோயிலில் உள்ள ஒவ்வொரு ஊழியர்களுக்கும் எவ்வளவு பணம் ஊதியமாகக் கொடுக்க வேண்டுமென்றும் விவரமாகக் கூறப்பட்டுள்ளது.]*

***பத்திரத்தாள் - 10***

475 பரிவட்டம் காளாஞ்சி வகையறா மரியாதைகளை மட்டு
476 ம் யெப்பவும் குறைக்காமல் இப்போது யேற்ப்பட்ட
477 . . . திட்டப்படிக்கும் நடப்பிவித்து வறுவதில்
478 தேசிகய்யங்காராகிய யெனக்கும் யென்
479 வார்ஸ்களுக்கும் சம்மதம்
480 அந்தப்படி நடப்பிரிவித்து வற ரு
481 ணியவறைகளாகிய நாமும் நம்முடைய வார்
482 ஸ்களும் கட்டுப்பட்டிருக்குறோம்
483 திருத்தியும் - அக
484 ... யர்
485 . . . சைத்திரோத்ஸ்வம் சிலவு ரூ. 58-8-0
486 மேல்கண்ட திட்டப்பிறகாறம் திருவாடிப்பூற
487 உத்ஸவம் -5-ம் திருநாளில் நடப்பி
488 விக்கிற மண்டபப்படிக்கி ரூ. 58-8-0
489 மாசி மாதம் தையில் நடக்கிற 5ம் திரு
490 நாளிலும் ஷெ மண்டபத்தில் மேலே
491 கண்டிருக்கிற மண்டபப்படி
492 நடப்பிவிக்க ரூ. 58-8-0
------------
493 ரூ. 175-8-0
------------

494 20.5.74
495 16ரூ. ஷ்டாம்பு ஒன்றாகயில்லாதுனாலே

496 15ரூ. ஷ்டாம்பு 1ம் 1 ரூ ஷ்டாம்பு
497 ஒன்றுமாக குடுக்கப்பட்டுது.
498 20.5.74
499 சிவகெங்கை
500 ஸ்ரீநிவாஸய்யங்கார்
501 வெண்டர்*



சிவகங்கை காகித ஆவணம் - 1876 பத்திரத்தாள் - 1
(15 ரூபாய் பத்திரம்)



சிவகங்கை காகித ஆவணம் - 1876 பத்திரத்தாள் - 2
(1 ரூபாய் பத்திரம்)

* பக்கங்களின் இறுதியில் ராணி காத்தம நாச்சியாரும் மற்றும் தேசிகய்யங்காரும் கையொப்ப மிட்டுள்ளனர்.

# 44. பழங்காசு - புதிய கண்டுபிடிப்புகள்

ஐ. இராமசாமி, கோவை.

***44 : 1***

**முதலாம் இராஜேந்திர சோழனின் பொற்காசு**



பிற்காலச் சோழர் காசுகளில் இது மிகவும் குறிப்பிடத்தக்க பொற்காசு ஆகும். இது ஆசிரியர் தொகுப்பில் உள்ளதாகும்.

முன்பக்கம்: மேலே வில், புலி, இருகயல், இருபுறம் விளக்கு.
கீழே ஸ்ரீராஜராஜேந்திரன் என்ற நாகரி வாசகம்.

பின்பக்கம்: அமர்ந்த நிலையில் மனித உருவம். வலப்பக்கம் அமர்ந்த நிலையில் புலி. நடுவில் ஒரு விளக்குத் தண்டு.

***44 : 2***

**பிற்காலச் சேரர் செம்புக் காசுகள்**

இவை மகோதை என்ற திருவஞ்சைக்களத்தை ஆட்சிபுரிந்த சேரர்களால் 8-9ஆம் நூற்றாண்டில் வெளியிடப்பட்டவை. பேரூர் ஆற்றில் கிடைத்தவை.



**காசு 1**

முன்பக்கம்: வில்லும் கலங்கரை விளக்கமும்.

பின்பக்கம்: பிற்காலச் சேரர் காலத்தில் சிறந்து விளங்கிய சேரமான் பெருமாள், குலசேகர ஆழ்வார், சங்கராசாரியார் எனும் இவர்களுள் ஒருவராக இருக்கலாம். ஆய்வுக்குரியது.

**காசு 2**

முன்பக்கம்: வில்லுக்கும், கலங்கரை விளக்கத்துக்கும் இடையே ஒரு தேவதை அல்லது அரசன் வில்லுடன் காணப்படுகின்றார்.

பின்பக்கம்: எல்லாக் காசுகளிலும் இருப்பது போல சதுரத்தில் படைக் கருவிகள்.

## 44:3

**நாக இலாஞ்சினை**



காலத்தால் முற்பட்டது. வெள்ளலூர்மேட்டில் கிடைக்கப்பெற்றது. ஈயம் கலந்த வெள்ளி. யவன-கிரேக்க வணிகரின் கப்பல் பயணத்துக்குரிய பயணச் சீட்டாக இருக்கலாம். இதன் காலம் கி.மு.400 ஆகலாம். கொங்கு நாட்டுடன் மேல் நாட்டார் செய்து வந்த வாணிகத்தை இது விளக்குகின்றது.

முன்பக்கம் : கிரேக்கரது வணிகத்துக்குரிய நாகம்.

பின்பக்கம் : கப்பலும், கப்பலில் மனித உருவமும் உண்டு.

# 45. வீரராயர் பொற்காசு

ச. இரவி, கோவை.

ஈரோடு மாவட்டம், காங்கயம் வட்டம் பழைய கோட்டைப் பகுதியில் உள்ள காலத்தோட்டம் என்ற இடத்தில் இராமசாமிக்கவுண்டர் வீடு கட்டுவதற்குப் பாணம் பறித்தபோது 2 1/2 அடி ஆழத்தில் கல்மூடப்பட்ட செப்பில் வீரராயப் பொற்காசுகள் கண்டெடுக்கப்பட்டன. இவற்றின் காலம் கி.பி. 17ஆம் நூற்றாண்டு எனலாம். 60% தங்கத்தால் ஆகிய 8மிமீ அளவும், 870 மிலி கிராம் எடை அளவும் கொண்ட மிகச்சிறிய வட்ட வடிவில் காணப்படும். இப்பொற்காசைக் கொங்கு மக்கள் வீரராயக்காசு என அழைக்கின்றனர். இப்பொற்காசின் இரண்டு பக்கங்களும் வளைந்த கோடுகள் மற்றும் குறியீடுகளால் ஆனவை. எழுத்துக்கள் எதுவும் எழுதப்பெறவில்லை. இக்காசின் முன்பக்கத்தில் கீழே 12 ராசிகளைக் குறிக்கின்ற விதத்தில் 12 புள்ளிகள் மூன்று வரிசையில் காணப்படுவதால் ராசிக்காசு என்று இப்பகுதி மக்கள் இதனைக் குறிப்பிடுகின்றனர். பின் பக்கத்தின் மேலே இடதுபுறத்தில் சூரியன் வலது புறத்தில் நிலா, அதன் கீழ் நட்சத்திரங்களைக் குறிக்கும் இரு புள்ளிகள் ஆகியன உள்ளன. முதல் பக்கத்தில் முதலையின் வாய்வடிவம் காணப்படுகின்றது. திருவிதாங்கூர் பகுதிகளில் கிடைக்ககூடிய திருவிதாங்கூர் காசுகளில் இதுபோன்ற வடிவம் காணப்படும். மையப் பகுதியில் மன்னர்களுடைய செண்டும் அதனை ஒட்டித் தலைப்பாகையும் காணப்படுகின்றன. இக்குறியீடு நாமம் போன்று இருப்பதால் இதை நாமக்காசு என்றும் இப்பகுதி மக்கள் குறிப்பிடுகின்றனர்.





# 46. மணல்மேல்குடி புத்தர் சிலை

*ஜெ. ராஜாமுகமது, புதுக்கோட்டை.*

புதுக்கோட்டை மாவட்டம் மணமேல்குடிக்கு அருகிலுள்ள சீனன் திடலில் கலையழகு மிக்க கி.பி.10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த புத்தர் சிலை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டு உள்ளது.

வஜ்ரபர்யங்க ஆசனத்தில் அமர்ந்த நிலையில் உள்ள இந்த புத்தர் சிலை சுமார் 4 1/2 அடி உயரம் உள்ளது. தலையின் பின்புறத்தைச் சுற்றியும் தீப்பிழம்புடன் கூடிய சுற்று வட்டம் உள்ளது. தலையின் உச்சியில் தீப்பிழம்பு (உஸ்நிசா) ஒன்றும் காணப்படுகிறது. சமாதி நிலையில் புத்தர் இருக்கும்போது அவருள்ளிருந்த ஞானப்பிழம்பு மண்டையோட்டின் நடுவிலிருந்து வெளிவருவதைக் குறிப்பதாக இது அமையும் என புத்த சமய புராணங்கள் கூறுகின்றன. தலைமுடி சிறிய முடிச்சுகளாக அலங்கரிக்கப் பட்டுள்ளது. மூக்கு, கண், உதடு மற்றும் முகத்தின் இதரபாகங்கள் அழகுடன் அமைக்கப்பட்டுள்ளன. காது சோனை நீண்டுள்ளது. மார்பில் உள்ள ஆடை இடது தோள் வழியாக செல்லுகிறது.

கி.பி. 9 முதல் 13 ஆம் நூற்றாண்டிற்கு இடைப்பட்டக் காலத்தில் பழைய தஞ்சாவூர் மாவட்ட கடற்கரைப்பட்டினங்களில் புத்த சமயம் பரவலாகப் பின்பற்றப்பட்டு வந்ததாக செய்திகள் கிடைப்பினும், பழைய தஞ்சாவூர் மாவட்டத்திலிருந்து புதுக்கோட்டை மாவட்டத்துடன் இணைக்கப்பட்ட கடற்கரைப்பகுதியில் இதுவரை இது போன்ற புத்தர் சிலை அல்லது புத்த சமய பழமைச் சின்னங்கள் கிடைக்கப் பெறவில்லை. ஆவுடையார் கோவில் வட்டத்தில், கடற்கரையிலிருந்து சற்று தொலைவிலுள்ள பொன்பற்றி (பொன்பேத்தி) மட்டுமே புத்த சமயத்துடன் தொடர்புடையதாக பழைய குறிப்புகள் உள்ளன. இவ்வூருக்கு அருகிலுள்ள கரூரில் சிறிய புத்தர்சிலை ஒன்று கிடைத்துள்ளது. கி.பி.11ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட தமிழ் இலக்கண நூலான வீரசோழியம் எழுதிய ஆசிரியர் புத்தமித்திரன் பிறந்த ஊர் பொன்பற்றியாகும்.

மணமேல்குடிக்கு அருகிலுள்ள புதுக்குடியில் உள்ள ஒரு நெல்வயலில் கண்டுபிடிக்கப்பட்ட இந்த சிலை தற்போது மணமேல்குடி வட்டம் புதுக்குடி கிராமத்தில் வைக்கப்பட்டுள்ளது. சிலை கண்டுபிடிக்கப்பட்டுள்ள இடம் சீனன்திடல் என்று இன்றும் அழைக்கப்படுவதாக இக்கிராம மக்கள் தெரிவிக்கின்றனர். கி.பி.10-11ஆம் நூற்றாண்டில் சீனாவிற்கும் தென்னிந்தியா விற்குமிடையே பெருமளவில் கடல் வணிகம் நடைபெற்று வந்தது. நாகபட்டினம் சீனாவுடன் நெருங்கிய கடல் வணிகத் தொடர்பு கொண்டு இருந்தது. நாகபட்டினத்தில் புத்தவிஹாரங்கள் பல இருந்தன. சீன வணிகர்கள் இங்கு வந்து வழிபட்டனர். நாகபட்டினத்திற்குத் தெற்கே உள்ள

மணமேல்குடி துறைமுகம் தென்னிந்திய - சீன - இலங்கை கடல் வாணிக வழியில் உள்ளது. சிலை கிடைத்த பகுதியில், சீன பீங்கான் ஓடுகள், பழங்கால பானை ஓடுகள் ஆகியனவும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. சிலை கண்டுபிடிக்கப்பட்ட இடம் கடற்கரைக்கு வெகு அருகில் உள்ளது.



# 47. கல்வெட்டுப் பொறித்த கற்சிற்பங்கள்

சொ. சாந்தலிங்கம், மதுரை.
பொ. இராசேந்திரன், மதுரை.

**47 : 1**

**இடம்:** இராமநாதபுரம் மாவட்டம், கமுதிவட்டம், நீராவி கிராமம். சுந்தரக்கணபதி கோயில் முன் உள்ள நந்தியின் பீடத்தில் உள்ளது.

**காலம்:** கி.பி.10ஆம் நூற்றாண்டு. வட்டெழுத்து.

**செய்தி:** நந்தியை அமைத்தவரின் பெயர்.

1 ஸ்ரீ கூத்தாடிக் காவிதி சேந்த
2 ன் வைப்பித்த இஷபம்

**47 : 2**

**இடம்:** விருதுநகர் மாவட்டம், அருப்புக்கோட்டை வட்டம், மறவர் பெருங்குடி கிராமம் குளக்கரையில் உள்ள நந்தியின் பீடம்.

**காலம்:** முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் யா.3 (கி.பி.1220)

**செய்தி:** நந்தியைச் செய்து வைத்தமை.

1 ஸ்வஸ்திஸ்ரீ சோனாடு கொண்டருளியசுந்தரபாண்டி
2 ய தேவர்க்கு யாண்டு 2 எதிராமாண்டு விக்கிரம்பாண்டி
3 . . . சதுர்வேதிமங்க
4 . . . எழுந்தருளுவித்த ரிஷப தேவர்

**47 : 3**

**இடம் :** பலிபீடத்தில் உள்ள கல்வெட்டு.

**காலம் :** கி.பி.13ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** பலிபீடம் அமைத்தமை.

1 . . . பயூர் பிராண வாரிகள்
2 . . . ன்னன் மீளவந்தானான
3 . . . கரை சிங்க நாடாழ்வான் இட்
4 ட பெலிபீடம்

# 48. பராந்தக சோழன் காலத்துக் கலிங்கு

**து. துளசிராமன், ஆர்க்காடு.**
**ப. வெங்கடேசன், காவேரிப்பாக்கம்.**

வேலூர் மாவட்டம், அரக்கோணம் வட்டம், அரக்கோணத்திலிருந்து 11 கிமீ தொலைவிலும், நெமிலி என்னும் ஊரிலிருந்து 6 கிமீ தொலைவிலும் அமைந்துள்ளது பல்லாவரம் என்கிற சம்பத்துராயன் பேட்டை. இவ்வூருக்கு வடக்கே 1/2 கி.மீ தொலைவில் வடக்கு தெற்காக 200 அடி நீளமும் 25 அடி அகலமும் கொண்ட கலிங்கு அணை கட்டப்பட்டுள்ளது. இவ்வணையின் இருமுனையிலும் மேல்பகுதியில் வட்டவடிவ கொத்தளம் போன்ற அமைப்பு உள்ளது. வடக்கு கொத்தளத்தில் பெருமாள் கோயிலும், தெற்கு கொத்தளத்தில் விநாயகர் கோயிலும் உள்ளன. வடக்கு முனையிலுள்ள பெருமாள் கோயில் அழிந்துவிட்ட நிலையில் உள்ளது. தென்முனையிலுள்ள கோவிலில் விநாயகர் சிலை உள்ளது. இது முற்கால சோழர் கலைப்பாணியைக் கொண்டு இலங்குகிறது. இது கி.பி. 9-10 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். இவ்விநாயகரை கலிங்கு விநாயகர் என ஊரார் அழைத்து வழிபட்டு வருகின்றனர். விநாயகர் கோயிலுக்கு கிழக்குப் பகுதியில் ஒரு கற்பலகையில் கல்வெட்டு ஒன்று உள்ளது. இதில் *ஸ்வஸ்திஸ்ரீ மதிரை கொண்ட* என்ற ஒரு வரி மட்டுமே தெரிகிறது. மற்றவை பிற்காலத்தில் எழுப்பிய சிறிய சுவர் அமைப்பால் மறைக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டைக் கொண்டு நோக்கும்போது இக்கலிங்கு அணை முதலாம் பராந்தக சோழன் காலத்தில் கி.பி. 10ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டு இருக்கலாம் என்று அறியலாம்.

30 செமீ x 17 செமீ x 15 செமீ அளவுள்ள செங்கற்களைக் கொண்டு மிக நேர்த்தியாகவும், வலிமையாகவும் இவ்வணை கட்டப்பட்டுள்ளது. அடியில் மணற்பரப்பில் 20 வரிசை செங்கற்கள் Header and structure என்ற முறையில் அடுக்கிக் கட்டப்பட்டு, அதன்மீது செவ்வக வடிவ (45 செமீ x 30 செமீ x 10 செமீ) கருங்கற்பலகைகளை பாவி, மீண்டும் 6 வரிசை செங்கற்களை அடுக்கி அதன்மீது மீண்டும் கருங்கற்களை பாவியுள்ளனர். இதுபோன்று மொத்தம் 5 அடுக்குகளில் செங்கற்கள், கருங்கற்பலகைகள் என அடுக்கி மிக வலிமையாக கட்டியுள்ளனர். இவ்வணையின் இருபுறமும் 30 அடி விட்டமுள்ள வட்ட வடிவமான கொத்தளங்கள் போன்ற அமைப்புகள் கட்டப்பட்டுள்ளன. இவ்வணையைக் கட்டுவதற்காக சுண்ணாம்பும், மணலும் இணைப்புப் பொருட்களாக பயன்படுத்தப்பட்டுள்ளன.

மழைக்காலத்தில் காவேரிப்பாக்கம் ஏரி நிரம்பி, பின் கலிங்கின் வழியாக வெளியேறும் கலிங்கு நீர் உப்பரந்தாங்கல், துரைப்பெரும்பாக்கம், ஈராளச்சேரி, ஆலப்பாக்கம், பெருவளையம், சிறுவளையம், உள்ளியநல்லூர், தருமநீதி, ரெட்டிவலம், அகவலம் முதலிய 30 க்கும் மேற்பட்ட ஏரிகளைக்கடந்து பனப்பாக்கம் என்னும் ஊர் அருகே கல்லாறு ஆக உருவெடுத்து, கலிங்கு அணையின் தெற்குப் பகுதியை வந்தடைகிறது.

வாலாஜாவட்டம், பொன்னை ஆற்றிலிருந்து வரும் நீர் பெருங்காஞ்சி ஏரியை நிரப்பி பின் சூரை, ஆயல், போளிப்பாக்கம், தப்பூர், கோவிந்தாங்கல், பழையபாளைய மோட்டூர், அஞ்சமந்தூர், சிற்றேரி, நாகவேடு, அரும்பாக்கம், பாடி, கீழாந்துரை, பெருமுச்சி முதலிய 20 க்கும் மேற்பட்ட ஏரிகளை நிரப்பி கலிங்கு அணையின் மேற்கு, வடக்கு பகுதிகளை வந்தடைகின்றது. மேற்கு, தெற்கு, வடக்கு முதலிய பகுதிகளிலிருந்து வேகமாக வரும் நீரை சிதறாமல் இவ்வணை ஒருமுகப்படுத்தி, ஓர் ஆற்றினை உருவாக்குகின்றது. கலிங்கிலிருந்து வரும் நீரைப் பராமரிக்க பல்லவர், சோழர் ஆட்சியில் கலிங்கு வாரியம் ஒன்று இப்பகுதியில் நடைமுறையில் இருந்தது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வணையின் வழியாக வரும் நீர் பழைய பாலாறு என்னும் பெயரில் திருமால்பூர், தக்கோலம், சோழபுரம், மணவூர், பூண்டி, அத்திரம்பாக்கம், ஒதப்பை, காரனோடை ஆகிய ஊர்களின் வழியாகப் பாய்ந்து எண்ணூருக்கு அருகில் கடலில் கலக்கிறது. இதற்கு குசஸ்தலையாறு அல்லது கொறத்தலையாறு என்ற பெயரும் வழங்கப்படுகிறது. ஆயிரம் ஆண்டு களுக்கு முன்னர் சோழர்காலத்தில் இக்கலிங்கு அணை கட்டப்பட்டு, இன்றளவும் நிலைத்து நின்று, சோழர் கட்டடக்கலை மற்றும் நீர்பாசனத் திறனுக்கு ஓர் அரிய சான்றாக விளங்குகிறது என்பது மிக முக்கியமான செய்தியாகும்.



# 49. முதல் இராசராச சோழன் மெய்க்கீர்த்தி ஓர் ஆய்வு

கா. சண்முகம், தஞ்சாவூர்.

கி.பி. 985 முதல் கி.பி.1014 வரை ஆண்ட முதல் இராசராச சோழன் இளமையிலேயே போர்த்திறமை பெற்று விளங்கினான். புதுக்கோட்டை மாவட்டம், திருமய்யம் தாலுகா, சித்தூரில் உள்ள திருவக்நீஸ்வரர் கோயிலின் வடபுறச் சுவரில் உள்ள (புதுக்கோட்டைக் கல்வெட்டுத் தொகுதி எண் 83) கல்வெட்டே இவனது முதல் மெய்க்கீர்த்திக் கல்வெட்டாக இருக்க வேண்டும். இவனது ஐந்தாம் ஆட்சி ஆண்டு என்று இக்கல்வெட்டு தெரிவிக்கிறது. இக்கல்வெட்டில் இவ்வேந்தன் 10 நாடுகளைக் கைப்பற்றித் தனது ஆட்சியில் சேர்த்துள்ளான்.

இதேபோல் திருச்சி மாவட்டம், உடையார்பாளையம் வட்டம் கீழப்பழூர் வடமூலேஸ்வரர் கோயிலில் உள்ள (தெ.க.5, 664) இவனது 10ஆம் ஆட்சியாண்டின் கல்வெட்டு 10 நாடுகளைக் கைப்பற்றினான் என்று குறிக்கப்பட்டுள்ளது.

இவ்விரண்டு கல்வெட்டுகளிலும் குறிப்பிட்டுள்ள நாடுகளை ஆராய்வோம்.

| | | |
|---|---|---|
| 1 | காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளி | காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளி . |
| 2 | வேங்கை நாடும் | வேங்கை நாடும் |
| 3 | கங்கபாடியும் | கங்கபாடியும் |
| 4 | நுளம் பாடியும் | நுளம்ப பாடியும் |
| 5 | தடிகை வழியும் | தடிகை பாடியும் |
| 6 | குடமலை நாடும் | குடமலை நாடும் |
| 7 | கொல்லமும் | கொல்லமும் |
| 8 | கலிங்கமும் | கலிங்கமும் |
| 9 | ஈழ மண்டலமும் | ஈழ மண்டலமும் |
| 10 | இரட்டபாடி ஏழரை இலக்கமும் | இரட்டபாடி ஏழரை இலக்கமும் |
| 11 | செழியரைத் தேசு கொண்டருளிய | |

இவ்விரண்டில் உள்ள 10 நாடுகளும் ஒற்றுமையாக உள்ளன. ஆனால் 5 ஆம் ஆண்டின் கல்வெட்டில் உள்ள 11 ஆவது பகுதி 10ஆம் ஆண்டில் இல்லை. இதன் காரணம் விளங்கவில்லை.

5, 10 ஆம் ஆட்சியாண்டுக்குப் பிறகு 14ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் 9 கிடைத்துள்ளன.*

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | *தெக. 3;19* | காந்த | கங்க | நுளம் ப | தடிய பாடி | வேங் கை | குட மலை | பாண் டி |
| 2 | *தெக . 7;739* | காந்த | வேங் கை | கங்க | நுளம் ப | தடிய பாடி | குட மலை | பாண் டி |
| 3 | *தெக . 7;882* | சாலை | வேங் கை | கங்க | நுளம் ப | தத்த பாடி | தடிகை வழி | |
| 4 | *தெக . 3;3* | சாலை | வேங் கை | கங்க | தடிகை | நுள்ம் ப | | |
| 5 | *தெக . 26;742* | சாலை | கங்க | வேங்கை | நுளம்ப | தடிகை | | |
| 6 | *தெக . 6;31* | சாலை | கங்க | நுளம் ப | தடிகை | வேங் கை | | |
| 7 | *தெக . 6;32* | சாலை | கங்க | நுளம் ப | தடிகை | வேங் கை | | |
| 8 | *தெக . 22;22* | சாலை | கங்க | நுளம் ப | தடிகை | வேங் கை | | |
| 9 | *தெக . 2;226* | காந்த | கங்க | நுளம் ப | தடிகை வழி | வேங் கை | | |

★

| | |
|---|---|
| காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளல் | காந்த |
| சாலை கலமறுத்து | சாலை |
| வேங்கை நாடு | வேங்கை |
| கங்கபாடி | கங்க |
| நுளம்பபாடி | நுளம்ப |
| தடிகை வழி | தடிகை |
| தடிகை பாடி | தடிகை |
| குடமலை நாடு | குடமலை நாடு |
| கொல்லம் | கொல்லம் |
| கலிங்கம் | கலிங்கம் |
| ஈழமண்டலம் | ஈழ |
| இரட்டபாடி | இரட்ட |
| செழியரைத்தேசுகொள் | செழிய |

இந்த ஒன்பது கல்வெட்டுகளையும் ஆராயும்போது முன்பு குறிப்பிட்ட 10ஆம் ஆட்சியாண்டுக்குரிய 10 நாடுகளைவிட எண்ணிக்கை குறைந்துள்ளன. அதாவது முதலிரண்டு கல்வெட்டுகளிலும் ஏழு நாடுகள் விடுபட்டுள்ளன. பாண்டியநாடு புதிதாக (5ஆம் எண்) சேர்க்கப்பட்டுள்ளது. மூன்றாம் கல்வெட்டில் பாண்டியநாடு நீக்கப்பட்டு 6 நாடுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. மற்றைய 6 ( 4 முதல் 9 முடிய உள்ளவை) கல்வெட்டுகளில் பாண்டியநாடு நீக்கப்பட்டு 5 நாடுகள் குறைக்கப்பட்டு 5 நாடுகள் குறிக்கப்பட்டுள்ளன.

அடுத்து 15ஆம் ஆட்சியாண்டுக்குரிய ஒரு பத்துக் கல்வெட்டுக்களை ஆராய்ந்தால் ஒரு கல்வெட்டு 9 நாடுகளையும், ஆறு கல்வெட்டுகள் குறைவான எண்ணிக்கை கொண்ட நாடுகளையும் குறிப்பிடுகின்றன. மற்ற மூன்றில் சில நாடுகள் விடுபட்டுள்ளன. 16ஆம் ஆண்டைச் சேர்ந்த இரு கல்வெட்டுகள் 8 நாடுகளைக் குறிப்பிடுகின்றன. 16 முதல் 29 முடிய உள்ள ஆண்டுக் கல்வெட்டுகள் யாவும் 9 முதல் 11 நாடுகளைக் குறிப்பிடுகின்றன. பல நாடுகள் முறை மாறி வருகின்றன.

மேற்குறிப்பிட்ட செய்திகளிலிருந்து அறியப்படுவது மெய்க்கீர்த்திகளில் குறிப்பிடும் செய்திகள் ஒரே ஆண்டில் வேறு வேறு இடங்களில் வேறுபடுகின்றன. அரசவையில் செய்யப்பட்ட மெய்க்கீர்த்திகள் தொலைவில் உள்ள ஊர்களுக்குப் போய்ச் சேரும்பொழுது மிகவும் திரிந்து விடுகின்றன என்று கொள்ள வேண்டியுள்ளது. சரியான செய்திப் போக்குவரத்து இல்லாதது இதற்குக் காரணமா அல்லது வேறு ஏதேனும் காரணம் உண்டா என்பதை ஆராய வேண்டும்.

# 50. ஆய்த எழுத்து

கா. சந்தானலெட்சுமி, சிவகங்கை.

## முன்னுரை

எழுத்தமைப்புகளே ஒரு மொழிக்கு உருவம் தருவன. எழுத்துக்களின் வடிவம் மற்றும் வார்த்தைப் பயன்பாடு குறித்து அறிவதற்குக் கல்வெட்டுக்கள் முக்கிய மூலாதாரமாக அமைகின்றன. அந்தடிப்படையில் கல்வெட்டுக்கள் வழி ஆய்த எழுத்து குறித்து அறியலாகும் செய்திகளை இலக்கண, இலக்கிய கருத்துக்களின் துணையோடு விளக்கி ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

## ஆய்த எழுத்து

எழுத்துக்களின் இயங்கு தன்மையினைப் பொறுத்து முதலெழுத்து, சார்பெழுத்து என இருவகையாக இலக்கணிகள் வகைப்படுத்துவார்கள். சார்பெழுத்துக்களாகத் தொல்காப்பியர் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் ஆகிய மூன்றினையும் குறிப்பிடுகிறார். ஆய்தத்தினை தொல்காப்பியரும் நன்னூலாரும் சார்பெழுத்தாகக் கொள்கின்றனர். ஆனால் நேமிநாதரும் வீரசோழிய ஆசிரியரும் ஆய்தத்தை முதலெழுத்தாக்கி முதலெழுத்துக்கள் முப்பத்தொன்று என்பர்.

ஆய்த எழுத்து சார்ந்து வரும் எழுத்தின் பிறப்பிடத்தையே தனக்கும் பிறப்பிடமாகக் கொண்டது எனத் தொல்காப்பியர் கூறுகிறார். அரையளவு மாத்திரை பெறுவதால் இதனை மெய்யென்று முற்றியலுமாகக் கூறிவிட முடியாது. ஏனெனில், ஆய்தம் பாடல்களில் சிலவிடத்து உயிர்போல அலகு பெற்றும் வேறுசிலவிடத்து மெய்போல அலகு பெறாதும் வருகிறது. சான்றாகக் குறளில் ஆய்தம் பயிலும் இடங்கள் 49. இதில் ஆய்தம் அலகுபெறுமிடங்கள் 6 ஆகும். இதனால் ஆய்தத்தைத் தனிநிலை என்றும் அழைப்பர்.

தனி மொழிகளில் குறிலை அடுத்தும் உகரமூர்ந்த வல்லாறுக்கு முன்னதாகவும் அஃது, கஃசு, எஃகு என ஆய்தம் வரும். புணர்மொழிகளில் ல, ளகர வகர ஈறுகள் புணரும்பொழுது ஆய்தம் இடம் பெறுவதைக் காணலாம். கல் + தீது → கஃறீது எனவும், முன் + தீது → முஃறீது எனவும், அவ் + கடிய → அஃகடிய எனவும், மாறும் மொழிக் குறிப்புச் சொற்களான கஃறு (கருப்பு நிறத்தின் மிகுதியைக் குறிக்கும்), கஃறு (இரைச்சலின் மிகுதியையும் குறிக்கும்) என்பனவற்றிலும் ஆய்தம் வருவதைக் காணமுடிகிறது.

சார்பெழுத்துக்களின் பிறப்பு, எண்ணிக்கை குறித்துத் தொல்காப்பியரோடு பின்னாள் வந்த இலக்கணிகள் வேறுபடுகின்றனர். அதே சமயத்தில் சார்பெழுத்துக்களின் வடிவம் குறித்துத் தொல்காப்பியருக்குப் பின் வந்த இலக்கண நூலோர்கள் ஏதும் கூறவில்லை. சார்பெழுத்துக்கள் பற்றிய தொல்காப்பிய நூற்பா

*குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற*
*முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன*

என்றுரைக்கிறது.[1] இந்நூற்பாவிற்கு உரையாசிரியர்கள் கருத்துரைக்கும்போது பாடவேறுபாடுகள் எழுகின்றன. முப்பாற்புள்ளி என்ற சொல் ஆய்தத்தை மட்டும் குறிக்கக் கூடியதா? இல்லை குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றினையும் குறிக்கக் கூடியதா? என்ற வினா எழுகிறது.

**ஆய்தத்தின் வடிவம்**

ஆய்தத்தின் வடிவு குறித்து இரு கொள்கைகள் உரையாசிரியர்களிடையே நிலவுவதைக் காணமுடிகிறது.

| ஆய்தம், முப்பாற்புள்ளி என்ற கருத்தினர் | ஆய்தம் ஒரு புள்ளி என்ற கருத்தினர் |
|---|---|
| 1. இளம் பூரணர் | 1. பேராசிரியர் |
| 2. நச்சினார்க்கினியர் | 2. சங்கயாப்புடையார் |
| 3. பி.ச. சுப்பிரமணிய சாஸ்திரியார் | 3. சிவஞான முனிவர் |
| 4. வெள்ளை வாரணர் | 4. வேங்கிடராஜுலு ரெட்டியார் |
| | 5. வ. சுப. மாணிக்கம் |

இத்தகையதொரு சூழலில் கல்வெட்டுக்களில் ஆய்தம் பெறும் வடிவத்தை நோக்க வேண்டியுள்ளது. *புள்ளியிடுதல்* கல்லெழுத்துக்களின் வளர்ச்சியையும், மாற்றத்தையும் காட்டுவதால் புள்ளி என்பது கல்லெழுத்துக்களில் முக்கிய இடம்பெறுகிறது. எகர, ஒகர, குறில், நெடில் வேறுபாட்டினைக் காட்டப் புள்ளியிடப்பட்டதைக் கல்வெட்டெழுத்துக்கள் சுட்டுகின்றன.

தமிழ்நாட்டில் மெய்போன்ற வரி வடிவங்களில் புள்ளியிட்டு எழுதும் முறை தமிழ் பிராமி வரி வடிவங்களில் கி.பி. முதல் நூற்றாண்டிற்கும் ஆறாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்திலேயே ஏற்பட்டது[2] எனத் தொல்லியலார் கூறுகின்றனர்.

பொருள் வேறுபாட்டை ஏற்படுத்துகின்ற மெய்யெழுத்துக்களுக்கே புள்ளியிடும் முறை வழக்கில் இல்லாத நிலையில் ஒலியில் நுட்பமாக பொருள் வேறுபாடு தரும் சார்பெழுத்துக்களுக்குப் புள்ளியிடும் முறை வழக்கில் இல்லாது இருந்திருக்கலாம் அல்லது கல்லில் எழுத்துக்களை

வெட்டும் சிரமத்தினால் இவை விடுபட்டுப் போயிருக்கலாம்.

ஆய்தத்தின் வடிவமாகக் கொள்ளப்பட்டுள்ள ஃ மூன்று புள்ளிகள் பிராமியில் இகரம் எழுத்தைக் குறித்தது. இம்மூன்று புள்ளிகளின் இணைவாக இகரம் படிப்படியாக வளர்ச்சி பெற்றது. ஆனால் ஆய்தத்தின் வடிவம் என்று பார்க்கும்பொழுது காசாக்குடிச் செப்பேடுகளில் வெஃகா என்ற சொல்லில் இடம் பெறும் வடிவமே கிடைக்கின்றது.[3] இதன் காலம் கி.பி.750 ஆகும். இதற்கடுத்துப் பாண்டியன் வரகுண மன்னனின் திருச்செந்தூர் கல்வெட்டிலும் ஆய்தத்தின் வடிவம் ÷ என இடம் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது (*எபிகிராபியா இண்டிகா* தொகுதி 21). இதன் காலம் கி.பி.875 ஆம் ஆண்டிற்குப் பிறகு உள்ள காலக்கட்டமாகும்.

**நடுவுவாங்கி எழுதுதல்**

ஆய்தத்தின் ÷ என்ற வடிவங்களைக் கருத்தில் கொண்டு பார்க்கும்பொழுது நச்சினார்க்கினியர் கருத்து சிந்தனைக்குரியது. அவர் தொல்காப்பியர் குறிப்பிடும் முப்பாற்புள்ளிக்கு *நடுவு வாங்கியிட் டெழுதுப* என்கிறார். நடுவு வாங்கியிட்டு எழுதலாவது *மூன்று புள்ளி யெழுதாமல் மூன்று சிறு சுன்னமாக வளைத்தெழுதுதல்*[4] என்று கூறுகிறார்.

*நடுவு வாங்கியிட் டெழுதுப* என்பதற்கு இராகவையங்கார் பின்வருமாறு விளக்கம் தருகிறார்.

> *இதனால் அடுப்புக் கூட்டுப்போல ஃ என்றவாறு முப்புள்ளியுடையதாகக் கருதப்பட்ட ஆய்தம் மேலிடமான நடுப்புள்ளியின்றி •• என்று பிற்காலத்தே மாறலாயிற்றென அவ்வுரைகாரர் கருதினர் என்பது விளங்கும். எனவே வடமொழியுள் மேலுங்கீழுமாக அமைந்த விஸர்க்கத்தின் இரட்டைப் புள்ளிகளைப் போலவே தமிழில் அடுத்தடுத்து ஆய்தப்புள்ளிகள் முன்பு வழங்கின என்பதாயிற்று. மேலும் ஆய்தத்தின் ஃ என்ற வடிவத்தில் நடுவில் உள்ள புள்ளியை நீக்கிவிட்டு விஸர்க்கத்தின் வடிவத்தினை ஒப்பவே : என வழங்கினர் என்று கருதவும் இடமுண்டு என்கிறார்.*[5]

*நடுவு வாங்கியிட் டெழுதுப* என்பதனை நடுவில் ஒரு கோடும் மேலும் கீழும் ஒரு புள்ளியுமாக எழுதுதல் எனவும் பொருள் கொள்ளப்படுகிறது. நன்னூல் உரையாசிரியரான மயிலைநாதர் பலவகை வடிவுகளைக் கூறுமிடத்து *சதுரம், ஆயுதம், வட்டம் முக்கோணம் சிலை* என்பனவற்றைக் குறித்துள்ளார்.[6] ஆயுதம் என்பது நீண்ட வடிவினைக் குறிப்பதாக அமைகிறது. இதனால் நீண்ட கோடுள்ளதாய்ப் புள்ளி பெறுதலால் அவ்வாய்தமே ஆய்தம் என்றும் ஆய்தப்புள்ளி என்றும் வழங்கியிருக்கலாம். மேலும் கீழும் ஒரு புள்ளியுமாக ÷ என்ற வடிவில் எழுதப்பட்டிருக்கலாம் என ச. சுப்பிரமணியன் அவர்கள் கருதுகிறார்.[7] கல்வெட்டுச் சான்றுகளும் இதனை உறுதி செய்வதாக அமைகிறதெனலாம்.

காசாக்குடிச் செப்பேட்டில் ஃ என இடம் பெறும் ஆய்தமானது. வரகுணப் பாண்டியனின் திருச்செந்தூர்க் கல்வெட்டில் ÷ என இடம் பெறுகிறது. இவ்விரு வடிவங்களும் வேறுவேறு என்று கொள்வதைவிட ÷ என்ற ஒரே வடிவமெனக் கொள்ளலாம். ஏனெனில் காசாக்குடிச் செப்பேடுகளின்று எடுக்கப்பட்ட எழுத்துக்களைச் சித்திரிக்கப்பட்ட வகை எனத் தி.நா. சுப்பிரமணியன் அவர்கள் குறிப்பிடுகிறார்.[8] ÷ என்ற வடிவமே சித்திரித்து எழுதும் பொழுது ஃ என மாறியிருக்கலாம் என்று கருதக்கூடுகிறது.

எனவே நச்சினார்க்கினியர் *நடுவு வாங்கியிட் டெழுதுப* என்று கூறியது இவ்வடிவத்தையே என்பது தெரியவருகிறது.

**ஆய்தவடிவும் விசர்க்க வடிவும்**

ககாரத்தின் *ஜிஹ்வா மூலமாகவும்,* பகாரங்களில் முன் *உபத்மானியமாகவும்* ஒலிக்கப்பெறுவது விசர்க்கமாகும். விசர்க்கமும் ஆய்தமும் ஒத்தஒலிகள் என்பது இராகவையங்கார், கால்டுவெல், பி.எஸ். சுப்பிரமணிய சாஸ்திரியார் ஆகியோரின் கருத்தாகும்.

கால அடிப்படையில் விசர்க்கத்தினை நோக்கும்பொழுது தமிழ்நாட்டில் கிடைக்கக்கூடிய பழைமையான கல்வெட்டுக்களில் விசர்க்கம் இடம்பெறவில்லை. பழமையான பிராமி கல்வெட்டுக்களில் வடமொழியில் உள்ள அநுஸ்வாரம், விசர்க்கம் ஆகிய இரண்டும் காணப்படவில்லை.[9]

கி.பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கிடைக்கும் கிரந்த கல்வெட்டுகளில் விசர்க்கம் காணப்படுகிறது. விசர்க்கத்தின் வடிவமாக : என்ற குறி பெரும்பாலான கல்வெட்டுகளில் இடம் பெற்றாலும், ÷ என்ற வடிவமாக விசர்க்கம் எழுதப்பட்டுள்ளதைப் பிற்காலப் பாண்டியர் கல்வெட்டில் காணமுடிகிறது.[10] கி.பி. எட்டாம் நூற்றாண்டில் கிடைக்கின்ற ஆய்தத்தின் வடிவமும், விசர்க்க வடிவத்தினை ஒத்திருப்பதிலிருந்து விசர்க்கத்தின் தாக்கம் ஆய்தத்திற்கு ஏற்பட்டுள்ளது என்பது தெரியவருகிறது.

கி.பி.எட்டாம் நூற்றாண்டினரான திருமங்கை ஆழ்வார் வரையிலான பன்னிரு வைணவ ஆழ்வார்கள் அவ்வப்போது பாடிய திருவாய்மொழிப் பாடல்கள் அனைத்தும் செம்மையான வட்டெழுத்துக்களைக் கொண்டதாகவே எழுதப்பட்டிருக்க வேண்டும்[11] என்பதால் கி.பி.9ஆம் நூற்றாண்டைச் சார்ந்த திருச்செந்தூர் வட்டெழுத்துக் கல்வெட்டில் ஆய்தத்தின் வடிவமானது விசர்க்கத்தின் தாக்கத்தைப் பெற்றுள்ளதெனலாம்.

அஃகம் என்பதற்கு மதிப்படங்கியது, ஈடாக எனக் கல்வெட்டுக் கலைச்சொல் அகரமுதலி[12] பொருள் தருகிறது. அக்கம் என்ற சொல்லும் கல்வெட்டுக்களில் இடம் பெறுகிறது.[13] எனவே அக்கத்தின் மாற்று வடிவமாக அஃகம் இடம்பெறவில்லை. அஃகம், அக்கம் என்ற இரு சொற்கள் மக்கள் வழக்கிலிருந்ததை அறியமுடிகிறது.

சங்க இலக்கியங்களில் கையாளப்பட்ட வெஃகி, வெஃகா என்ற சொற்கள் பிற்கால இலக்கியங்களில் அருகியே காணப்படுகின்றன. கல்வெட்டுகளில் இதே பொருளைத் தரும் விரும்பிய, விரும்ப போன்ற மாற்றுவடிவங்கள் கையாளப்பட்டுள்ளன. இஃது என்ற வடிவத்திற்கு மாற்றாக இய்து என்ற வடிவம் பயன்படுத்தப்பட்டு உள்ளது. வேள்விக்குடி சாசனத்தில் (பத்தாம் ஏடு முன்புறம்) *இய்தெழுதின சுத்த கேசரிப் பெரும்பணைக்காரனுக்கு* என்று இடம் பெறுகிறது. ஆய்தத்திற்கு எதுகையாக யகரம் இலக்கியங்களில் வருகிறது. ஆனால் ஆய்தத்திற்கு மாற்றாக அது இடம் பெறுவதைக் கல்வெட்டில் காணமுடிகிறது. இத்தை என்ற வடிவம் இஃதை என்பதற்கு மாற்றாக வருகிறது. *இத்தை அகிதம் பண்* எனத் தருமபுரிக் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளது. இத்தை திருவாசகத்திலும் இடம் பெறுவதைக் காணலாம்.[14]

இதிலிருந்து இலக்கிய வழக்கோடு கல்வெட்டு வழக்கு தொடர்புடையதாக அமைவதைக் காணலாம். சொற்களில் தனிக்குறிலை அடுத்தும் உயிரேறிய வல்லாறுக்கு முன்னுமாக இடம்பெறும் ஆய்தத்தின் வருகைப்பாட்டில் கல்வெட்டுச் சொற்களில் எவ்வித மாற்றமும் இல்லை என்பது தெரியவருகிறது.

காசாக்குடிச் செப்பேட்டின் காலம் கி.பி.8ஆம் நூற்றாண்டாகும். நச்சினார்க்கினியர் காலம் கி.பி.13ஆம் நூற்றாண்டு ஆகும். எனவே ஆய்த எழுத்தானது கி.பி.எட்டாம் நூற்றாண்டிலே ÷ என்ற வடிவத்தில் எழுதப்பட்டதென்பதும் அவ்வடிவமே கி.பி.13ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பாடும் தொடர்ந்தது என்பதும் பெறப்படுகிறது.

முடிவுரை

கிடைக்கின்ற ஆதாரங்களை வைத்துப் பார்க்கும்பொழுது ஆய்தத்தின் வடிவங்களாக ஒரு புள்ளி • மூன்று புள்ளி ∴ மூன்று சுன்னங்கள் ஃ நடுவுவாங்கி எழுதிய வடிவமான ÷ ஆகியன பயன்படுத்தப்பட்டுள்ளன எனலாம்.

தொல்காப்பியர் குறிப்பிடும் பஃது என்ற எண்ணுப் பெயர் வடிவம் இலக்கியங்களில் இடம் பெறுகின்ற போதிலும் கல்வெட்டுகளில் இடம்பெறவில்லை. சான்றாக,

*முப்பதும் நீலகந்தி ஆறும் கோமளம் முப்பத்து மூன்று*
*தாளம் இருபதும் (தெ.க 2 : 7)*

என்று வருகிறது. உயிரெழுத்தினை முதலெழுத்தாகக் கொண்டு ஆரம்பிக்கும் வார்த்தைகளுக்கு முன்னால் ஆய்தம் பயின்று வரும். மேலும் சுட்டும் சொற்களாக அஃது இஃது தான் பெரும்பாலும் வரும். ஆனால் இந்நிலை கல்வெட்டில் இல்லை. அது, இது என்ற சொல்லாட்சியே இடம் பெறுகிறது.

| வ.எண் | ஆதாரம் | இடம் | மன்னன் மற்றும் காலம் | ஆய்தம் இடம் பெறும் வார்த்தைகள் |
|---|---|---|---|---|
| 1. | *தெ.க.தொ. 3:68* | பாண்டவபெருமாள் கோயில் வடக்குச் சுவர் காஞ்சிபுரம் | குலோத்துங்கச் சோழ தேவர் - I *(கி.பி.1070-1120)* 5வது ஆட்சியாண்டு *(கி.பி.1075-76)* | 4வது வரி (தி)ரு (வெ) வ (ஃ) கா வாழ்வ (ா) நுக்கு |
| 2 | எபிகிராபிகா இண்டிகா 21 pp. 101ff. | சுப்பிரமணிய சுவாமி கோயில் திருச்செந்தூர் | பாண்டியன் வரகுண மகாராஜா 13 வது ஆட்சியாண்டு (கி.பி.875 ஆண்டிற்குப் பிறகு) | அஃகமாக என்ற சொல் 12 இடங்களில் இடம் பெறுகிறது (வட்டெழுத்து) வரிகள் 31, 35, 58, 61, 110, 122, 135, 145, 159, 169, 188, 191 |
| 3 | பல்லவர் செப்பேடு முப்பது | காசக்குடி செப்பேடுகள் 9 வது ஏடு பின்புறம் | இரண்டாம் நந்திவர்மன் (கி.பி.750-54) | 115 வது வரி வெட்கா (தமிழெழுத்து) |
| 4 | தென்னிந்திய கோயில் சாசனங்கள் | *சகம் 434* D.3302 v.60 | 15 ஆம் நூற்றாண்டு | தி(ருவ்) வ(க்) (ஃ) கா னாயினார் திருவாக்கானாயனார் திருவெஃகா நாயனார் என வாசிக்க (சிதைந்துள்ளது இப்பகுதி) |

---

1 *தொல்காப்பியம்*, நூன்மரபு, நூற்பா-2.

2 வெ. வேதாசலம், பூலாங்குறிச்சிக் கல்வெட்டு எழுத்துக்கள்

3 *பல்லவர் செப்பேடுகள்* - காசாக்குடிச் செப்பேடுகள் - 9வது ஏடு பின்புறம்.

4 *தொல்காப்பியம்*, நச்சினார்கினியர் உரை, ப.20.

5 மு.இராகவையங்கார், *ஆராய்ச்சித் தொகுதி*, பக்.128.

6 *நன்னூல்*, மயிலைநாதருரை - நூ. 453 விளக்கம்.

7 S.Subramanyan, Phonology (*eluttu*) - 57.

8 தி.நா. சுப்பிரமணியன், *பண்டைத் தமிழ் எழுத்துக்கள்*, பக்.63.

9 *மேலது* ப.21.

10 Dalavay Agraharam Plates - *TAS-1*, pp.126-7.

11 சி. கோவிந்தராசனார், *தமிழெழுத்தின் வரிவடிவம்*, ப.65.

12 சி. கோவிந்தராசனார், *கல்வெட்டுக் கலைச்சொல் அகரமுதலி*, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1987.

13 *தென்னிந்திய கல்வெட்டுத் தொகுதி 22 : 24* (காசு ஒன்றுக்கு அக்கம் பன்னிரண்டாக்கி).

14 திருவாசகம், திருப்பள்ளியெழுச்சி 25 : 7 இத்தை மெய்யெனக் கருதி நின்றிடர்க்கடல் சுழித்தலைப் படுவேனை.

# 51. The Palaeolithic Site of Attirampakkam, Tiruvallur District, Tamil Nadu

**Shanti Pappu, Pune.**

## கட்டுரைச் சுருக்கம்

இராபர்ட் புரூஸ்புட் காலந்தொட்டு இப்பகுதியில் தொல்பழங்காலம் பற்றிய ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. கட்டுரை ஆசிரியர் சாந்திபப்பு அண்மையில் அத்திரம்பாக்கத்தில் மேற்கொண்ட அகழாய்வை ஒரு திருப்பு முனையாகக் கருதலாம். இரண்டாவது பருவ (ஜனவரி - மார்ச்சு 2000) அகழாய்வில் 5 x 5 மீ அளவில் ஒரு அகழாய்வுக் குழி ( T6 ) மண்மேட்டின் உச்சியில் தோண்டப்பட்டு பின்னர் இக்குழி 2 x 2 மீ அளவில் மேலும் விரிவுபடுத்தப்பட்டது. இதில் மொத்தம் 12,000 கற்கருவிகள் சேகரிக்கப்பட்டன. இவை அனைத்தும் அச்சுலியன் முதல் பழங்கற்காலத்தின் இறுதிக் கட்டம் வரையிலான காலகட்டத்தைச் சேர்ந்தவை. இவையும், இவற்றோடு புதைபடிவமாகக் கண்டுபிடிக்கப்பட்ட உயிரினம் சார்ந்த பல் மற்றும் விலங்கின் காலடித்தடம் போன்றவை தற்பொழுது சோதனைக் கூடத்தில் ஆய்வில் உள்ளன. மூன்றாவது பருவத்தில் (ஜனவரி - ஏப்ரல் 2002) பலவகையான பண்பாட்டு நிலைகளை ஆய்வு செய்யும் நோக்கில் நான்கு அகழாய்வுக் குழிகளும் படிநிலையுடைய குழி ஒன்றும் தோண்டப்பட்டன. அச்சுலியன் கட்டம் 30 சதுர மீட்டர் பரப்பளவும் பழங்கற்காலத்தின் இறுதிக்கட்டம் 85 சதுரமீட்டர் பரப்பளவும் அகழ்வு செய்யப்பட்டது. இதில் 5000க்கும் மேற்பட்ட கற்கருவிகள் கிடைத்தன. இவற்றுடன் கண்டுபிடிக்கப்பட்ட மரவேர்கள் கொண்ட புதை படிவம் (fossilized calcareous root casts) காலக்கணிப்பிற்காக அனுப்பப்பட்டுள்ளது. இவை அனைத்தும் தற்பொழுது பகுப்பாய்வு செய்யப்பட்டு வருகின்றன. தொடக்ககால மனிதனின் வாழ்விட அமைப்பு முறையின் சுற்றுப்புறச் சூழலை மீண்டும் பார்ப்பதற்குத் தேவையான முயற்சியாக பன்முக நெறிசார் ஆய்வு தற்பொழுது நடைபெற்று வருகிறது. அத்திரம்பாக்கம் மற்றும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளில் மேலும் அகழாய்வு மேற்கொண்டால் தமிழ்நாட்டின் இப்பகுதியில் காணப்பட்ட ஆரம்பகால மனிதனின் குடியிருப்பு முறையை நன்கு அறியலாம்.

## Introduction

The Palar river basin, Tamil Nadu, marks the southernmost extension of the Indian Lower and Middle Palaeolithic. As part of an ongoing project to investigate the prehistoric archaeology and Palaeoenvironments of this region, multidisciplinary investigations and excavations at selected prehistoric sites were initiated in 1999. The first site to be excavated is that

* In the making of this article Kumar Akilesh and Rhea Mitra helped a lot.

of Attirampakkam, Tiruvallur district, Tamil Nadu (Fig 1). Excavations are being conducted by the Sharma Centre for Heritage Education, under the direction of Dr. Shanti Pappu. Collaborators in this project are Prof. Maurice Taieb, Dr. Yanni Gunnell, Prof. Jean-Philip Brugal, Dr. K.Anupama and Prof. R. Sukumar (scientific research in geology, geomorphology, geochronology; palaeontology, palaeobotany, and palaeoecology) and Kumar Akhilesh (research assistant, archaeology). The Palaeolithic archaeology of the Kortallayar river basin (which forms a part of the Palar river basin) has been the subject of investigation for over a century (Foote 1866, Paterson 1939; Krishnaswami 1938, 1947; I.A.R. 1964-65, 1965-66, 1966-67, 1978-79; Swami 1976). These studies resulted in the establishment of a four-fold terrace sequence with associated prehistoric cultures; and the identification of a Lower Palaeolithic Acheulian handaxe based "Madras Industry".

Subsequently, geoarchaeological investigations were undertaken by Pappu (Pappu *et al.* 1994, Pappu 1996, 1997, 1999, 2000, 2002) over an area of 200 $km^2$ in this region (79°40':79°56' E and 13°17':13°10'N). A study of site-formation processes led to the categorization of sites into several types based on their sedimentary context, artefact spatial distribution and morphology and degree of integrity. The research forms a part of the broader objective of understanding variability seen in the Palaeolithic record and of exploring alternate models of hominid behavioural strategies during the Middle to Late Pleistocene.

As a result of these studies, a series of Palaeolithic sites were designated as being in a relatively well-preserved context and thus as having potential for excavation and for yielding greater information on early hominid behavioural strategies in this region. The first site where excavations have been initiated is that of Attirampakkam, and brief results of the first season of excavation (1999) are presented here. During the first season (March-April 1999), five test pits (2 x 2 m each) were sunk at different parts of the site in order to determine the cultural sequence. The significance of this excavation was the discovery, for the first time in the Indian context, of Acheulian tools in a 4 m thick deposit of laminated clay occurring at depths of 2.7 to 6.90 m below the surface, in what was previously termed the Sriperumbudur/Avadi series of Lower Cretaceous shales. The subsequent discovery of animal footprints in association with Acheulian artefacts and the presence of three fossil faunal teeth also contribute to the distincitive character of this site. These factors indicate the exceptional potential of this site in informing on palaeoenvironments and early hominid adaptations in an ecological context hitherto unknown in the Indian Palaeolithic.

## The Region

The regional geological context comprises the NNE-SSW-trending Allikulli (Fig. 1) and Satyavedu hills (200-380 m AMSL) in the west. Lower Cretaceous shales are capped by Tertiary to Early Quaternary ferricretes. Older ferricrete (1.5-2.5 m thick), overlying bedrock, contains Acheulian to Middle Palaeolithic artefacts. Younger ferricretes contain Middle Palaeolithic artefacts and microliths. The region falls in an area of seasonally dry tropical conditions, receiving 105 to 125 cm of annual rainfall with a major peak during late autumn and early winter (see Pappu 1999, 2002). The area is drained by the river Kortallayar and a network of ephemeral streams.



## The Site of Attirampakkam: History of Research

The site of Attirampakkam (13° 13' 50" N and 79° 53' 20" E), is located on the north bank of the Attirampakkam *odai* (gully), at a distance of 4 km to the west of the river Kortallayar, Northern Tamil Nadu. The area is dissected by the Attirampakkam *odai* which arises 2 km upstream at the tank at Aryathur. Numerous rain rills dissect the site and gullies and artefacts are exposed eroding out over an area of around 50,000 sq. m. The site was discovered by Robert Bruce Foote and William King of the Geological Survey in September 1863. Subsequent investigations were carried out by Krishnaswami (1938) and excavations were conducted by K.D. Banerjee (1963-64:20-22). Subsequent research by Pappu (1997, 2002) led to the mapping of artefacts across 50,000 sq m of the site. The site was divided into grids and 16 1 x1 m grids were sampled. The mean density of tools was 28/sq m. No trenches could be taken and gully sections were studied (see Pappu 2002). Despite differences in terminology, all scholars

agreed on the fact that the Acheulian horizon was attributed to a 'derived' lateritic or ferruginous gravel deposit disconformably overlying Lower Cretaceous shales of the Sriperumbur/Avadi formation.

**Aims of the Present Excavation**

The present excavations are a part of a long-term project aimed at investigating Prehistory and Palaeoenvironments in the Palar river basin. The first site to be excavated in this project is that of the Lower and Middle Palaeolithic site of Attirampakkam, South India. This is being done with a view towards establishing the nature of hominid activities at the site, the environmental context of the site, and the age of the assemblages. Specific points to be addressed include: a) the stratigraphy and culture sequence at the site; b)the broader geomorphic context of the site; c) the age of the Acheulian and Middle Palaeolithic; d) the nature of early hominid activities at the site; e) studies of the nature of Lower to Middle Palaeolithic transition at this site; and f)determination of the age of the Acheulian through palaeomagnetic measurements and other dating techniques.

**Results of the First Season of Excavation (March-April 1999)**

During the first season, five 2 x 2 m test pits were excavated in March-April 1999 in order to determine the stratigraphy and culture sequence. Test pit-T3 was excavated to a depth of 7.30 m, from which a total of 646 artefacts/natural clasts were recovered (Fig.2). Layers 1, 3 and 4 are archaeologically sterile, with sporadic redeposited artefacts. Artefact-bearing horizons include Layers 2, 5 and 6. Layer 2 (ferricrete) yielded possible Late Middle to Upper Palaeolithic tools, a transitional Late Acheulian-Middle Palaeolithic industry occurs in Layer 5 (ferruginous gravels); while an Acheulian industry was noted on the surface of Layer 6 (clay) at the junction with Layer 5; and in Layer 6 continuing down to a depth of 6.90m. Soil and sediment samples were collected in order to provide conclusive chronometric dates for the site and for mineralogical and geochemical characterization of the deposits in relation to the artefact horizons. A contour map of the site at 1 m intervals was prepared.

**Acheulian Assemblage from Layer 6 (clay)**

A total of 286 artefacts and 22 clasts from Layer 6 (2.7-6.90 m) from test trench T3 are considered here. The sample from test-trench T3 reveals that the principal raw material for Acheulian artefacts is quartzite pebbles and cobbles derived from outliers of the Allikulli hills. Some degree of preliminary manufacture and trimming of tools at the site is indicated by the presence of an anvil on a rolled, rectangular cobble, pitted on one face; as also two hammerstones; and a few cores. Cores include prepared cores (Levallois, discoidal), irregular flake cores, flake and flake-blade cores and

large core flakes. Broken tools are snapped across the proximal or distal ends. Debitage also comprises unretouched flakes/'knives', with edge damage and which may possibly have been utilized. Artefacts are on flakes, flake-blades, pebbles, or on naturally available pieces resulting from thermal weathering of cobbles. In addition to this, older or broken tools were also reused, as also debitage flakes and chunks. Reuse of older artefacts as evidenced by differential patination is also noted, and may be a reflection of the absence of raw material at the site. Artefact types include handaxes, cleavers, cleaver-flake, notches, borers, denticulates, knives, scrapers, core-scrapers, picks, and knives. Chopper-chopping tools are nonexistent, although a few cores do appear to grade into chopping tools, possibly indicating a continuum along a reduction sequence (Fig.3).



The assemblage from the test trench, in Layer 6, indicates that a limited degree of tool manufacture and trimming was carried out at the site. Most raw material clasts and cores were imported to the site. Technologically, in comparison with other industries in India, a Late Acheulian industry is represented, with a Levallois element and presence of flake-blades (Misra 1972; Paddayya 1984) and differs from the Middle Palaeolithic of the Kortallayar basin (Pappu 1996, 2001, 2002).



## Conclusion

Excavations were continued during the second season (January-March 2000). A 5 x 5 trench was laid down at the top of the mound (Trench T6), later extended by 2 x 2 m. A total sample of more than 12,000 artefacts was collected, ranging in age from the Acheulian to the Upper Palaeolithic. Other finds include fossil faunal teeth and possible animal footprints, which are currently under investigation. Artefacts are currently under study. During the third season (January-April 2002), four trenches and one step-trench were excavated in order to investigate different cultural phases at the site. A total area of 30 sq m for the Acheulian and 85 sq m for the Upper Palaeolithic were excavated. More than 5,000 tools were obtained. Other finds included fossilized calcareous root casts, which have been sent to obtain chronometric dates. These are currently under analysis. Multidisciplinary studies are in progress in an attempt to reconstruct past environments at the site, in relation to early hominid settlement patterns. A program of further excavations at Attirampakkam and neighbouring sites will aid in a better understanding of early hominid settlement strategies in this part of Tamil Nadu.

## Acknowledgements

We extend our thanks to the Archaeological Survey of India, to the Department of Museums and Archaeology, State Government of Tamil Nadu, Dr. R. Kannan, Commissioner of Museums and Archaeology, Government of Tamil Nadu, Prof. K.V. Raman, Prof. N.C.Ghosh and Prof. V.N. Misra, French Institute, Pondicherry, CEREGE, CNRS-France, Centre for Ecological Sciences, University of Paris. The Homi Bhabha fellowship provided S.Pappu with funds for excavation.

## References

Foote, R.B. 1866, 'On the occurrence of stone implements in lateritic formations in various parts of the Madras and North Arcot districts', *Madras Journal of Literature and Science*, 3rd.series Part II, pp. 1-35, with an appendix by William King, pp. 36-42.

*I.A.R. : Indian Archaeology. A Review*, 1964-65 to 1966-67 and 1978-1979.

Krishnaswami, V.D. 1938, 'Environmental and cultural changes of Prehistoric man near Madras', *Journal of the Madras Geographic Association*, vol. 13, pp. 58-90.

Krishnaswami, V.D.1947, 'Stone Age India', *Ancient India*, vol. 3, pp.11-57.

Pappu, S. 1996, 'Reinvestigation of the prehistoric archaeological record in the Kortallayar Basin, Tamil Nadu', *Man and Environment*, vol. XXI, pp. 1-23.

Pappu, S. 1997, *Pleistocene Environments and Stone Age Adaptations in the Kortallayar Basin, Tamil Nadu*, Unpublished Ph.D. Dissertation, Poona University, Pune.

Pappu, S. 1999, 'A study of natural site formation processes in the Kortallayar Basin, Tamil Nadu, South India', *Geoarchaeology, An International Journal*, vol. 14, no.2, pp. 127-150.

Pappu, S.2002 *A Re-examination of the Palaeolithic Archaeological Record of Northern Tamil Nadu, South India*, Oxford: BAR-International Series in press.

Pappu, S., Y. Gunnell, M. Taieb, J-P. Brugal and Y. Touchard, *Ongoing excavations at the Palaeolithic Site of Attirampakkam, South India: Preliminary Findings*, manuscript submitted for publication.

Paterson, T.T. 1939, 'Stratigraphic and typologic sequence of the Madras Palaeolithic Industries', in *Studies on the Ice Age in India and Associated Human Cultures*, eds. H. de Terra, & T.T. Paterson, Carnegie Institution of Washington Publication No. 493, Washington, pp. 327-330.

Soundara Rajan K.V. 1966, *Prehistoric and Protohistoric Madras.* Unpublished Document, Deccan College, Pune.

Swami A.1976, *Archaeology of the Chingleput District (Prehistoric Period).* Unpublished Ph.D Dissertation, University of Madras, Madras.

# 52. காஞ்சிபுரம் மாவட்டத் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

கி. குமார், சென்னை.

காஞ்சிபுரம் மாவட்டத்தில் பழைய கற்காலம் மற்றும் பெருங்கற் படைக்காலம் குறித்த சான்றுகள் ஏற்கனவே கிடைத்திருந்தாலும், புதிய கற்காலம் குறித்த சான்றுகள் கிடைக்காமல் இருந்தன. ஆனால், சமீப காலத்தில் மேற்கொள்ளப்பட்டுவரும் ஆய்வுகள் மூலம் இப்புதியக் கற்காலப் பண்பாடு குறித்த சான்றுகள் காஞ்சிபுரம் மாவட்டத்தில் ஏராளமான இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன.* இப்புதியக் கற்காலக் கருவிகள் அனைத்தும் பழைய மற்றும் இடைக் கற்காலக் கருவிகளுடன் கிடைத்துள்ளன. மேலும், புதிய கற்காலத்திற்கு சற்று முந்தைய (Pre-Neolithic stage) காலத்தைச் சேர்ந்த மெருகேற்றப்படாத கற்கோடாரிகள் ஒரத்தி மற்றும் யானைக்குள்ளம் ஆகிய கிராமங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கையால் செய்யப்பட்ட சிவப்பு நிற மட்பாண்ட வகையைச் சேர்ந்த பானை ஓடுகள் ஒரத்தியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளதால், அவ்வூர் ஓர் புதிய கற்கால ஊரிருக்கையாக விளங்கியிருக்கலாம் என்றும் கருதப்படுகிறது.

தற்போதைய காஞ்சிபுரம் மாவட்டத்தில் பழைய கற்காலப் பண்பாடு நிலவியதற்கான சான்றுகள் 40க்கும் மேற்பட்ட ஊர்களில் ஏற்கெனவே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. 1863ஆம் ஆண்டு இராபர்ட் புருஸ் புட் என்னும் நிலப்பொறியியல் வல்லுநரால் இம்மாவட்டத்திலுள்ள பல்லாவரத்தில் இந்தியாவின் முதலாவது கற்கருவி கண்டுபிடிக்கப்பட்டது. அதற்குப் பின்னர் கள ஆய்வுகள் மேற்கொண்ட டாக்டர் ஆர்.வி. ஜோஷி, டாக்டர் கே.டி. பானர்ஜி, எம்.வி. குர்ஷி, எம்.வி.என். கிருஷ்ணராவ், எஸ்.கே.சின்கா, கே.பி.புனாச்சா, அ. சுவாமி, து. துளசிராமன், கோ. திருமூர்த்தி, ப. சண்முகம் மற்றும் ஜே.எஸ். சிங்காரவேலன் ஆகியோரால் இம்மாவட்டத்தில் பல ஊர்களில் பழங்கற்காலக் கருவிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ள திருப்பெரும்புதூர் மற்றும் செங்கல்பட்டு ஆகிய வட்டங்களிலும் இப்புதிய கற்காலக் பண்பாடு நிலவியிருந்தமைக்கானச் சான்றுகள் அண்மையில் கிடைத்துள்ளன. திருப்பெரும்புதூரிலிருந்து 16 கிமீ கிழக்கே அமைந்துள்ள மாகாளியம் என்னும் கிராமத்தில் சென்னைப் பல்கலைக்கழக தொல்லியல் துறையின்

---

* இந்தியத் தொல்லியல் பரப்பாய்வுத்துறையின் திரு.கோ.திருமூர்த்தி மதுராந்தகம் வட்டத்தில் பல புதிய கற்காலக் கருவிகளைக் கண்டுபிடித்துள்ளார்.

தலைவர் முனைவர் ப.சண்முகம் உடைந்த நிலையில் ஒரு புதிய கற்காலக் கருவியினை கண்டுபிடித்துள்ளார். மேலும், இம் மாவட்டத்தில் அண்மையில் இக்கட்டுரை ஆசிரியரால் கண்டுபிடிக்கப் பட்டுள்ள பழங்கற்கால, புதிய கற்காலப் பண்பாடுகள் குறித்த சான்றுகளின் விவரங்கள் ஊர் வாரியாக கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

பழைய கற்காலத்தைத் தொடர்ந்து புதிய கற்காலப் பண்பாடும் காஞ்சிபுரம் மாவட்டத்தில் பரவலாக விளங்கியிருந்தமையை மேற்காணும் புதிய கண்டுபிடிப்புகளின் மூலம் அறிய முடிகிறது. வேலூர் மற்றும் திருவள்ளூர் மாவட்டங்களின் வழியாக செல்லும் கொரத்தலையாறு எனப்படும் பழைய பாலாற்றின் படுகையில் பழங்கற்காலப் பண்பாடு சிறப்புற்று விளங்கியிருந்தமைக்கான சான்றுகள் ஏராளமாக கிடைத்துள்ளன. ஆனால், தற்போதைய பாலாறு செல்லும் காஞ்சிபுரம் மாவட்டத்தில் பரவலாக ஒருசில இடங்களில் மட்டுமே இப்பண்பாடு விளங்கியிருந்தமையை கீழ்க்காணும் கண்டுபிடிப்புகளின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

| ஊர் | அமைவிடம் | வட்டம் | பண்பாடு | தொல்பொருள்கள் | குறிப்பு |
|---|---|---|---|---|---|
| திருப்பெரும் புதூர் | பாலாற்றிலிருந்து ஏரிக்கு நீர்கொண்டுவரும் பம்பக் கால்வாயின் மேற்கு சரிவிலுள்ளது | திருப் பெரும் புதூர் | புதிய கற்காலம் | புதிய கற்காலக் கருவி (7.7 X 4 செமீ) | --- |
| சாலமங்கலம் | மேற்குப் பகுதியில் காப்புக் காட்டில் உள்ளது | திருப் பெரும் புதூர் | இடைப்பழங் கற்காலம் | வெட்டுக்கருவி, கூர்முனைக் கருவிகள் | இவ்வூர் படைப்பைக்கு வட மேற்கே 2 கிமீ தொலைவில் உள்ளது |
| | | | கடைப் பழங் கற்காலம் | வாய்ச்சி, சுரண்டிகள் | |
| | | | புதிய கற்காலம் | புதிய கற்காலக் கருவிகள் (8.5 X6 செமீ) | |
| | | | பெருங் கற்காலம் | கல்வட்டம், இரும்பு உருக்கு உலை, மண் குழாய்கள்,.இரும்புக் கழிவுகள், கருப்பு-சிவப்பு மற்றும் சிவப்பு நிறப் பானை ஓடுகள் | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கல்வாய் | கல்வாய் மலையின் கிழக்குச் சரிவில் உள்ளது | செங்கல்பட்டு | புதிய கற்காலம் | புதிய கற்காலக் கருவிகள் 6 கிடைத்து உள்ளன. ஒரு கருவி (7 x 4.5 செ.மீ) உடைந்த ஒரு பெரிய கற்கோடாரியின் வெட்டுமுனை (7.5 x 5.5 செமீ) நான்கு சிறிய கருவிகள் | இவ்வூர் கூடு வாஞ் சேரிக்கு தென் கிழக்கே 8 கிமீ தொலை வில் உள்ளது |
| | இவ்வூருக்கு வடமேற்கே அமைந்துள்ள மலையின் கிழக்கு அடிவாரம் | செங்கல்பட்டு | இடைப் பழங் கற்காலம் | ஓவேட் எனப்படும் நீள்வட்டக் கருவி, கைக்கோடாரி, சுரண்டிகள் | இவ்வூர் கூடு வாஞ் சேரிக்கு தென் கிழக்கே 10 கிமீ தொலை வில் உள்ளது |
| சிறுமாத் தூர் | வடக்கே உள்ள மலையின் தெற்கு அடிவாரத்தில் உள்ள காப்புக்காட்டில் உள்ள சரிவான நிலப்பகுதி | திருப்பெரும் புதூர் | முதல் பழங் கற்காலம் | அச்சுலியன் வகைக் கைக்கோடாரி, கிழிப்பான், சாப்பர் எனப்படும் வெட்டுக்கருவி | படைப்பைக்குதெற்கே 2 கிமீ தொலைவில் உள்ளது |
| | | | இடைப்பழங் கற்காலம் | கைக்கோடாரி, வெட்டுக்கருவி, கிழிப்பான், சுரண்டி | |
| | | | கடைப் பழங் கற்காலம் | செதுக்குக் கருவி, பிளேடு, சில்லுக் கருவி, சுரண்டி | |
| சேத்துப் பட்டு | இவ்வூருக்கு வடக்கே உள்ள மலையின் அடிவாரத்தில் உள்ளது | திருப்பெரும் புதூர், | கடைப் பழங் கற்காலம் | கிழிப்பான், சுரண்டி போன்ற சில்லுக் கருவிகள் | திருப்பெரும்புதூருக்கு தென் கிழக்கே 12 கிமீ தொலைவில் உள்ளது |
| | | | பெருங்கற் காலம் | ஈமச்சின்னங்கள், விலங்கு வடிவ தாழி மற்றும் முதுமக்கள் தாழிகளின் பாகங்கள், கருப்பு-சிவப்பு மற்றும் சிவப்பு நிற பானை ஓடுகள் | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வளையாக்கரணை | கிழக்கே காப்புக்காட்டில் உள்ள சிறிய ஓடையின் சரிவான பகுதி | திருப்பெரும் புதூர் | முதல் பழங் கற்காலம் | கைக்கோடாரி, வெட்டுக்கருவி, கூர்முனைக்கருவி, கிழிப்பான் | படைப்பைக்கு தெற்கே 6 கிமீ தொலைவில் உள்ளது |
| | | | இடைப்பழங் கற்காலம் | அச்சுலியன் வகைக் கைக்கோடாரி, செதுக்கு கருவி, வெட்டுக்கருவி, கிழிப்பான் | |
| | | | கடைப் பழங் கற்காலம் | பிளேடு, வாய்ச்சி, கிழிப்பான், சுரண்டி, செதுக்குக்கருவி, நுண்கற் கருவிகள் செய்யப் பயன் படுத்தப்பட்ட மூலக் கற்கள் | |
| நாட்டரசம்பட்டு | தெற்கே உள்ள கொட்டுக் குட்டைக்கு அருகே சிறிய ஓடைப் பகுதி | திருப்பெரும் புதூர் | முதல் பழங் கற்காலம் | கைக்கோடாரி, கூர்முனைக்கருவி, வெட்டுக் கருவி | படைப்பைக்கு தெற்கே 4 கிமீ தொலைவில் உள்ளது |
| | | | இடைப்பழங் கற்காலம் | வெட்டுக் கருவி, கைக்கோடாரி, முக்கோண வடிவ கைக்கோடாரி, வாய்ச்சி, இருபக்க சுரண்டி, கூர்முனைக் கருவி | |
| | | | கடைப் பழங் கற்காலம் | சுரண்டிகள், சில்லுக் கருவிகள், செதுக்கு கருவிகள், பிளேடு, மூலக் கற்கள் | |
| | | | பெருங் கற்காலம் | ஊரிருக்கை, கருப்பு-சிவப்பு, கருப்பு, சிவப்பு நிற பானை ஓடுகள் இரும்பு உருக்கு உலைகள் | |
| வல்லக் கோட்டை | கிழக்கே அமைந்துள்ள மேட்டுப் பகுதி | திருபெரும் புதூர் | முதல் பழங் கற்காலம் | கைக்கோடாரிகள் | --- |
| | | | இடைப் பழங் கற்காலம் | கூர்முனைக் கருவி, செதுக்குக் கருவி | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மதுர மங்கலம் | மேற்கே அமைந்துள்ள பெரிய ஏரியின் மேற்குப் பகுதி | திருபெரு ம் புதூர் | இடைப் பழங் கற்காலம் | கைக்கோடாரிகள், கூர்முனைக் கருவி, கிழிப்பான் | சுக்குவார் சத்திரத்திற் கு வடமேற்கே 10 கிமீ தொலை வில் உள்ளது |
| மாகாணியம் | கிழக்கே உள்ள மலை யின் மேற்கு மற்றும் தெற்கு அடிவாரத்தில் உள்ளது | திருபெரு ம் புதூர் | முதல் பழங் கற்காலம்<br>இடைப் பழங் கற்காலம்<br>கடைப் பழங் கற்காலம் | கைக்கோடாரி, கிழிப்பான்<br>வட்டு, கிழிப்பான், சுரண்டி<br>பிளேடு, இருபக்க சுரண்டி, செதுக்குக் கருவி, கத்தி, மூலக் கற்கள் | கிழக்கே 10 கிமீ தொலைவி ல் உள்ளது. |
| மண்ணூர் | மேற்கே காப்புக் காட்டிலிருந்து ஏரிக்கு நீர் வரக்கூடிய சிறிய ஓடையில் உள்ளது | திருபெரு ம் புதூர் | இடைப் பழங் கற்காலம்<br>கடைப் பழங் கற்காலம் | கைக்கோடாரி<br>இருபக்கமும் செதுக்கக்கூடிய சில்லுக் கருவிகள் | வடக்கே 5 கிமீ தொலைவி ல் உள்ளது |
| நெமிலி | இவ்வூர் கிழக்கே உள்ள சிறிய குளத்தின் அருகே உள்ளது | திருபெரு ம் புதூர் | இடைப் பழங் கற்காலம்<br>கடைப் பழங் கற்காலம்<br>வரலாற்றுக் காலம் | வட்டுக் கருவிகள்<br>பிளேடு<br>வசிப்பிடம் மற்றும் பானை ஓடுகள் | திருப்பெரு ம்புதூருக்கு வடக்கே 3 கிமீ தொலைவி ல் உள்ளது |
| சிறுவா ஞ்சூர் | தென் மேற்கே உள்ள மேட்டுப்பகு தி | திருபெரு ம் புதூர் | இடைப் பழங் கற்காலம் | சிறிய அளவிலான வட்டுக்கருவி | காட்டாக் குளத்தூருக் கு மேற்கே 6 கிமீ தொலைவி ல் உள்ளது |
| உமையாள் | பரணஞ்சேரி கிராமத்திற்கு மேற்கே உள்ள மேட்டுப்பகு தி | திருபெரு ம் புதூர் | கடைப் பழங் கற்காலம் | பிளேடு, சுரண்டி, வாய்ச்சி, செதுக்குகருவிகள் | படைப்பை க்கு தெற்கே 5 கிமீ தொலைவி ல் உள்ள மேட்டுப் பகுதி |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பண்ருட்டி | இவ்வூருக்கு அருகே அமைந்துள்ள சிறிய மலையின் கிழக்கு அடிவாரம் | திருபெரும் புதூர் | இடைப்பழங் கற்காலம் | சில்லுக்கருவிகள் | வாலாஜாபாத் திற்கு கிழக்கே சுமார் 5 கிமீ தொலைவில் உள்ளது |
| தொள்ளாழி | கிழக்கே உள்ள சிறிய மேடான பகுதி | திருபெரும் புதூர் | இடைப்பழங் கற்காலம்<br><br>வரலாற்றுக் காலம் | சில்லுக்கருவிகள்<br><br>ஊரிருக்கைகள் | வாலாஜாபாத் திற்கு கிழக்கே 4 கிமீ தொலைவில் உள்ளது |
| தோண்டாக்குளம் | கிழக்கே உள்ள ஏரிப் பகுதியில் உள்ளது | திருபெரும் புதூர் | கடைப் பழங் கற்காலம் | வாய்ச்சி, செதுக்கு கருவி, சுரண்டி | வாலாஜாபாத் திற்கு கிழக்கே 5 கிமீ தொலைவில் உள்ளது |
| சோமங்கலம் | வடக்கே முந்திரிக் காட்டில் உள்ளது | திருபெரும் புதூர் | இடைப் பழங் கற்காலம் | வட்டுக் கருவி, கிழிப்பான், செதுக்குகருவி | குன்றத்தூருக்கு மேற்கே 5 கிமீ தொலைவில் உள்ளது |
| ஒரகடம் | தென்மேற்கே அமைந்துள்ள மேடான பகுதியின் கிழக்குச் சரிவில் உள்ளது | திருபெரும் புதூர் | இடைப் பழங் கற்காலம்<br><br>கடைப்பழங் கற்காலம் | மூன்று கருவிகள்<br><br>ஐந்து கருவிகள், பெரிய உலைக் களப்பகுதி, சுடுமண் குழாய்கள் .இரும்பு கழிவுகள் | திருப்பெரும் புதூர் -சிங்கப் பெருமாள் கோயில் சாலையில் உள்ளது. |
| விசகண்டிகுப்பம் | காஞ்சிபுரத்திற்கு வடக்கே 12 கிமீ தொலைவில் உள்ளது | காஞ்சிபுரம் | முதல் பழங் கற்காலம்<br><br>இடைப் பழங் கற்காலம்<br><br>நுண்கற்கருவி காலம் | கைக்கோடாரி, வெட்டுக்கத்தி<br><br>வட்டுக் கருவி, செதுக்குக் கருவி<br><br>வெண்மைநிறபடிகக் கல்லா லான இருபக்க செதுக்குகருவி | காஞ்சிபுரத் திற்கு வடகிழக்கே 12 கிமீ தொலைவில் உள்ளது |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வேலியூர் | ஏரியின் தெற்கு பகுதியில் உள்ளது | காஞ்சிபுரம் | முதல் பழங் கற்காலம்<br><br>இடைப் பழங் கற்காலம் | கைக்கோடாரி<br><br>கிழிப்பான், செதுக்கு கருவி, வெண்ணிற படிகக் கல்லாலான நுண்கற்கருவி | காஞ்சிபுரத்திற்கு வடகிழக்கே 15 கிமீ தொலைவில் உள்ளது |
| அம்மணம்பாக்கம் | இக்கிராமத்திற்கு மேற்கே சிறிய மலையின் அடிவாரத்தில் உள்ளது | செங்கல்பட்டு | கடைப் பழங் கற்காலம்<br><br>நுண்கற்கருவி காலம்<br><br>பெருங் கற்காலம் | சில்லுகருவி<br><br>பிளேடு<br><br>கல்வட்டம், முதுமக்கள் தாழி, இரும்பு உருக்கு உலைகள, சுடுமண் குழாய்கள், இரும்பு கழிவுகள், கருப்பு-சிவப்பு மற்றும் சிவப்பு மற்றும் சிவப்பு வண்ணம் பூசப்பட்ட மண்பாண்ட ஓடுகள் | கடவாஞ்சேரிக்கு கிழக்கே 8 கிமீ தொலைவில் உள்ளது |
| அஞ்ஞூர் | இவ்வூர் மலையின் மேற்கே சரிவில் உள்ளது | செங்கல்பட்டு | கடைப் பழங் கற்காலம் | சில்லுகருவிகள் | சிங்கபெருமாள் கோயிலுக்கு கிழக்கே 5 கிமீ தொலைவில் உள்ளது |
| திருக்கச்சூர் | திருக்கச்சூர் மலையின் கிழக்கு அடிவாரம் | செங்கல்பட்டு | கடைப் பழங் கற்காலம் | பிளேடு, கிழிப்பான், சில்லுக்கருவி | சிங்கபெருமாள் கோயிலுக்கு மேற்கே 3 கிமீ தொலைவில் உள்ளது |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆப்பூர் மலை | இக்கிராமத்திற்கு கிழக்கேயுள்ள மலை யைச் சுற்றியுள்ள சரிவான பகுதி | செங்கல்பட்டு | முதற் பழங் கற்காலம்<br><br>இடைப் பழங் கற்காலம்<br><br>கடைப் பழங் கற்காலம்<br><br>பெருங் கற்காலம் | கைக்கோடாரி, கூர்முனைக் கருவி, வெட்டுக்கருவி, கிழிப்பான், சுரண்டி<br><br>வட்டுகள், கைக்கோடாரிகள், கூர்முனைகருவிகள், செதுக்கு கருவிகள், கிழிப்பான்கள், ஒவெட் எனப்படும் நீள்வட்ட செதுக்கு கருவிகள்<br><br>சின்னங்கள் | சிங்கபெருமாள் கோயிலுக்கு வடமேற்கே 6 கிமீ தொலைவில் உள்ளது |
| எடமச்சி | இவ்வூருக்கு மேற்கே உள்ள சிறுகுன்றுகளின் தெற்கு மற்றும் கிழக்கு அடிவாரம் | உத்திரமேரூர் | இடைப் பழங் கற்காலம் | கைக்கோடாரி, வெட்டு கத்தி, சில்லுக்கருவிகள் | உத்திர மேரூர் வட்டத்தில் சாலவாக்கத்திற்கு வடமேற்கே உள்ளது. |



ஆப்பூர் மலை - முதல் பழங்கற்காலக் கருவிகள்



வளையாக் கரணை
முதல் பழங்கற்காலக் கருவிகள்



ஆப்பூர் மலை
முதல் பழங்கற்காலக் கருவிகள்



ஆப்பூர் மலை
இடைப் பழங்கற்காலக் கருவிகள்



திருப்பெரும் புதூர் ஏரி
முதல் மற்றும் இடைப்
பழங்கற்காலக் கருவிகள்



சிறுமாத்தூர்
இடைப் பழங்கற்காலக் கருவிகள்



திருப்பெரும்புதூர் ஏரி
கடைப் பழங்கற்காலக் கருவிகள்

# 53. காயல்பட்டினமும் ரோமானிய எச்சமும்

மு. முகம்மது நாசர், பாளையங்கோட்டை.

காயல்பட்டினம் திருச்செந்தூரில் இருந்து 4 கி.மீ தொலைவில் தாமிரபரணி ஆற்றின் கழிமுகத்துக்கு அருகில் அமைந்துள்ளது.* இந் நகரின் தொன்மை கிட்டத்தட்ட 700 ஆண்டுகள் என்று வரலாற்று அறிஞர்கள் இதுவரை கருதிவந்தனர். தொன்மையான மட்பாண்ட ஓடுகள் பல கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றுள் 2000 ஆண்டுகளுக்கு முந்திய ரோமானிய ரூலட் பானை ஓடுகள் காணப்பட்டமை குறிப்பிடத்தக்கது. மேலும், சங்கு வளையல் துண்டுகள், சீனக் களிமண்ணாலான பீங்கான் ஓடுகள், கடினமான கண்ணாடித் துண்டுகள், குதிரை லாடம், சுடுமண்ணால் செய்யப்பட்ட கருப்பு மற்றும் சிகப்பு நிற சோளிகாய்களும், வட்டாக்கு சில்லுகளும் கிடைத்துள்ளன.

மேற்சுட்டிய தொல்பொருட்கள் அனைத்தும் காயல்பட்டினம் மொகையத்தீன் மேல்நிலைப் பள்ளியிலிருந்து, கோசுமரைக்கக்கா பள்ளி, கோமான் தெரு பள்ளி வழியாக, கொய்துறை அடைந்து அங்கிருந்து கடற்கரை ஓரமாக புன்னக்காயல் வரை உள்ள பகுதியில் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வில் கண்டுபிடிக்கப்பட்டன. கொம்புத்துறை முதல் புன்னக்காயல் வரை பெரும்பகுதி உப்பளங்களாக உள்ளது. இப்பகுதியில் வரலாற்றுத் தொன்மையுள்ள எந்த பொருட்களும் கிடைக்கவில்லை.

இத்துறைமுக நகரை இடைக்காலத்தைச் சேர்ந்த்தாகவே வரலாற்று ஆசிரியர்கள் இதுவரை கருதிவந்தனர். மேற்சுட்டிய கண்டுபிடிப்புக்கள் கொற்கையில் மட்டுமல்லாது காயல்பட்டினம் பகுதியிலும் ரோமானியத் தொடர்பு இருந்தமைக்குச் சான்றாக விளங்குகின்றன.



* இங்கு 23.6.1992 அன்று மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வில் தமிழக அரசு தொல்லியல் துறை அலுவலர்கள் முனைவர் மா. செந்தில் செல்வகுமரன் மற்றும் காப்பாட்சியர் சொ. சந்திரவாணன் மற்றும் எல்.கே. மேல்நிலைப்பள்ளி மாணவர்கள் ஆகியோர் பங்குபெற்றனர்.

பட்டுள்ளன. 47 செ. மீ உயரம் கொண்ட சிவனின் உருவம் திரிபங்கமானது. வலப்பாகத்துப் பின்கரம் மழுவேந்திய கோலத்தில் காணப்படுகின்றது. முன்கரம் அபயகரமாய் அமைந்துள்ளது. இடப்பாகத்துப் பின்கரம் தேவியை அணைத்தவண்ணமாய் உள்ளது. முன்கரம் கடக ஹஸ்தமாயுள்ளது. மகுடம் உயரமான கரண்ட மகுடமாகும். அதிலே பாம்பும் பிறையும் அமைந்துள்ளன. நெற்றியின் மேலே பட்டமாலை தெரிகின்றது.

சிவனின் உருவத்தின் வலப்புறத்திலே மகர குண்டலமும் இடப்புறத்திலே தோடும் காதணிகளாக அமைந்திருக்கின்றன. மூன்று ஆரங்கள் கழுத்தணிகளாய் உள்ளன. உபவீதம், கடிசூத்திரம், உதரபந்தம் என்பன தெளிவாகத் தெரிகின்றன. அம்மனின் உருவமும் திரிபங்கமானது. அது மெலிந்த தோற்றம் கொண்டது. அதன் அங்கலக்ஷணங்கள் வனப்புமிகுந்தவை. சிற்ப நூல் விதிகளுக்கு அமைய உருவானவை.

இந்த இணையுருவத்தை இதுவரை எவரும் சரியாக அடையாளம் காணவில்லை. சிவன் பார்வதி ஆகியோரின் படிமம் என்றே அதனை ஆனந்த குமாரசுவாமி வர்ணித்தார். எல்லா அம்சங்களிலும் இதனைப் போன்ற வடிவம் ஒன்று தஞ்சாவூர் மாவட்டத்து வெள்ளலகரத்திலே காணப்பெற்றது. அதனைப் பிரதோஷமூர்த்தி என்று ஸ்ரீநிவாசன் வர்ணித்துள்ளார்.[12] எனவே பொலனறுவையிற் கிடைத்த படிமமும் பிரதோஷமூர்த்தியின் கோலமாகும். இரண்டாவது வடிவமும் ஒரு கூட்டு உருவமாகும். சிவன் பார்வதி ஆகியோர் ரிஷபம் சகிதமாக அதிலே தோற்றமளிக்கின்றனர். சிவனுடைய உருவம் 87 சென்டி மீட்டர் உயரம் கொண்டதாகும். அது திரிபங்க நிலையில் அமைந்துள்ளது. இடுப்பிலுள்ள வளைவு இடது பக்கம் நோக்கியது. சிவனுடைய உருவம் பத்மாசனத்திலே அமைந்திருக்கின்றது. அது கால்களை மடித்துத் தோன்றும் நடனக் கோலத்திற் காணப்படுகின்றது. அதிலே கரங்கள் அமைந்திருக்கும் முறையும் புதுமையானது. மேலாகவுள்ள இரு கைகளும் தோளில் இருந்தன்றி, வழமைக்கு மாறாக முழங்கை மட்டத்தில் இருந்து விரிகின்றன. உயர்த்திய வலக்கரம் மழு ஏந்திய கோலமானது. மற்றைய வலக்கரம் கடக ஹஸ்தமாயுள்ளது. இடக்கரங்களில் ஒன்று அபயகரம்போல அமைந்துள்ளது. வஸ்திராபரணங்கள் வழமையானவை.

முன்பு இதனை அருணாசலமும் பிறரும் சந்தியாமூர்த்தி என்று பிழையாக அடையாளம் கண்டனர். இப்படிமமும் கங்கைகொண்ட சோழபுரத்தில் இருந்து கிடைத்த விருஷபவாகனர் வடிவமும் அமைப்பிலும் தோற்றத்திலும் ஒரே மாதிரியானவை.[13] பொலனறுவையில் கிடைத்த பிரதோஷமூர்த்தியின் வடிவமும் விருஷபவாகனரின் உருவமும் அங்குக் கிடைத்த வெண்கலங்களிலே மிகவும் சிறப்பானவை. கலை வனப்பில் உன்னதமான தரத்தைச் சேர்ந்தவை. தமிழகத்திலே சோழர் கலைப்பாணியில் வார்க்கப்பட்ட சிறப்புமிக்க படிமங்களோடு ஒப்பிடக்கூடியவை.

**உமாதேவியாரின் படிமங்கள்**

பொலனறுவையில் கிடைத்த கடவுள் படிமங்களில் உமாதேவியாரின் படிமங்களே மிகவும் கூடுதலானவை. அவற்றின் பிரதிமாலக்ஷணங்கள் சிற்பசாஸ்திரப் பிரகாரமானவை. தென்னிந்தியாவிலும் இலங்கையிலும் காணப்படும் பார்வதியின் படிமங்கள் எல்லாம் அத்தகையவை. அதனால் அவற்றிடையே ஒற்றுமைகள் அதிகமாகும். வேற்றுமைகள் கலைஞரின் வேலைப்பாடுகள் காரணமாக உண்டானவை. மானசாரம் முதலான சிற்ப நூல்களில் கூறப்படும் அம்சங்கள் எல்லாம் கௌரியின் படிமங்களில் காணப்படுகின்றமை குறிப்பிடற்குரியது.[14]

**நாயன்மார் படிமங்கள்**

சமயகுரவர் நால்வரின் படிமங்களும், சண்டேஸ்வர நாயனாரின் உருவங்களும், காரைக்கால் அம்மையாரின் படிமமும் பொலனறுவையில் கிடைத்துள்ளன. சோழப் பேரரசின் காலத்திலே, தமிழகத்துச் சைவசமய மரபிலே நாயன்மார் வழிபாடு சிறப்புற்றது. பக்தி இயக்கத்தின் மூலமாகவே தென்னாட்டிலே சைவம் மேன்மை பெற்றது. நாயன்மார்களின் பாடல்கள் எல்லாம் திருத்தலங்களைப் பற்றியவை. நாயன்மாரைப் போற்றி வழிபாடு செய்தல் சைவசமயத்தில் ஓரம்சமாகியது. அவர்களின் படிமங்களைக் கோயில்களிலே தாபனம் பண்ணி வழிபாடு ஆற்றினார்கள். சிறப்புற்ற திருத்தலங்களில் நாயன்மாருக்கெனத் தனித்தனியான கோட்டங்களும் அமைக்கப் பெற்றன. நாயன்மார் வழிபாடு பதினோராம் நூற்றாண்டு முதல் இலங்கைச் சைவரிடையிலும் வழமையாகியது. நாயன்மார்களின் உலோகப் படிமங்கள் உற்சவ காலங்களிலே வீதி வலமாக எடுத்துச் செல்லப்பட்டன.

சமய குரவர் நால்வரைக் காட்டிலும் காலத்தால் முந்தியவர் காரைக்கால் அம்மையார். அவர் தமிழகத்திலே, சைவமரபிலே பக்திநெறி ஊற்றாகி ஆறாகப் பெருகுவதற்கு மூலகாரணமாக விளங்கியவர். திருத்தலம் பற்றிய பதிகம் என்னும் பாடல்களை முதன்முதலாகப் பாடியவர். திருமருவிய வணிகர் நகரமான காரைக்காலில் பிறந்தவரான புனிதவதியார் இதய கமலத்தில் ஞானபோதம் முகிழ்த்தமையின் பயனாகக் காமந்துறந்து, சிவன் மேல் காதல் கொண்டு, சிவனடியார்களைப் போற்றி உபசரிக்கும் தொண்டுகளில் ஈடுபாடு கொண்டார். அவர் சிவநெறி ஓம்பி, சிவத்தொண்டு புரிந்து, திருப்பதிகம் பாடிப் பற்றொன்றில்லானைப் பற்றுக்கோடாகக் கொண்டு வாழ்நாளைக் கழித்தார். இயல்பான பேரழகெல்லாம் நீங்கி என்பு வடிவமானார். அவரது படிமக் கோலம் என்பு வடிவமானது. பொலனறுவையில் காணப்பட்ட காரைக்கால் அம்மையாரின் படிமம் அவரைப் பற்றிய பெரியபுராண வர்ணனைக்கு ஒப்பானதாகும். தமிழகத்திலுள்ள வடிவங்களும் அத்தகையவை.

பொலனறுவையிலே காணப்பட்ட சமய குரவர் நால்வரின் படிமங்களும் சண்டேஸ்வர நாயனாரின் படிமமும் உன்னத வர்க்கத்தைச்

சேர்ந்தனவாகும். கலை வனப்பிலும் வேலைப்பாட்டிலும் அவை சாலச் சிறந்தனவாகக் காணப்படுகின்றன. நாயன்மார்களைப் பற்றி சேக்கிழாரின் பாடல்களிலே காணப்படும் வருணனைகளுக்கு அமைய அவற்றின் பிரதிமாலக்ஷணங்கள் அமைந்திருக்கின்றன. இவற்றின் அம்சங்களை முன்னே சிலர் விளக்கியுள்ளதால் அவற்றைப் பற்றிய விவரங்களை இங்கே வர்ணிக்க வேண்டியதில்லை.

**அனுராதபுரத்து வெண்கலப் படிமங்கள்**

அனுராதபுரத்திலே ஜேதவனாராம என்னும் புராதனமான கோயிலின் சுற்றுப்புறங்களிலே கலாசார முக்கோணம் அகழ்வாராய்ச்சிகளை நடத்தியபொழுது கிடைத்த வெண்கலப் படிமங்கள் அனுராதபுரத்தில் நிலவிய பல்லினப் பண்பாட்டு அம்சங்களைப் பிரதிபலிப்பவை. அப்படிமங்களை மூன்று தொகுதிகளாக வகைப்படுத்தலாம். இந்து சமய வழிபாடுகள் சம்பந்தமானவை ஒரு வகையினவாகும். போதிசத்வரின் கோலங்களும் புத்தரின் சிற்பங்களும் வேறொருவகைக்குரியனவாகும். மீன், தவளை, நண்டு, பாம்பு ஆகிய நீர்வாழ்வனவற்றின் உருவங்கள் இன்னொருவகைக்கு உரியனவாகும். அவற்றுள் மூன்றாவது வகையைச் சேர்ந்தனவற்றைப் போன்ற உலோகப் படிமங்கள் அனுராதபுரத்திலுள்ள கூட்டம் பொக்குன என்னும் இணை ஏரியில் காணப்பட்டன. அவற்றின் பயன்பாடும் அவற்றைப் பற்றிய சிந்தனைகளும் சேர்க்கை முறையிலான நீர்ப்பாசனம் முக்கியத்துவம் பெற்றிருந்த காலத்திற்குரிய அம்சங்களாகும்.

ஜேதவனாராமப் பகுதியில் காணப்பெற்ற சைவசமயச் சார்புடைய படிமங்கள் அங்கே இந்துக்களுக்குரிய வழிபாட்டு நிலையம் ஒன்று இருந்தமையினை உணர்த்துகின்றன. பொலனறுவைக் காலத்தில் நானாதேசி வணிகர் அனுராதபுரத்திலே நிலை கொண்டிருந்தமையினால் இப்படிமங்கள் அவர்களோடு தொடர்புடையன என்று கருதலாம். இவற்றைப் பற்றிய விரிவான அறிக்கைகள் எதுவும் தொல்பொருளியல் திணைக்களத்தினரால் வெளியிடப்படவில்லை. இப்படிமங்கள் சிலவற்றிலே சிறப்பம்சங்கள் இடம்பெறுகின்றன. அவற்றை ஒத்த வேறு வடிவங்கள் இலங்கையில் காணப்படவில்லை. அவற்றின் பிரதிமாக்ஷணங்களும் தனியான பண்புகளைக் கொண்டுள்ளன. சிற்பசாஸ்திர மரபில் இடம் பெறாத அம்சங்கள் பல அவற்றிலே காணப்படுகின்றன. அதனால் சமயவரலாற்றிலும் தென்னாசியப் படிமக்கலை வரலாற்றிலும் அவற்றிற்கு ஒரு தனியிடம் உண்டு. அனுராதபுரத்திலே கிடைத்துள்ள சைவசமயப் படிமங்களுள் உமாமகேஸ்வரர், சந்திரசேகரர், நடராசர், பார்வதி ஆகியோரின் உருவங்கள் கலை வனப்புடன் அமைந்திருக்கின்றன.

**உமாமகேஸ்வரர்**

ஆசனக் கோலத்தில் சிவனின் உருவம் ஒன்றும் உமாதேவியாரின் படிமம் ஒன்றும் காணப்பெற்றன. ஈசனின் படிமம் 45 செ.மீ உயரம்

கொண்டது. அம்மனின் படிமம் 30 செ.மீ உயரமுடையது. இப்படிமங்கள் பதினோராம் நூற்றாண்டிற்குரிய கலைப்பாணியில் அமைந்தவை. அவற்றின் பீடமும் பிரபாமண்டலமும் காணப்படவில்லை. அனுராதபுர நகரிலே கலகம் ஒன்று ஏற்பட்ட சமயத்திலே, சிவாலயம் ஒன்றிலிருந்த இப்படிமங்கள் வெளியே கொண்டு செல்லப்பட்டு நிலத்தில் புதைக்கப்பட்டன என்று கருதலாம்.

சிவன்-பார்வதி ஆகியோரின் படிமங்கள் கூட்டானவை என்பது அவற்றின் அளவுப் பிரமாணங்களினாலும் பிரதிமாலக்ஷணங்களினாலும் உணரப்படும். சிவனும் பார்வதியும் ஆசனக் கோலத்தில் பொதுவான பீடமொன்றில் அமைக்கப்படும்போது அந்தக் கோலம் உமாசகித மூர்த்தம் எனப்படும். சிவனுடைய படிமம் சுகாசனத் தோற்றமாகும். அதிலே கால்களின் அமைப்பு ஆகமப் பிரமாணங்களுக்கு முரணாக அமைந்துள்ளது. படிமத்தில் வலக்கால் மடித்து, அதன் பாதம் இடக்காலின் தொடையினைத் தொடும் வண்ணமாக அமைந்துள்ளது. இடக்கால் சற்று இடது பக்கமாக நீட்டி, முழந்தாழ் மட்டத்தில் கீழ் நோக்கிய வண்ணமாக மடித்துப் பாதத்தினை ஊன்றிய வண்ணமாய் அமைந்துள்ளது. வஸ்திராபரணங்கள் வழமையானவை. முன்புறமாக உள்ள வலக்கரம் அபயஹஸ்தமாகும். பின்புறத்து வலக்கரம் மேல்நோக்கி உயர்த்திய நிலையில் காணப்படுகின்றது. அதிலிருந்த மழு மறைந்துவிட்டது. முன்புறத்து இடக்கரம் வரதஹஸ்தம் ஆகும். அதன்பின்னால் அமைந்துள்ள கரம் மேல்நோக்கி உயர்த்திய நிலையிலே தெரிகின்றது. அதிலுள்ள மானின் உருவம் மறைந்தொழிந்து விட்டது.

அம்மனின் உருவம் அழகுமிக்கது. கோலம் சாந்தமானது. அங்கலக்ஷணங்கள் பொலனறுவைப் படிமங்களில் உள்ளவற்றைப் போன்றவை. பிரதிமாலக்ஷணங்களில் குறிப்பிடத்தகுந்த சில சிறப்பம்சங்கள் உள்ளன. வலக்கால் தூக்கிய நிலையிலே, பாதம் ஆசனத்தின் மேல் ஊன்றுமாற்போல் மடிக்கப்பெற்ற கோலமாய் உள்ளது. இடக்கால் கீழ்நோக்கித் தொங்கிய வண்ணமாய் உள்ளது. துகில் இடையிலிருந்து கால்வரை சுற்றியுள்ள கோலமானது, கால்களின் பக்கங்களிலே துகிலின் சுருள் வடிவிலுள்ள மடிப்புகள் காணப்படுகின்றன. இடைமெலிந்த தோற்றம் கொண்டது. அம்மனின் வலக்கரம் முழந்தாழிலே தங்கும் வண்ணமாக மடித்துள்ள கடக ஹஸ்தமாகும். இடக்கரம் தொடையினைத் தொடும் நிலையில் அமைந்துள்ளது. வதனம் சற்றுக் கடினமான பார்வையுடைய கோலத்தில் காணப்படுகின்றது. உருவத்தின் ஏனைய அம்சங்கள் எல்லாம் மரபு வழியானவை.

**சந்திரசேகரர்**

ஜேதவனாராமத்து வெண்கலப் படிமங்களுள் ஒன்றான சந்திரசேகரரின் வடிவம் மிகக் கவர்ச்சி பொருந்திய தோற்றம் கொண்டது. ஸ்தானக நிலையிலுள்ள அந்த வடிவம் கவிழ்ந்த தாமரைமலரின் உருவங்கொண்ட



பீடத்தில் அமைக்கப்பட்டு உள்ளது. பீடத்தின் அடித்தளம் சதுரமானது. அது 9.5 செமீ அகலம் கொண்டது. 28 செமீ உயரமுடைய இந்தப் படிமம் சாஸ்திரப் பிரமாணங்களுக்கு அமைய வடிவமைக்கப் பட்டுள்ளது. அது பிரதிமாலக்ஷணங் களைப் பொறுத்தவரையில் பொலனறுவையிலே கண்டெடுக்கப்பட்ட படிமங்களை ஒத்திருக் கின்றது. இப்படிமத்தில் அமைந்துள்ள நான்கு கரங்களில் முன்புறத்து வலக்கரம் அபயகரமாகும். முன்புறத்து இடக்கரம் வரதகரமாகும். பின்னுள்ள வலக்கரம் மழு ஏந்திய கோலமானது. நான்காவது கரம் மானேந்திய வண்ணமானது. மகுடம் சடை முடியாகும். அதன் மேற்புறம் கொக்கின் இறகுகள் நிரையாக அமைக்கப்பட்டு உள்ளதைப் போன்ற தோற்றங்கொண்டது. பிறையின் வடிவமும் நாகமும் முடிமேல் அமைந்துள்ளன. உருவத்தின் அங்கங்கள் எல்லாம் மெலிந்த தோற்றம் கொண்டவை. உபவீதமும் உதர பந்தமும் வழமைபோல காணப்படுகின்றன. கணைக்கால்களில் கழல்கள் அணிகள்ரயுள்ளன.

**விருஷபவாகனர்**

அனுராதபுரத்தில் கிடைத்த சிவனின் மூர்த்தங்களில் ஒன்று விருஷபவாகனரின் தோற்றமாகும். சிவபெருமானுடைய வடிவமும் உமாதேவியாரின் பிரதிமையும் ரிஷப மும் ஒரு பொதுவான பீடத்தில் அமைக்கப்பட்டுள்ளன. பீடத்தின் அடிப் பாகம் நாற்சதுரமானது. அது 10 செமீ நீளம் கொண்டது. அதன் மேல் வட்ட மான இருதள உப பீடங்கள் இரண்டு தனித்தனியாக உள்ளன. கடவுள் படிமங் கள் அவற்றில் அமைந்துள்ளன. ஈசான னின் வதனம் புன்முறவலுடனும் பொலிந்த தோற்றத்துடனும் காணப்படு கின்றது. மகுடம் சடைமுடியாகும். காதணிகளும் கழுத்தணிகளும் வழமை யானவை. நான்கு கரங்களில் முன் வலக்கரம் அபயஹஸ்தமாகும். பின் வலக்கரம் மழு ஏந்திய வண்ணமாய் உள்ளது. முன்னிடக்கரம் லோல ஹஸ்தமானது. நான்காவது கரம்



உமாதேவியாரை பற்றிய நிலையிற் காணப்படுகின்றது. உமாதேவியாரின் கோலம் திரிபங்கமானது. சிவனுடைய வடிவம் கால்களை மடக்கிய நிலையிலே அமைந்திருக் கின்றது. நந்தியின் உருவமும் பீடத்திலே காணப்படுகின்றமை குறிப்பிடத்தக்கது. அளவிலே இதனைப் போன்று சிறிய விருஷப வாகனரின் படிமம் வேறெங்கும் காணப்படவில்லை. பதினோராம் நூற்றாண்டிற் குரிய படிமங்களின் அம்சங் கள் இதன் பிரதிமாலக்ஷணங் களில் பிரதிபலிக் கின்றன.

**உமாதேவியார்**



உமாதேவியாரின் உருவம் அளவிலே சிறியது. ஸ்தானக நிலையில் அமைந்து உள்ளது. அதன் பீடம் இருதளங்களால் ஆனது. அதன் மேற்பாகத்தில் கவிழ்த்த தாமரையின் வடிவ மும், அதன்மேல் வட்டமான உபபீடமும் உள்ளன. உருவம் திரிபங்கமானது. அங்கங்கள் பொருத்தமான அளவுப் பிரமாணங்களில் அமைந்துள்ளன. சாஸ்திரப் பிரமாணங் களுக்கு அமைய அம்மனின் உருவம் கன்னிமைப்பருவத் தோற்றமாயுள்ளது. உருவத்தின் வலக்கரம் கடக ஹஸ்த மாகும். முடிகரண்ட மகுடமாகும். மகுடத்தின் கீழ் தலைமாலை போன்ற வடிவம் உண்டு. தோடு, அட்டியல், கேயூரம், வளையல், மேகலை, சிலம்பு, பாதசரம் என்பன பிரதானமான அணிகலன்களாகும். வதனத்தின் தோற்றம் ஆழ்ந்த தியானத்தில் கண்களை மூடி உள்ளமை போன்ற கோலமாகும். அது சோகமான தோற்றம் கொண்டுள்ளது. எனவே, உமாதேவியாரின் வடிவத்தை கலைவனப்புடையது என்று கொள்ள முடியவில்லை.

**வீரபத்திரர்**

விநோதமான தோற்றங்கொண்ட கடவுள் படிமம் ஒன்று கலாசார முக்கோண ஆய்வில் கண்டெடுக்கப் பெற்றுள்ளது. அதனுடைய பீடத்தில் *ஸ்ரீநானாதேசியன்* என்று எழுதப்பட்டுள்ளது. நானாதேசி என்னும் வணிகக் குழுவைச்சேர்ந்த சேர்ந்தவர்களால் அவ்வுருவம் அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். அந்தப் படிமத்தை நானாதேசி வியாபாரிகள் ஆலயத்திற்கு வழங்கினார்கள் என்று கருதலாம். வரிவடிவங்கள் பன்னிரண்டாம் நூற்றாண்டிற்கு உரியனவற்றை ஒத்திருப்பதால் அப்படிமம் அந்நூற்றாண்டிற்குரியது எனக் கொள்ளத்தக்கதாகும். அதனை ஒத்த வேறெந்தப் படிமமும் இதுவரை கிடைக்கவில்லை. உருவம் திரிபங்கமானது. அது ஸ்தானக நிலையில் உள்ளது. வலக்கால் மடித்து

உறுதியாக ஊன்றிய நிலையில் காணப்படுகின்றது. இடக்கால் அகலப்புறமாக வீசி, மடிக்கப் பெறாது ஊன்றியவண்ணமாய் உள்ளது. பாதங்கள் இரண்டும் முத்தலைப் பாம்புகளை உழுக்கிய கோலத்தில் அமைந்துள்ளன. உடலின் தோற்றம் சற்றுப் பருமையானது. வலக்கரம் மேல்நோக்கி நீட்டி உயர்த்திய கோலத்தில் காணப்படுகின்றது. அது வாள் போன்ற படைக் கலத்தை ஏந்திய நிலையில் உள்ளது. இடக்கரம் தலையொன்றைப் பிடித்த கோலத்தில் உள்ளது. உருவத்திலே காணப் படும் ஆடை அளவில் சிறியது; அலங்காரத் தோற்றம் கொண்டது. அது வயிற்றின் அடியிலிருந்த முழங்காலின் மேல்வரை பரந்துள்ள அணியாகும். அதன் ஒரு பாகம் இடுப்பில் வரிந்து கட்டியுள்ள



உத்தரீயம் போலானது. முகம் ரௌத்ர பாபத்துடன் கோரமான பார்வையோடு காணப்படுகின்றது. காதுகள் நீளமானவை. காதணிகள் அகன்ற குண்டலங்களாகும். சிரசிலுள்ள சிகையானது ஒரு விசிறியின் தோற்றமுடைய வட்டமான அக்கினி மண்டலம் போலத் தெரிகின்றது. தலையின் மேல் அலங்காரமான ஒடுங்கிய தோற்றங்கொண்ட கிரீடம் அமைந்துள்ளது. அதன் ஒவ்வொரு பக்கத்திலும் சிகையின் மேல் முத்தலை நாகபடம் தெரிகின்றது. போரிலே பகைவனை வென்று, அவனுடைய தலையினைக்கொய்து, அதனைக் கையில் பிடித்த வண்ணம் உக்கிர தாண்டவம் புரியும் தெய்வத்தின் தோற்றமே இப்படிமத்தில் அமைந்துள்ளது. அது தக்கனைக் கொன்ற தாண்டவம் புரியும் வீரபத்திரரின் கோலம் எனக் கொள்ளத் தகுந்தது. ஐயப்பொழில் பரமேஸ்வரியைத் தங்கள் குலதெய்வமாகப் போற்றிய நானாதேசி வணிகர் போர்க்கடவுளான வீரபத்திரனையும் போற்றி வழிபட்டதற்கு இப்படிமம் சான்றாய் அமைகின்றது.

**பூவளநாயகி**

தோற்றத்திலும் பிரதிமாலக்ஷணங்களிலும் ஒப்புமையில்லாத வேறொரு கடவுட்படிமமும் அனுராதபுரத்திலே கண்டெடுக்கப் பெற்றது. அது அசாதாரணமான அம்சங்கள் பொருந்திய அம்மனின் திருக்கோலமாகும். உருவம் அளவில் சிறியது. ஸ்தானக நிலையில் உள்ளது. படிமங்களிலே வழமையாகக் காணப்படும் பீடம் அதிலே காணப்படவில்லை. அதற்குப் பதிலாக நீர்ச்செடி போன்ற ஒன்றின் இலைகளும் மலர் மொட்டுகளும் மிக நுட்பமான முறையிலே உருவாக்கப்பட்டுள்ளன. அது நீலோற்பலம் போலத் தோன்றுகின்றது. அம்மனின் கோலம் கன்னிமைப் பருவம் கழிந்த பேரிளம்

பெண்ணைப் போன்றது. வதனம் குமிண் சிரிப்புடன் பொலிந்த வண்ணமானது. கண்ணிமைகள் மூடிய கோலத்தில் உள்ளன. காதணிகள் கனதியான தோடு களாகும். கிரீடமானது வளையம் ஒன்றின் மேலே, முன்புறமாக எடுப்பான அலங்காரத்துடன் விளங்குகின்றது. கழுத்தணிகள் சிறிதும் பெரிதுமான இரண்டு ஆரங்கள் ஆகும். சிறிய மாலையில் இரத்தினக் கற்கள் பதிக்கப் பட்டுள்ளதைப் போன்ற அமைப்புண்டு. அம்மனின் உருவம் நான்கு கரங்களுடன் அமைந்துள்ளது. மேல்நோக்கி மடித்து உயர்த்திய வலக்கரம் சக்கரம் ஒன்றை ஏந்திய வண்ணமானது. அது வளையம் ஒன்றிலே சுவஸ்திகம் அமைந்துள்ளமை போன்ற உருவங்கொண்டது. முன் புறமாக நீட்டியவாறு அமைந்த கீழ் வலக் கரம் கடக ஹஸ்தமானது. முன்புறமாக உள்ள இடக்கரம் நிறைகுடம் ஏந்திய கோலத்தில் அமைந்துள்ளது. அதன் பின்னால் அமைந்த கரத்தில் அக்ஷமாலை தெரிகின்றது.



ஆடை இடையில் இருந்து அதன் கீழாகக் கணைக்கால் வரையுள்ளது. நாட்டியக் கோலத்திற்குப் பெண்கள் அணிவது போன்ற ஆடையானது ஒவ்வொரு காலையும் தனித்தனியாகச் சுற்றி அணிந்தாற் போன்ற தோற்றம் கொண்டுள்ளது. துகிலின் தலைப்பு இடுப்பினைச் சுற்றி வளைத்து முன்புறத்திலே உத்தரீயம் போல முடிந்துக் கட்டப்பெற்றுள்ளது. இப்பிரதிமையின் வேலைப் பாட்டினையும், அங்க லக்ஷணங்களையும், ஆடையின் மடிப்புகளையும் அவதானிக்கும் பொழுது அது பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குரியது என்பது புலனாகின்றது.

இப்படிமத்தில் காணப்படும் அம்மனின் தோற்றம் தனித்துவமானது. அது திருமகளின் கோலம் அன்று; நாமகளின் படிமம் அன்று; பரமேஸ்வரியின் உருவமும் அன்று. பரமேஸ்வரியின் படிமங்களிலே சில சமயங்களில் அரிமாவின் உருவம் பீடத்தில் அமைந்திருக்கும். வேறு சில படிமங்களிலே மகிஷத்தின் உருவம் இடம்பெறும். அக்ஷமாலை இலக்குமி, சரஸ்வதி, பரமேஸ்வரி என்னும் மூவருக்கும் உரிய பொதுவான சின்னமாகும். சக்கரம் துர்க்கையின் உருவங்களிலே காணப்படுவது வழமை. ஆயினும், பூரண கலசமும் நீரோற்பலம் போன்ற செடியின் வடிவில் அமைந்த ஆசனமும் இதுவரை குறிப்பிட்ட தெய்வங்களோடு தொடர்பில்லாதவை. இதனைத் தற்காலிகமாகப் பூவளநாயகி என்று பெயர் சூட்டிக்கொள்ளலாம். நாகபட்டினத்துப் பௌத்த படிமம் ஒன்றில் பூவளநாயகர் என்னும் பெயர் காணப்படுகின்றது. இதன் பிரதிமாலக்ஷணங்கள் சிற்பநூல்களிலே காணப்

படவில்லை. இதனைப் போன்ற வேறெந்த வடிவமும் இந்தியாவிலும் இலங்கையிலும் கீழ் நாடுகளிலும் இருப்பதாக இதுவரை செய்தி கிடைக்கவில்லை.

**நாகதம்பிரான்**



ஜேதவனாராமத்து அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ள வேறொரு பத்திராசனத்தில் ஆசனக் கோலத்தில் உள்ள மனிதனைப் போன்ற உருவம் அமைந்திருக்கின்றது. பீடத்தின் மேலே, படிமத்தின் அடியிலே வளைந்த பாம்பின் உருவம் அமைந்துள்ளது. பாம்பின் தலை காலுக்கு முன்னால் நீண்டு பத்திராசனத்தின் கீழ் தளத்திலே தங்கி யுள்ளது. இது ஒரு விநோதமான அம்சமாகும். படிமத்தில் வலக்கால் முன்புறமாக நீண்டு, முழங்கால் அளவில் கீழ் நோக்கித் தொங்கிய கோலத்திலுள்ளது. அதன் பாதம் பீடத்தின் அடித்தளத்திலே ஊன்றிய நிலையில் காணப்படுகின்றது. இடக் கால் உட்புறமாக மடித்து ஆசனத்தின் மேல் வைத்த நிலையில் உள்ளது. இப்படிமத்தில் இரண்டு கரங்கள் மட்டுமே உள்ளன. வலக்கரம் கடக ஹஸ்தமாயுள்ளது. அதிலே அக்ஷமாலை போன்ற உருவம் தெரிகின்றது. இடக்கரம் மடித்து மணிகட்டு இடுப்பிற்கு மேற்பிடித்த நிலையில் தெரிகின்றது. அதில் ஏட்டுச் சுவடி போன்ற உருவம் காணப்படுகின்றது. கிரீடம் கரண்ட மகுடம் போன்றது. சிகைச் சக்கரம் தலைக்குப் பின்னால் வட்டமான மண்டலம் போல அமைந்திருக்கின்றது. ஆபரணங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. அவை இந்து சமயச் சார்புடைய படிமங்களில் உள்ளவற்றைப் போன்றவை. காதணிகள் குழைந்த தோடுகள் போன்றவை. கழுத்திலே ஆரம், அட்டியல் ஆகிய ஆபரணங்கள் உள்ளன. உபவீதமும் கடிசூத்திரமும் காணப்படுகின்றன. உதரபந்தமும் அதன் கீழாக அகன்று தொங்கும் மாலை போன்ற ஆபரணமும் தெரிகின்றன. மண் அரிப்பினால் முகத்தின் கோலம் மாறியுள்ளது.

இப்படிமத்திலே வேறுமொரு விநோதமான அம்சம் உண்டு. படிமத்தின் பின்புறத்திலே தண்டம் ஒன்று அமைந்திருக்கின்றது. ஆசனத்தின் வலப்புறத்தில் அது காணப்படுகின்றது. அதன் மேற்பகுதி குமிழி போன்று அமைந்துள்ளது. அதிலே பாம்பின் உருவம் தொங்குவதைப் போன்ற வேலைப்பாடு ஒன்று உள்ளது. கண்டத்தின் மேற்புறம் கிரீடத்தின் பின்னால் அமைந்த சிகைச் சக்கரத்துடன் கொடியொன்றினாற் பிணைக்கப்பட்டுள்ள

தோற்றம் தெரிகின்றது. இந்திய கலாசார மரபிலே தண்டம் துறவிகளுக்கு உரிய சின்னமாகும். ஆயினும், கையிலே காணப்படும் ஏடுகளும் அக்ஷமாலையும் இப்படிமம் தெய்வாம்சம் பொருந்தியது என்பதை உணர்த்தும். இதிலே காணப்படும் பாம்பின் வடிவம் எக்காரணத்தினாலே பிரதிமையிலே சேர்த்துக் கொள்ளப்பட்டது என்பது தெரியவில்லை. கொரியாவிலுள்ள சிற்பங்கள் சிலவற்றில் படிமங்களின் பீடத்திலே பாம்பின் உருவம் அமைந்திருக்கின்றமை குறிப்பிடத்தக்கது. ஆனால், பரத கண்டத்தில் இதனைப் போன்ற வேறு எந்த உருவமும் இதுவரை காணப்படவில்லை. தக்ஷிணாமூர்த்திக்குரிய சில அம்சங்கள் இதிலே காணப்படுகின்றன. வலக்கரத்து விரல்கள் சின்முத்திரையாகவும் இடக்கரம் ஏடுகளை ஏந்திய நிலையிலும் அமைந்திருப்பதால் இப்படிமம் ஞான போதகனாகக் கொள்ளப்படும் தெய்வம் ஒன்றிற்கே உரியது என்று கருதலாம். மகாயான பௌத்தர்களுக்கும் சைவர்களுக்கும் பொதுவாக இருந்த ஒரு தெய்வத்தின் பிரதிமையாக அது அமைந்திருத்தலும் கூடும். வேலைப்பாடுகளைப் பொறுத்த வரையில் பிற்காலச் சோழர் கலைப்பாணிக்குரிய அம்சங்கள் தெரிவதால் இதனைப் பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குரிய படிமமாகக் கொள்ளலாம்.

**பத்தினியின் படிமங்கள்**





ஜேதவனாராமத்து அருங்காட்சியகத்திலே காணப்படும் வேறு படிமங்கள் இரண்டு இலங்கையின் சமய வரலாறு தொடர்பான சில விடயங்களைத் தெளிவுபடுத்துவதற்கு உதவக்கூடியனவாகும். அவற்றை அந்நிறுவனத்தைச் சேர்ந்த அதிகாரிகள் அர்த்தநாரி வடிவங்கள் என்று அடையாளம் கண்டுள்ளனர். அப்படிமங்கள் பீடங்களில் அமைக்கப் படவில்லை. அவற்றின் கீழ் சிறிய உலோகத்தகடுகள் ஆதாரமாய் அமைந்துள்ளன. இரண்டு படிமங்களும் ஒரே எடை கொண்டவை. ஏனைய

அம்சங்களில் அவற்றின் பிரதிமாலக்ஷணங்கள் வேறுபடுகின்றன. அவை வெவ்வேறு காலங்களில் உருவாக்கப்பட்டவை என்பதிலும் எதுவித ஐயமும் இல்லை. இப்படிமங்கள் பெண் வடிவங்கள் என்பது அவற்றின் தோற்றத்தினால் விளங்குகின்றது. இரண்டு படிமங்களும் ஸ்தானகக் கோலமானவை. ஒரு படிமத்தின் வலக்கரம் உடைந்த சிலம்பொன்றினை ஏந்திய வண்ணமாயுள்ளது. இடக்கரம் சற்று உயர்த்திய கோலத்தில் அபயகரம் போல் அமைந்துள்ளது. படிமத்தின் பிரதிமாலக்ஷணங்களிலே தனங்களின் கோலமே சிறப்பம்சமானது. இடப்பாகத்தில் உள்ளதனம் இயல்பான கோலத்தில் காணப்படுகின்றது. வலது பாகத்திலுள்ளது முகையற்றதாகி, வெட்டிய கோலத்தில் உள்ளது. இக்கோலம் பத்தினித் தெய்வத்திற்கே உரியதால் இப்படிமத்தைப் பத்தினியின் படிமம் என்று அடையாளங்காண முடிகின்றது. தலையிலே தலைமாலை தெரிகின்றது. மகுடம் கேசபந்தமாக அமைந்துள்ளது. காதணிகள் அகன்ற தோடுகளாகும். கழுத்திலே வனப்புமிக்க மூன்று ஆரங்கள் அமைந்திருக்கின்றன. தோள் வலையங்களும் வளையல்களும் காணப்படுகின்றன. ஒரு காலிலே சிலம்பும் மற்றக் காலிலே பாதசரமும் தெரிகின்றன. வஸ்திரம் சோழர்காலத் தேவியின் படிமங்களில் உள்ளதைப் போன்றதாகும். கண்கள் மூடிய கோலத்தில் உள்ளன. வதனத்தில் கடுமையான பார்வை தெரிகின்றது. உருவம் மெலிந்த தோற்றம் கொண்டது. மற்றைய படிமம் பத்தினியின் கோலம் என்று கொள்ளத் தக்கதாகும். அதன் வலப்புறத்துத் தனம் முகையற்ற கோலத்தில் காணப்படுகின்றது. ஏனைய அம்சங்களில் அதன் பிரதிமாலக்ஷணங்கள் சாதாரண மனிதர்களைப் போன்றவை. கரங்கள் இரண்டும் தொங்கும் நிலையில் காணப்படுகின்றன. முடி கேசபந்தமாகும். ஆபரணங்களும் வஸ்திரமும் அங்க லக்ஷணங்களும் முற்றிலும் சிங்களப் பாணியில் அமைந்தவை.

அளவிலே சிறியனவான அனுராதபுரத்து வெண்கலப் படிமங்கள் சிலவற்றை சமயாபிமானங் கொண்ட வணிகரும் அவர்களோடு தொடர்பு கொண்ட வேறு சமூகத்தவரும் பிற தேசங்களில் இருந்து இலங்கைக்கு எடுத்துச் சென்றிருத்தல் கூடும். அவற்றைப் பற்றி மேலும் ஆராய்வதன் மூலம் இலங்கைப் பண்பாட்டிலுள்ள சில மறைந்து போன அம்சங்களையும் பிற தேசங்களோடு இலங்கை கொண்டிருந்த தொடர்புகளையும் மேலும் அறிந்து கொள்வதற்கு வாய்ப்புகள் ஏற்படக்கூடும்.

---

1 புலத்திநகரை தலைமை நிலையமாகக் கொண்டு, றக்கபாசாணகண்ட என்னும் இடம் வரையுள்ள பகுதிகளைச் சோழர் ஆட்சி புரிந்தனர் என்று இலங்கை மன்னரின் வம்சவரலாற்றை மரபு வழியில் விளக்கும் மகாவம்சம் கூறும். அங்குள்ள சோழரின் அரண்களைப் பற்றியும் அந்நூல் குறிப்பிடுகின்றது. அதனைச் சோழர் கைப்பற்றியிருந்த காலத்திலே புலத்தி நகரம் ஜனநாதமங்கலம் என்னும் பெயரால் வழங்கியது.

2 இராஜேந்திர சோழனுடைய ஆட்சிக் காலத்திலே சோழ இளவரசன் ஒருவனை ஈழமான மும்முடிசோழ மண்டலத்தின் வேந்தனாக முடிசூட்டினார்கள். அவன் சோழ இலங்கேஸ்வரன், சங்கவர்மன் என்னும் பட்டப் பெயர்களைப் பெற்றிருந்தான். சோழ இலங்கேஸ்வரனின் ஆட்சியாண்டுகளில் எழுதப்பெற்ற சாசனங்கள் கந்தளாய், மானாங்கேணி என்னும் இடங்களில் கிடைத்துள்ளன. அவை கிழக்கிலங்கையிலே திருகோணமலை மாவட்டத்திலுள்ள ஊர்களாகும். Gunasingham, S., "Two Inscriptions of Cola Ilankesvara Deva from Trincomalee," *Trincomalee Inscriptions Series, No.1*, ed., and published by S. Gunasingham, Peradeniya, 1974.

3 பதினான்கு இந்துக் கோயில்களின் தொல்பொருள் சின்னங்கள் பொலநறுவையில் கிடைத்துள்ளன. அவற்றில் 7 சிவாலயங்கள்; 5 விண்ணகரங்கள்; 1 அம்மன் கோயில். நான்கு கற்றளிள் வெண்கலப் படிமங்கள்; எல்லாம் சிவாலயங்களில் கிடைத்தவை.

4 விக்கிரமபாகுவின் தாயான திலோகசுந்தரி கலிங்க வம்சத்தவள். சைவசமயத்தில் உறுதியான பற்றுக்கொண்டவள். கஜபாகுவின் தாயான சுந்தரியும் கலிங்க வம்சத்தவள்.
பத்மநாதன், சி. *இலங்கையில் இந்து கலாசாரம்*, பகுதி-1, இந்து சமய பண்பாட்டு அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 2000, பக்.132-155.

5 Pathmanathan, S., "Temples of Siva at Padaviya", *Temples of Siva In Sri Lanka*, ed., S Pathmanathan, Chinmaya Mission of Sri Lanka, 1999.

6 பத்மநாதன், சி., *இலங்கையில் இந்து கலாசாரம்*, பகுதி-1, பக்.269-302.

7 Bell, H.C.P., *Archaeological Survey of Ceylon Annual Report (ASCAR)*, 1907, H.C. Cottle, Government printer, 1910, 27 pages.

8 Bell, H.C.P., *ASCAR*, 1908, H.M. Richards Acting Government Printers, 1913, 21 pages.

9 Godakumbura, C.E., "Bronzes from Polonnaruwa", *Journal of the Ceylon Branch of the Royal Asiatic Society (JCBRAS)* New Series, Volume VII, Part 2, Colombo, 1961, pp.239-253.

10 அது சரஸ்வதியின் உருவம் என்பது உறுதிப்படுத்தப்படவில்லை.

11 எல்லாமாக 6 நடராசர் வடிவங்கள் பொலனறுவையில் கிடைத்துள்ளன. முதலாம் சிவாலயத்தில் ஒன்றும், ஐந்தாம் சிவாலயத்தில் நான்கும், ஆறாம் சிவாலயத்தில் ஒன்றும் என்றபடியாக அவை காணப்பெற்றன. ஆறாம் சிவாலயத்தின் வளாகத்திலே காணப்பெற்ற வடிவம் அளவில் சிறியதெனினும் வனப்பு மிக்கது. அது திருவாலங்காட்டிலுள்ள சிறப்புமிக்க படிமத்தைச் சில வகைகளில் ஒத்திருக்கின்றது.
Ponnambalam Arunachalam, "Polonnaruwa Bronzes and Saiva worship and symbolism" *JRASCB*, Volume, xxiv, No.68, *Studies and Translations Philosophical and Religious*, Department of Hindu Affairs, Ministry of Regional Development, Colombo, 1986, pp.73-108.

12 P.R. Srinivasan, *Bronzes of South India* [Bulletin of the Madras Government Museum, New series, General section Volume viii, 306 pages 205 plates], Madras, 1963, p.306.

13 பத்மநாதன், சி., *இலங்கையில் இந்து கலாசாரம்*, பகுதி 1, பக்.378-379.

14 *மானசார சில்பசாஸ்திரம்*, பதிப்பு வேங்கட சுப்பிரமணிய சாஸ்திரி, சகாப்தம் 1885 (கி.பி.), பக்.170-1711.

## தமிழ்நூல்களும் கட்டுரைகளும்

### நூல்கள்


1. *வன்னியர்*, பேராதனை, 1970.
2. *இலங்கையில் இந்து கலாசாரம்*, பகுதி 1, இந்துசமய பண்பாட்டு

அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 2000.

3. *இலங்கைத் தமிழர் தேசவழமைகளும், சமூக வழமைகளும்*, குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை-கொழும்பு, 2001.

**பதிப்பித்த நூல்கள்**

1. *இலங்கையில் இந்துக் கோயில்கள்*, பகுதி 1, இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1995.
2. *ஸ்ரீதக்ஷிண கைலாசபுராணம்*, பகுதி 1, இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1995.
3. *ஸ்ரீதக்ஷிண கைலாசபுராணம்*, பகுதி 1, இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 1995.
4. *இந்துக் கலைக்களஞ்சியம்*, தொகுதி 2, இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம்,
5. *இந்துக் கலைக்களஞ்சியம்*, தொகுதி 3
6. *இந்துக் கலைக்களஞ்சியம்*, தொகுதி 4
7. *இந்துக் கலைக்களஞ்சியம்*, தொகுதி 5
8. *இந்து கலாசாரம்*, பகுதி 1, "கோயில்களும், சிற்பங்களும்", இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 2001.
9. *இந்து கலாசாரம்*, பகுதி 2, "நடனங்களும் ஓவியங்களும்", இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, 2001.

**கட்டுரைகள்**

**வரலாறு**

1. திருகோணமலையில் சோழ இலங்கேஸ்வரன் கைலாசபுராணம், ஸ்ரீ தஹிண கைலாசபுராணம் பகுதி 2, இந்துசமய கலாசார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, பக். 1-31.
2. இலங்கையில் தமிழ் வணிக கணங்களும் நகரங்களும் (கி.பி.1000 - 1250) சிந்தனை, தொகுதி 2, இதழ் 2 பதிப்பாசிரியர், சி. க. சிற்றம்பலம், யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், திருநெல்வேலி, பக். 45 - 78.
3. மத்தியகால இலங்கையில் வணிக நகரங்கள் : தன்மசாகரப் பட்டினம் : விஹாரேஹின்னையிலுள்ள எறிவீரரின் தமிழ்ச் சாசனம், சைலாசநாதம், பதிப்பாசிரியர் பேராசிரியர் ப. கோபாலகிருஷ்ண ஐயர், பவள விழா மலர்க்குழு, யாழ்ப்பாணம், 2000, பக். 73 - 92.
4. இலங்கையில் வேளைக்காறப் படைகள், நான்காவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மகாநாடு, ஆராய்ச்சிக் கட்டுரைகள், பதிப்பாசிரியர் சு. வித்தியானந்தன், யாழ்ப்பாணம், 1974.

**தமிழ்ச் சாசனங்கள்**

1. இலங்கைத் தமிழ்ச் சாசனங்களும் வரலாற்று ஆராய்ச்சிகளும், இளந்தென்றல், தமிழ்ச் சங்கம், கொழும்புப் பல்கலைக்கழகம், 1971, பக். 13 - 36. அழகன்குளம்

# 57. கரூரின் கணையாழி கூறும் கதை

ஐராவதம் மகாதேவன், சென்னை.

சங்கரன் ராமன், சென்னை.

இரு ஆண்டுகளுக்கு முன்னர் கரூரில் அமராவதி ஆற்றுப் படுகையில் ஒரு அரிய தங்கமோதிரம் கண்டெடுக்கப்பட்டுள்ளது.* அதன் எடை 13.5 கிராம். மோதிரத்தின் முகப்பில் ஒரு சிற்பமும், இடது புற விளிம்பின் ஓரத்தில் தமிழ்-பிராமியில் மூன்று எழுத்துக்களும் பொறிக்கப்பட்டுள்ளன.



பெயர்: எழுத்துக்களை *தி-யா-ன,* அதாவது *தியன்* என்று வாசிக்கலாம். எழுத்தமைதியாலும், பட்டிப்ரோலு முறையை ஒத்த சொல்லமைதியாலும் இதன் காலம் ஏறத்தாழ கி.மு. முதல் நூற்றாண்டின் பிற்பகுதி எனக் கணிக்க லாம். *தியன்* என்ற இயற்பெயர் திஷ்ய நட்சத்திரத்தின் தமிழாக்கம் ஆகும். இதையே புஷ்ய நட்சத்திரம் என்றும் கூறுவார்கள்.

இலங்கைக் குகைக் கல்வெட்டுகளில் சிங்கள பிராகிருத மொழியில் *திஷ்ய* என்ற பெயர், *திச* என்று பல இடங்களில் குறிக்கப்படுகிறது[1]. மேலும், தமிழகத்தில் அழகர் மலைக் கல்வெட்டில் *தியன்*[2] என்றும், கரூரில் கிடைத்த மற்றொரு தங்க மோதிரத்தில் *தியன் ஓதலன்*[3] என்றும், அழகன்குளத்தில் அகழ்வாய்வில் கிடைத்த பானை ஓட்டில் *திசஅன்*[4] என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது இப்பெயரே. இப்பொறிப்புகள் எல்லாம் ஒரே காலத்தவையாகும் (கி.மு. முதல் நூற்றாண்டு).

சிற்பம்: மோதிரத்தின் முகப்பில் ஓர் இளம் அரசகுமாரன் சித்தரிக்கப்பட்டு உள்ளான்; தலையில் மகுடமும், உடலில் கஞ்சுகம் என்ற நீண்ட அங்கியையும், இடையில் கச்சையையும், கால்களில் காலணிகளையும் அணிந்திருக்கின்றான். சிற்பத்தில் கிரேக்க-ரோமானியக் கலையின் தாக்கத்தைக் காண முடிகிறது.

---

* கரூரில் தொல்பொருள்களைச் சேகரிக்கும் நண்பரொருவர் 2000-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் சென்னைக்கு வந்து நாணயவியல் ஆய்வாளர் சங்கரன் இராமனிடம் ஒரு தங்க மோதிரத்தின் வண்ண ஒளிப்படத்தைத் தந்தார். அது ஆய்வுக்காக ஐராவதம் மகாதேவனிடம் ஒப்படைக்கப் பட்டது. இருவரும் இணைந்து எழுதிய கட்டுரை இது.

ஒரு சிங்கம் முன்னங்கால்களைத் தூக்கிய வண்ணம் பின்னங்கால்களில் நின்று கொண்டு இளவரசனின்மீது பாய்வது போலச் சித்தரிக்கப்பட்டுள்ளது. சிங்கத்தின் சிலிர்த்த பிடரியும் தூக்கிய வாலும் அதன் சீற்றத்தை வெளிப்படுத்துகின்றன. அரசகுமாரன் இடைவாளை உருவி தன் மீது பாயும் சிங்கத்தைத் தாக்க முற்படுகிறான்; தோளுக்கு மேலாக உடைவாளின் கைப்பிடி அவனுடைய வலது கையில் தென்படுகிறது; வாள் முனையை அவனுடைய உடல் மறைத்திருக்கிறது.

கணையாழியில் பொறிக்கப்பட்டுள்ள சிற்பம் பரதனின் வரலாற்றை நினைவூட்டுகிறது. துஷ்யந்த மன்னனுக்கும் சகுந்தலைக்கும் பிறந்த பரதன் விதிவசத்தால் காட்டில் ஓர் ஆசிரமத்தில் தாயுடன் தங்கி வளர்கிறான்; அப்பொழுது தொலைந்து போய் மீண்டும் கிடைத்த கணையாழி துஷ்யந்தனுக்கு சகுந்தலையின் நினைவைத் தருகிறது; மன்னன் சகுந்தலையைத் தேடிக் காட்டுக்குச் செல்கிறான்; அங்கு ஒரு சிங்கத்திடம் சற்றும் அச்சமின்றி விளையாடிக் கொண்டிருக்கும் சிறுவனைத் தன் மகன் என்று அடையாளம் கண்டுகொள்கிறான். இது மகாகவி காளிதாசன் எழுதிய *அபிக்ஞான சாகுந்தலம்* என்ற புகழ்பெற்ற நாடகத்தின் பிற்பகுதியில் வரும் நிகழ்ச்சியாகும்.

துஷ்யந்தனின் மகனாகிய பரதனின் வரலாறு மகாபாரதத்திலேயே காணப்படுகிறது. அதில் பரதன் இளம் பிராயத்திலேயே சிங்கம், புலி முதலிய கொடிய காட்டு விலங்குகளை அடக்கியாளும் திறமை பெற்றிருந்தான் என்றும், அதனால் அவனுக்கு *சர்வதமனன்* என்ற காரணப்பெயர் உண்டாயிற்று என்றும் கூறப்படுகிறது. பிற்காலத்தில் பரதன் ஒரு புகழ்பெற்ற சக்கரவர்த்தியாகத் திகழ்ந்து நாடு முழுவதையும் ஆண்டதால் இந் நாட்டுக்கு பரதகண்டம் என்ற பெயர் உண்டாயிற்று. சமணர் வரலாற்றில் பரத சக்கரவர்த்தி வர்த்தமான மகாவீரரின் சகோதரன் என்று அழைக்கப்படுகிறான்.

புராண கால பரதனுக்கும் தமிழகத்தில் வாழ்ந்த *தியன்* என்ற இந்த மோதிர உரிமையாளனுக்கும் என்ன தொடர்பு? தமிழகத்திலும் ஈழத்திலும் முற்காலத்தில் பரதர் அல்லது பரதவர் என்று அழைக்கப்பெற்ற இனத்தினர் கடலோரக் குடியிருப்புகளில் வாழ்ந்து வந்தனர். மீன்பிடித்தல், முத்துக் குளித்தல், சங்கு அறுத்தல் போன்ற தொழில்களிலும், முத்து, சங்கு அணிகள், உப்பு போன்ற பண்டங்களை விற்கும் வாணிகத்திலும் ஈடுபட்டிருந்தனர். இலங்கை பிராமிக் கல்வெட்டுகளில் *பரத* என்ற பட்டப்பெயரும் *திச* என்ற இயற்பெயரும் பல இடங்களில் இணைந்து வருவதைக் காண முடிகிறது.[5] மேலும், அண்மையில் இலங்கையின் தெற்கில் *திஸ்ஸ மஹரம* என்ற இடத்தில் கிடைத்த பல காசுகளில் ஒன்றில் இருபெயர்களையும் இணைத்து *பரத திசஹ* என்ற எழுத்துக்கள் முன்பக்கத்திலும், பின்பக்கத்தில் இணைகயல்களும் ஸ்வஸ்திகா சின்னமும் பொறிக்கப்பட்டுள்ளன.[6]



இலங்கைக் கல்வெட்டுகளில் பெரிதும் காணப்படும் *பரத* என்ற பட்டம் சமஸ்கிருதத்தில் *பரத* என்ற சொல்லின் அடிப்படையிலிருந்துதான் தோன்றியது என்பதைப் பெரும்பாலான அறிஞர்கள் ஏற்றுக் கொள்கின்றனர். மேலும், இலங்கையில் *பரத* என்றும் தமிழகத்தில் பரதர் அல்லது பரதவர் என்றும் அழைக்கப்பட்டவர்களை ஒரே இனத்தைச் சார்ந்தவர்கள் என்று கருதலாம்.[7]



பல ஆண்டுகளுக்கு முன்னர் புது. பொ. வெங்கடராமன் தருமபுரி மாவட்டத்தில் கடத்தூரில் கண்டெடுத்த ஒரு சுடுமண் இலச்சினையில் தமிழ்-பிராமி எழுத்துக்களில் *பா-ரா-த-ன* (பரதன்) என்ற பெயர் பொறிக்கப் பட்டுள்ளது[8]. எழுத்தமைதியிலிருந்தும், பட்டிப் ரோலு முறையை ஒத்த சொல்லமைதியிலிருந்தும் இந்தச் சுடுமண் இலச்சினையின் காலம் கி.மு. இரண்டாம் அல்லது முதல் நூற்றாண்டு எனக் கணிக்கலாம். பரத(வ) இனத்தைச் சார்ந்த *தியன்* என்பவனுடைய இயற்பெயரை எழுத்துக்களாலும், இனப்பெயரைச் சிற்பத்தாலும் ஒருங்கே சுட்டி நிற்கும் இப்பொன் கணையாழி பண்டைய தமிழகத்தின் ஒரு சிறப்பான கலைப்படைப்பாகும்.

---

அடிக்குறிப்புகள்

1 S. Paranavitana, 1970 *Inscriptions of Ceylon*, Vol. I, Glossary, pp. 109-110.

2 I. Mahadevan, 1966 *Corpus of the Tamil-Brahmi Inscriptions* : No.44.

3 நடன காசிநாதன், அர. வசந்த கல்யாணி, 1998 *தொல்பொருள் ஆய்வுத் துறையின் அரிய கண்டுபிடிப்புகள்* : எண் 27. (எங்கள் வாசிப்பு இதிலிருந்து சற்று வேறுபடுகிறது).

4 R. Nagaswamy, 1991 Alagankulam : An Indo-Roman trading post, *Indian Archaeological Heritage*, Vol.I, pp. 247-254. Pl.25.2, Fig.6.

5 S. Paranavitana, 1970 *Inscriptions of Ceylon*, Vol. I, p.xcv, nos. 125-157.

6 O. Bopearachchi, Harry Falk and Raja Wickremesinhe, 2000 Earliest inscribed coins, moulds, seals and sealings from Tissamaharama, Sri Lanka, *The Numismatic Chronicle*, 160 (2000), pp.117-134.

7 C.Maloney, 1969 The Paratavar : 2000 years of culture dynamics of a Tamil caste, *Man in India*, 49:1, pp.224-240.

8 P.B. Venkataraman, 1991 *The Hindu*, Madras, March 1.

**நன்றி**

படம் *1* : சங்கரன் இராமன், சென்னை.

படம் *2* : ஒஸ்மாண்ட் பொப்பஆராய்ச்சி, Osmund Bopearachchi இலங்கை.

படம் *3* : அமரர் புது. பொ. வெங்கடராமன்.

# 58. செய்தித் திரட்டு

### 58:1 கொரட்டி சூரியன் கற்சிலை

வேலூர் மாவட்டத்தைச் சேர்ந்த திருப்பத்தூர் வட்டத்தில், கொரட்டி ஊரில் அமைந்துள்ள காளத்தீஸ்வரர் திருக்கோயில் வளாகத்தில் ஒரு சூரியன் கற்சிலை வழிபாடற்று காணப்படுகின்றது. இச்சிலை உயரமான கிரிடமகுடத்தையும் அகலமான ஒளி வட்டத்தையும் உடையதாகும். இரண்டு கைகளும் நன்கு மலர்ந்த தாமரையை உடைய தண்டுகளை முஷ்டி முத்திரையில் பிடித்துள்ளன. இச்சிலை அவ்விடத்தில் கி.பி.9ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட கற்றளியில் இருந்திருக்க வேண்டும்.

**ம. காந்தி, வேலூர்.**

### 58:2 கணியூர் முதலைவாய்ப்பிள்ளை கற்சிற்பம்



கோவைக்கும் அவிநாசிக்கும் இடையில் உள்ள கணியூரில் சாலையின் வலப்புறத்தில் அம்மன் கோவிலுக்குச் சற்று மேற்கில் ஒரு தூணின் சிறிய அளவில் முதலை ஒன்று, கும்பிட்டுக் கொண்டிருக் கின்ற சிறுவனைக் கவ்விக் கொண்டிருக்கின்ற காட்சி 8 செமீ உயரம், 13 செமீ அகலத்தில் மிகத் தெளிவாகச் செதுக்கப்பட்டுள்ளது. அவிநாசி, சுந்தரரால் பாடப்பட்ட தலச்சிறப்பு கொண்டது. இதுபோன்ற சிற்பங்கள் திருமுருகன்பூண்டி, சேவூர், வெஞ்சமாங்கடல், கரூர், பவானி, திருச்செங்கோடு, தேவாரம், கொடுமணல் ஆகிய ஊர்களில் வடிக்கப்பட்டுள்ளன. இக்கற்சிற்பம் இருக்கக்கூடிய இடங்களெல்லாம் அவிநாசிக் கோயிலுக்குத் தானம் வழங்கப்பட்ட இடங்களாகக் கருதலாம்.

**ச. இரவி, கோவை.**

### 58:3 கணியூர் நடுகற்கள்

கோவை-அவிநாசி நெடுஞ்சாலையில் 20 கிமீ தொலைவில் உள்ள கணியூர் குடிகொங்காலம்மன் கோவிலின் தென்கிழக்கு மூலைச் சுற்றுச் சுவரை ஒட்டிய பகுதியில் இரண்டு நடுகற்கள் உள்ளன. இவற்றின் காலம் கி.பி. 9-10ஆம் நூற்றாண்டாகலாம். மண்ணில் புதைந்திருந்த இந்நடுகற்கள்

அண்மையில் வெளிப்படுத்தப் பட்டன. இந்நடுகற்கள் கிழக்குப்பார்த்த நிலையில் பலகைக்கற்களில் தனித்தனியாக இரு வீரர் களின் புடைப்புச் சிற்பங்களாகப் பொறிக்கப் பட்ட நிலையில் காணப்படுகின்றன. இரு வீரர்களின் தலைமுடி, உச்சியில் வாரி முடிக்கப்பட்ட வட்டவடிவக் கொண்டையுடன் அலங்கரிக்கப்பட்டுள்ளது. இரண்டாவது வீரனின் தலைப்பகுதி சிதைந்து காணப்படுகிறது. முதலாவது வீரனின் உருவம் 119 செமீ உயரம், 81 செமீ அகலத்திலும், இரண்டாவது வீரனின் உருவம் 112 செமீ உயரம், 70 செமீ அகலத்திலும் உருவாக்கப்பட்டுள்ளன. முதல் வீரன் இடப்பக்கம் திரும்பிய நிலையிலும், இரண்டாவது வீரன் வலப்பக்கம் திரும்பிய நிலையிலும் செதுக்கப்பட்டுள்ளனர். கீழே மூன்று கால்நடைகள் தெளிவாகச் செதுக்கப்பட்டுள்ளன.



ச. இரவி, கோவை

## 58:4 பட்டீஸ்வரம் அருகே புத்தர் சிலை கண்டுபிடிப்பு

தஞ்சாவூர் மாவட்டம் கும்பகோணம் அருகே பட்டீஸ்வரம்- திருவலஞ்சுழி சாலையில் கோபிநாதப்பெருமாள் கோயில் அருகே அண்மையில் ஒரு புத்தர் சிலை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இந்தச் சிலை பீடமின்றி காணப்படுகிறது. இதன் உயரம் சுமார் இரண்டு அடியாகும். இச்சிலையின் தலைப்பகுதி காணப்படவில்லை. அமர்ந்த நிலையில் பத்மாசன கோலத்தில் இச்சிலை உள்ளது. தியான நிலையில் உள்ள இச்சிலையில் மடிமீது வான்நோக்கி வைக்கப்பட்டுள்ள வலக்கரத்தில் சக்கரக்குறி காணப்படுகிறது. சோழ நாட்டில் காணப்படும் பெரும்பாலான கற்சிலைகளில் இந்த சக்கரக்குறியைக் காணலாம். இதுபோன்ற சக்கரக்குறி நாகபட்டின புத்தர் செப்புத்திருமேனிகளில் காணப்படுவதும் இங்கு நோக்கத்தக்கதாகும். திரண்ட மார்பும், திண்ணிய தோள்களும் சிலைக்கு அழகூட்டுகின்றன. பௌத்த சமயத்திற்கு சோழ மன்னர்கள் அதிக ஆதரவு தந்ததை இப்பகுதியில் காணப்படும் புத்தர் சிலைகள் உறுதி செய்கின்றன.



பா. ஜம்புலிங்கம், தஞ்சாவூர்.

## 58:5 வந்தவாசி வட்டத்தில் துர்கை சிலைகள்

திருவண்ணாமலை மாவட்டம், வந்தவாசி வட்டத்தில் வந்தவாசியில் இருந்து வடகிழக்கில் 5 கிமீ தூரத்தில் அமைந்துள்ள சளுக்கை என்ற ஊரின் ஈசானியத்தில் கற்பலகையில் புடைப்பாக ஒரு துர்கை சிலை வழிபாட்டில் இருக்கின்றது. தலையில் அழகிய மகுடம் அணிசெய்கிறது. துர்கை காட்டெருமைத் தலைமீது வலது காலை ஊன்றி இடது காலை மடக்கித் தனக்குக் கீழ் நின்று கொண்டிருக்கும் சிங்கத்தின் மீது வைத்துள்ளது. துர்கைக்கு வலது பக்கத்தில் ஒரு வீரன் தனது தலையைக் கொய்கிறான். இடது பக்கத்தில் ஒருவன் துர்கைக்கு வழிபாடு செய்கிறான். தரைக்கு மேல் துர்கையின் உயரம் 5 அடி, அகலம் 3 அடி ஆகும். சிற்ப அமைப்பின் அடிப்படையில் இச்சிலை கி.பி.9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனலாம்.

பெரணமல்லூருக்கு தெற்கில் மோசவாடி என்ற ஊர் உள்ளது. இவ்வூரின் திரௌபதி அம்மன் கோயிலுக்கு அருகில் களத்து மேட்டில் ஒரு துர்கை கற்சிலை மேற்கு நோக்கி நடப்பட்டுள்ளது. நான்கு கைகள் உள்ளன. மேல் கைகளில் சக்கரமும் சங்கும் உள்ளன. கால் முட்டிக்குக் கீழ், சிலை பூமியில்





புதைந்திருக்கிறது. சிற்பப் பாணியின் அடிப்படையில் இச்சிலை கி.பி.10ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் செதுக்கப்பட்டிருக்க வேண்டும்.

ம. காந்தி, வேலூர்.

## 58:6 விளை ஊர்ச் சிற்பங்கள்



திருவண்ணாமலை மாவட்டம், ஆரணி வட்டத்தில் ஆரணியிலிருந்து சேத்துப்பட்டிற்குச் செல்லும் சாலையில் 4 கிமீ தொலைவில் விளை என்னும் ஊர் உள்ளது. இவ்வூரின் ஈசான்யத்தில் கிழக்கு நோக்கி அமைந்துள்ள எழுவர் கன்னியர் கோயிலில் உயரமான அதிஷ்டானம் மட்டும் உள்ளது. சுவரும் கூரையும் இல்லை. இராட்டிர கூட மன்னன் மூன்றாம் கிருஷ்ணனின் கல்வெட்டு வடக்கு அதிஷ்டானத்தில் காணப்படு கிறது. ஆனால் காலம் தெரியவில்லை. இதிலிருந்து இந்தக் கோயில் கி.பி.10ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றியிருக்க வேண்டும். இந்த எழுவர் கன்னியர் சிலைகளுக்கு முன்னர் பிள்ளையார் சிலையும் இறுதியாக தட்சிணாமூர்த்தி சிலையும் ஆக ஒன்பது சிலைகள் வழிபாட்டில் உள்ளன. அனைத்தும் அமர்ந்த நிலையில் மார்புக்கச்சுடன் உள்ளன. சிலைகளின் பாணி வாலாசாபேட்டை வட்டம், பெருங்காஞ்சி எழுவர் கன்னியர்களின் சிலைகளை ஒத்துள்ளன.

விளைக்கு மேற்கில் உள்ள சித்தேரி என்ற ஊரின் பேருந்து நிறுத்தத்திற்கு மேற்கில் துர்கை, விஷ்ணு கற்சிலைகள் தனித்தனியாக உள்ளன. இந்த இரண்டு சிலைகளும் முன்பு சித்தேரிக்கும் விளைக்கும் இடையில் இருந்தன. இவை கி.பி.9ஆம் நூற்றாண்டு பாணியில் காணப்படுகின்றன.

**ம. காந்தி, வேலூர்.**

## 58:7 இரத்தினகிரி பாறை ஓவியங்கள்



வேலூர் மாவட்டம், வாலாஜாப்பேட்டை வட்டத்தில் வேலூருக்கு கிழக்கே 15 கிமீ தொலைவில் அமைந்துள்ள இரத்தினகிரி மலையில் பெருங்கற்காலத்தை சேர்ந்த பாறை ஓவியங்கள் இக்கட்டுரை ஆசிரியரால் 1995ஆம் ஆண்டு கண்டு பிடிக்கப்பட்டன. பாலமுருகன் கோயில் அமைந்துள்ள இரத்தினகிரி மலையின் வடக்கு அடிவாரத்தில் இயற்கையாக அமைந்துள்ள ஒரு சிறிய குகையின் மேற்கூரையில் இவ்வோவியங்கள் வெள்ளை நிறத்தில் தீட்டப்பட்டுள்ளன. மனிதர்கள், தேள் போன்ற உயிரினங்களும், சூரியன், நட்சத்திரம், நாமம், திரிசூலம், வட்டம், சதுரம், பெட்டி, முக்கோணம், குறுக்குக் கோடிட்ட சதுரம் போன்ற பல்வேறு

குறியீடுகளும் கோட்டுருவங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. மனிதர்கள் தங்கள் கைகளில் கம்பு, சூலம், கூர்முனை ஆயுதங்கள் வைத்திருப்பதைப் போலவும், ஒரு மனிதன் கீழாடை அணிந்துள்ளது போலவும் தீட்டப்பட்டுள்ளன.





இப்பாறை ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ள குகையைச் சுற்றிலும் பெருங் கற்படைக்காலத்தை சேர்ந்த ஏராளமான கருப்பு-சிவப்பு, கருப்பு மற்றும் சிவப்பு நிற பானை ஓடுகளும், இரும்புக் கழிவுகளும் காணப்படு கின்றன. இக்குகை அமைந்துள்ள மலைக்கு மேற்குப்புறத்தில் உள்ள பூட்டுத் தாக்கு கிராமத்திற்கு கிழக்கே உள்ள நத்தமேடு எனப் படும் 100 ஏக்கர் நிலப்பரப்பில் பெருங் கற்படைக் காலம் மற்றும் வரலாற்றுக் காலத்தைச் சேர்ந்த ஊரிருக்கை காணப்படுகிறது. மேலும், மாங்குப்பம், அரப் பாக்கம், திம்மனாச்சாரி குப்பம் போன்ற பகுதிகளில் பெருங் கற்படைக் காலத்தைச் சேர்ந்த சின்னங்கள் அதிக அளவில் காணப்படுவதால் மேற்காணும் குகையில் தீட்டப்பட்டுள்ள ஓவியங்களும் அக்காலத்தைச் சேர்ந்தவையாகவே இருக்கலாம்.

பாறை ஓவியங்கள் உள்ள குகையின் அடித்தளம் சிறிதளவு வழவழப்பாக்கப்பட்டு ஐந்து பாறைப்படுக்கைகள் அமைக்கப்பட்டுள்ளன. அப்படுக்கைகள் பிற்காலத்தில் வாழ்ந்த சமணர்களால் பயன்படுத்தப் பட்டவைகளாகும். அப்படுக்கைகளிலும், அதனருகிலும் கோலம், குறுக்குக் கோடிட்ட சதுரம், வேலியிடப்பட்ட மரம் மற்றும் சமயம் சார்ந்த சில குறியீடுகள் செதுக்கப்பட்டுள்ளன.

கி. குமார், சென்னை.

**58:8 அகரம் சித்தாமூர் விநாயகர்**



விழுப்புரத்திற்கு அருகில் உள்ள அகரம் சித்தாமூர் கிராமத்தின் ஊர் மந்தையில் பலகைக் கல்லில் குடைந்து செதுக்கப்பட்டுள்ளவிநாயகர்சிற்பம் உள்ளது. கல்லின் நான்கு ஓரமும் புடைப்பாகவே உள்ளன. நான்கு கரங்கள், வலக்கரம் ஆசிவழங்கும் வடிவம். இடக்கரம் தொடைமீது வைத்த

வண்ணம். இன்னொரு வலக்கரத்தில் கேடயமும் இடக்கரத்தில் வாளும் ஓங்கிப் பிடித்த நிலையில் உள்ளன. வாளும் கேடயமும் உள்ளமை சிறப்பாகும். அமைப்பின் அடிப்படையில் 9ம் நூற்றாண்டாக இருக்கலாம்.

**கொடுமுடி சண்முகம், சென்னை.**

## *58:9* தஞ்சை மாவட்டத்தில் சில புதிய கற்சிலைகள்

தஞ்சாவூர்-நாகபட்டினம் நெடுஞ்சாலையில் உள்ள அம்மாபேட்டைக்கு வடக்கே 6 கிமீ தொலைவில் உள்ள அவளிவணல்லூரில் பேருந்து நிலையத்திற்கு அருகில் உள்ள பனையாத்தாள் கோயிலின் எதிரே தெற்குத் திசையை நோக்கி மார் பளவுக்கு கீழ்ப்பகுதி முழுதும் மண்ணுக்குள் புதையுண்டு இருக்கும் சிலையைத் தோண்டிப் பார்த்ததில் அச்சிலை தலைப்பலி வீரனின்சிலை என்று கண்டறியப்பட்டது.





மு(ன்)னியூரில் பேருந்து நிறுத்தத்திற்கு மேற்கில் உள்ள பனைமரத்திற் கடியில் நிற்கும் நிலையில் உள்ள சமணர் சிற்பம்.

**கா.சண்முகம், தஞ்சாவூர்.**

# 59. புதிய வெளியீடுகள்

**59:1**

***ஆ. சிவசுப்பிரமணியன், கிறித்துவமும் சாதியும், காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில், 2001, 256 பக்கங்கள்.***

சமய மோதல்கள், தமிழகத்தின் சமுதாய வரலாற்றில் முக்கிய இடம் வகிப்பதால் இவற்றை வெறும் சமய மோதல்களாக ஒதுக்கிவிடாமல் இதற்குப் பின்னால் மறைந்திருக்கும் வர்க்க நலன்களைப் பார்க்க வேண்டும். இதற்காகத் தமிழகத்தின் சமயங்கள் குறித்த ஆய்வு நிகழ்த்தப்படுவது அவசியம். கத்தோலிக்க சமயத்தில் சாதி அடிப்படையில் தமிழகம் முழுவதும் ஒரு காலகட்டத்தில் பரவலாகக் காணப்பட்ட மோதல்களுக்கு ஒரு குறிப்பிட்ட பகுதியை ஆய்வுக் களமாகக் கொண்டு ஆய்வினை மேற்கொள்ளலாம் என்பதற்குக் காட்டாக இந்நூல் அமைந்துள்ளது. நெல்லை மாவட்டத்திலுள்ள வடக்கன் குளம் என்ற கிராமத்தில் கத்தோலிக்கத் திருச்சபை 1749ஆம் ஆண்டிலிருந்தே ஒரு சாதிய பிரச்சனையாக எதிர்கொண்ட, கோவிலின் பிரிவினைச் சுவர் இடிப்புப் போராட்டம், இந்நூலின் ஆய்வுப் பொருளாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. புதுச்சேரியில் கிறித்துவ சமயத்தில் நடந்த ஒரு சாதிப் பிரச்சனையையும் முன்னுரையில் எடுத்துக்காட்டாகச் சுட்டப்பட்டுள்ளது. கத்தோலிக்கத் திருச்சபையின் முக்கியத் தளமான வடக்கன் குளத்தின் பெயர்க்காரணம், இங்கு பூர்வீகக் குடிகளான நாடார்கள் எப்படி வந்தனர், வெள்ளாளர் குடியேற்றம் தோன்றிய விதம் போன்றவை தெளிவாகக் காட்டப்பட்டுள்ளன. ஒரே மத அமைப்பின் எல்லைகளுக்குள்ளாக இருந்தபோதிலும் கூட சாதிப் பிரிவினையும் சமூக ஏற்றத்தாழ்வும் போராட்டத்தை விளைவிக்கத் தவறுவதில்லை என்பதை இந்நூல் காட்டுகிறது. சமய வரலாற்றை ஆய்வு செய்ய முறையியல் கோட்பாடுகளை வரையறுக்க வேண்டும். அதற்காக ஆசிரியர் தந்துள்ள முக்கிய கேள்விகள் ஆய்வாளர்கள் கவனிக்க வேண்டியன. வழிபாட்டிற்காக வந்த ஒரே சமயத்தைச் சேர்ந்த இரு சகோதரர்களையே (கிறித்துவத் துறவிகள்) சாதியின் அடிப்படையில் பிரிவினைச் சுவர் பிரித்துப் பார்த்ததால் அவ்விருவரும் ஆலயத்திற்குள் நுழையாமலேயே சென்றனர் என ஆசிரியர் சுட்டும் பொழுது ஒரே மதத்தில் சாதியப் போக்கு எந்த அளவிற்கு இருந்தது என்பதைக் காணமுடிகிறது. 1910இல் பிரிவினைச் சுவர் இடிக்கப்பட்டும்கூட சாதியம் அவர்களைவிட்டு விலகவில்லை. 1950களில் ஒரு பிரிவினர் பிள்ளையார் கோயில் ஒன்றைக் கட்டியதாகக்கூறி நூல் முடிக்கப்பட்டுள்ளது. விரிந்த பின்னிணைப்பில் கத்தோலிக்க மத குருமார்களின் சுற்றறிக்கைகள், கடிதங்கள், வழக்குகள் தொடர்பாக

நீதிமன்றம் அளித்த தீர்ப்புகள், அரசு அலுவலர்களுக்கு எழுதப்பட்ட கடிதங்கள் எனப் பல ஆவணங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. நூலாசிரியர் ஒரு சமூக விஞ்ஞானி என்பதில் ஐயமில்லை. வரலாற்று ஆய்வாளர்கள் மட்டுமன்றி சமூக அக்கறையுள்ள அனைவரும் படிக்க வேண்டிய நூல்.

**பா. ஜெயக்குமார், தஞ்சாவூர்.**

**59:2**

***ச. கிருஷ்ணமூர்த்தி, கல்வெட்டுகளில் ஊரும் பேரும் (செய்யாறு), மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2001, 184 பக்கங்கள்.***

திருவண்ணாமலை மாவட்டம், திருவோத்தூர் (செய்யாறு) வேதபுரீஸ்வரர் கோயில் வளாகத்தில் காணப்படும் கல்வெட்டுகளில் உள்ள ஊர்ப் பெயர்கள், தனி நபர் பெயர்களைப் பற்றிய செய்திகளை இந்நூல் ஆசிரியர் வெளிக்கொணர்ந்துள்ளார். மொத்தம் 81 கல்வெட்டுகளின் மூல பாடங்கள் ஆவணப்படுத்தப்பட்டுள்ளமை இந்நூலின் தனிச்சிறப்பாகும். சோழர், பாண்டியர், காடவராயர், தெலுங்குச் சோழர், சம்புவராயர் இவர்களுக்குப் பின் வந்த பல வம்சத்தைச் சேர்ந்த ஆட்சியாளர்களின் கல்வெட்டுகள் உள்ளன. வெளியிடப்பட்ட மற்றும் வெளியிடப்படாத கல்வெட்டுகளின் மூல பாடங்கள் இந்நூலில் வெளியிடப்பட்டுள்ளமை வரலாற்றாய்வாளர்களுக்கு மிகவும் பயனுள்ளதாகும். இக்கல்வெட்டுகளைக் கொண்டு ஊர்ப் பெயராய்வு மேற்கொண்டு அதன் வரலாற்றுச் சிறப்புடன் அவ்வூர் தற்பொழுது செய்யாறு வட்டத்தில் எங்கிருக்கின்றது என்பதையும் சுட்டியுள்ளார். தமிழகத்தின் பிற பகுதிகளைச் சேர்ந்த பல ஊர்களின் பெயர்களும் இக்கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளன. இரண்டாம் குலோத்துங்கன் கல்வெட்டில் குறிக்கப்படும் (ப.47) குளமுக்கு என்ற ஊர் தற்போது செய்யாறு-வந்தவாசி சாலையில் உள்ள குளமந்தை என்ற ஊராகும் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இந்நூலின் மற்றொரு இடத்தில் (ப.81) மேற்சுட்டிய கல்வெட்டு மூன்றாம் இராசராசன் காலத்தைச் சேர்ந்ததாக சரியாகக் காட்டப்பட்டுள்ளதோடு குளமுக்கு மலைமண்டலத்தில் இருந்துள்ளது எனவும் குறிப்பிடுகிறார். அவ்வாறாயின், நூலாசிரியர் கூறுவதுபோல குளமுக்கு தற்போதைய குளமந்தையாக இருக்கமுடியாது. மூன்றாம் இராசராசனின் பல கல்வெட்டுகள் மலைமண்டலத்து குளமுக்கைச் சேர்ந்த குதிரைச் செட்டிகளைப் பற்றிய குறிப்புகளை நமக்குத் தருகின்றன. இடைக்கால தென்னிந்தியாவின் குதிரை வணிக மையமாக விளங்கிய குளமுக்கு (இன்றைய பெயர் : பள்ளிப்புரம்) கேரள மாநிலம் பாலக்காடு மாவட்டத்தில் அமைந்துள்ளது. அரசர், உயரலுவலர்கள், பணியாளர்கள் என சமூகத்தில் பல நிலைகளில் காணப்பட்ட தனிநபர் பெயர்களை கல்வெட்டுகளின் வாயிலாக வெளிக்கொணர்ந்துள்ளார். தமிழ்மொழி அறியாதாரும் தெரிந்துகொள்ளும் வகையில் இக்கோயிலைப் பற்றிய வரலாற்றுச் செய்திகளை ஆங்கிலத்தில் சுருக்கமாகத் தந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

**பா. ஜெயக்குமார், தஞ்சாவூர்.**

***பா. ஜெயக்குமார், தமிழகத் துறைமுகங்கள், அன்பு வெளியீட்டகம், தஞ்சாவூர், 2001, 298 பக்கங்கள்.***

தமிழகத்தில் நல்ல வரலாற்று நூல்கள் வெளிவருவது அரிது. அதிலும் கடல்சார் வரலாற்று நூல்கள் வெளிவருவது மிக அரிது. கடல்சார் வரலாற்றியல் துறை தமிழக வரலாற்றியலில் ஒரு புதிய துறை. ஒரு நாட்டு மக்களின் பொருளாதாரம், வணிகம், ஏற்றுமதி-இறக்குமதிப் பொருட்கள், பிற நாட்டுத் தொடர்பு இவைகளைக் கடல்சார் வரலாற்றியல் மூலமே தெளிவாக அறிய முடியும். முழுமையாக இவ்வியல் பற்றிய செய்திகளைக் கூறும் தனிநூல் இல்லாவிடினும், பல வரலாற்று நூல்களில் இத்துறை பற்றிய செய்திகள் சிதறிக் கிடக்கின்றன. அவை அனைத்தையும் தேடித் தொகுத்துள்ளார் இந்நூல் ஆசிரியர். தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் கள ஆய்வை மேற்கொண்டும், இலக்கியம், கல்வெட்டு, செப்பேடு, நாணயம், தொல்லியல், தனிப்பாடல், நாட்டுப்புறப்பாடல், கட்டிடக்கலை முதலியவற்றில் தேவையான செய்திகளைத் தொகுத்து இத்துறையில் தமிழில் முழுமையான தனி நூல் இல்லை என்ற பெருங்குறையை நூலாசிரியர் நீக்கியுள்ளார். தொன்மையான பாறை ஓவியங்களிலிருந்து இன்றைய தகவல் தொடர்பினைக் கூறும் நாளிதழ்கள் வரை ஒன்றைக்கூட விட்டுவிடாமல் ஆய்வு செய்துள்ளார். சங்ககாலத் துறைமுகங்கள் பற்றி சங்க நூல்களிலிருந்து பொருத்தமான பாடல் அடிகளைக் காட்டி விளக்கும் நூலாசிரியர், பண்டைய கடற்கரைப் பெருநகரங்களாகவும், துறைமுகங்களாகவும் விளங்கிய காவிரிப்பூம்பட்டினம், அரிக்கமேடு, கொற்கை, அழகன்குளம், வசவசமுத்திரம் ஆகிய இடங்களில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சி முடிவுகளையும் பொருத்திக் காட்டுவதுடன் இவ்விடங்களுடன் ரோமானியர் கொண்டிருந்த தொடர்புகளையும் சிறப்பாக விளக்கியுள்ளார். இந்நூலின் மையக் கருத்தாகக் கி.பி. 9ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.16ஆம் நூற்றாண்டு வரை தமிழகக் கடற்கரையில் மிகச் சிறந்து விளங்கிய 21 துறைமுகப் பெருநகரங்கள் பற்றிய செய்திகள் முழுமையாக இந்நூலில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. கேரளம், ஆந்திரம், மராட்டிய மாநில துறைமுக நகரங்களோடு தமிழக வணிகர்கள் கொண்டிருந்த தொடர்பும், அவர்கள் அங்கு 'பெற்றிருந்த பெரும் சிறப்பும் செல்வாக்கும் நன்கு ஆய்ந்து கூறப்பட்டுள்ளன. அக்காலத் தமிழகத் துறைமுகங்கள் வாயிலாகச் சீனம், தென்கிழக்கு ஆசிய நாடுகள், இலங்கை, அரபு நாடுகள் ஆகியவற்றோடு தமிழ்நாட்டு வணிகர்கள் கொண்டிருந்த தொடர்புகளும் தக்க சான்றுகளுடன் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. தமிழகத் துறைமுகங்கள் பற்றிய வரலாற்றுச் செய்திகளுடன் அங்கு பரிமாறப்பட்ட ஏற்றுமதி-இறக்குமதிப் பொருள்களைப் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார் ஆசிரியர். தமிழகத்தில் உள்நாட்டிலும், வெளிநாடுகளிலும் வணிகத்தில் ஈடுபட்டிருந்த பல்வேறு வணிகக் குழுக்கள் பற்றிய பல செய்திகள் மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இந்நூல் தேவையான நிலப்படங்கள், வரைபடங்கள், நிழற்படங்கள் ஆகியவற்றை பிண்ணிணைப்பாப் பெற்றிருப்பது சிறப்பாகும். தமிழகத்

துறைமுகங்கள் என்னும் இந்நூல் கடல்சார் வரலாற்றியல் துறையின் சிறப்புமிக்க கலைக்களஞ்சியம் எனலாம்.

**ந. அதியமான், தஞ்சாவூர்.**

**59:4**

***ச. கிருஷ்ணமூர்த்தி, மதிகெட்டான் நாடகம், உண்ணாமலைப் பதிப்பகம், 12/1 புதுப்பேட்டை வடக்குத் தெரு, சிதம்பரம், 2001, 128 பக்கங்கள்.***

ஓலைச் சுவடிகளைத் தொகுத்து பதிப்பிக்கப் பெறாதவற்றை பதிப்பிப்பதில் ஆர்வம் குறைந்து வரும் காலத்தில் திருவள்ளூர் மாவட்டத்தில் உள்ள கூவம் எனும் ஊரைச் சார்ந்த கூவைப்புலவனின் மதிகெட்டான் நாடகம் எனும் ஓலைச் சுவடித் தொகுப்பை ஆசிரியர் பதிப்பித்திருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது. அயோத்தியைச் சேர்ந்த இந்திரராசன் மகனான குந்தி மகராசன் கோயில் தலங்களை தரிசிக்க அமைச்சன் செல்லப்பனுடன் திருவத்தியூர் வந்து சேர்ந்தபொழுது தாசி வல்லியிடம் மயங்கி பொருளனைத்தையும் இழந்து வறுமையடைந்து புலம்புவதை நாடக ஆசிரியர் அழகிய நடையில் தந்துள்ளார். 17ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட இந்நாடகத்தில் அச்சமயத்தில் வழங்கி வந்த புராணச் செய்திகள், நாயக்கர்கால பரிவாரம், ஆடை அணிகலன்கள், அமைச்சன், கணக்கர்கள், எடுபிடி ஆட்களின் பணிகள், தொண்டை மண்டலத்தில் நாட்டியம் ஆடுவோரை ஆதரித்த செல்வந்தர்கள் வாழ்ந்த ஊர்கள், தேசக் கணக்கு, சீர்மைக் கணக்கு, ஆயக்கணக்கு, அணிந்துரைக் கணக்கு, கோயில் கணக்கு எனப் பல வகைப்பட்ட கணக்குகளையும் ஆசிரியர் கூறிச் செல்வது வரலாற்றாய்வாளர்களுக்கு பயனுள்ளதாக இருக்கும். தாசி வல்லி, நாடகத் தலைவனான குந்திராசனை மருந்து வைத்து மயக்கினாள் எனக் கூறுமிடத்தில் மூலிகைகளின் பட்டியல், கடையில் விற்கப்படும் மருந்துப் பொருட்களின் பட்டியல், எண்ணெய் மற்றும் சாறுகளின் பட்டியல், மாந்திரீக வரிகளின் பட்டியல் அடங்கிய நீண்டதொரு பட்டியல் ஆசிரியரின் பொது அறிவைக் காட்டுகிறது. பதிப்பாசிரியர் இந்நாடகத்திற்கு நல்ல ஓர் ஆய்வுரையை வழங்கியுள்ளார். நொண்டி நாடகங்களின் சாயலில் இந்நாடகம் இருப்பினும் இதுவரை வெளியான நொண்டி நாடகங்களின் வேறுபட்ட புதிய நாடகமாக பதிப்பாசிரியர் குறிப்பிடுகிறார். மேலும் படிப்போர் அனைவரும் எளிதில் புரிந்துகொள்ளும் வகையில் சொற்பொருள் அகராதியை நூலின் இறுதியில் அளித்துள்ளார். இந்நூல் இலக்கிய, சமூக-வரலாற்றாய்வாளர்களுக்கு மிகவும் பயனுள்ளதாகும்.

**ந. அதியமான், தஞ்சாவூர்.**

**59:5**

**தொ. பரமசிவன், *பண்பாட்டு அசைவுகள்*, காலச்சுவடு பதிப்பகம் 669, கே.பி. சாலை, நாகர்கோவில் , 2001, 199 பக்கங்கள்.**

ஏற்கனவே வெளிவந்த ஆசிரியரின் *தெய்வங்களும் சமூக மரபுகளும்* (1995, என்.சி.பி.எச் வெளியீடு), *அறியப்படாத தமிழகம்* (1997, ஜெயா பதிப்பகம்) என்னும் நூல்களுடன் சில புதியகட்டுரைச் சேர்க்கைகளோடு உருவானது இந்நூல். நாட்டார் வழக்கியல், தொல்லியல், கல்வெட்டு, சமயம் மற்றும் இலக்கியச் சான்றுகளை புதிய பரிமாணத்தில் விளக்கிச் செல்வது மிகவும் வரவேற்கத் தகுந்தது. தமிழ், தமிழர் உணவு, உடை. உறவுப்பெயர்கள், திருவிழாக்கள், பிராமண இசுலாமிய வருகையில் தமிழ்ப்பண்பாட்டு மாற்றங்கள், பௌத்த சமணசமயத் தாக்கங்கள் போன்றவற்றை 45 குறுந்தலைப்புகளில் முதற்பகுதியில் ஆசிரியர் அளித்துள்ளார். இரண்டாம் பகுதியில் சமயம், கோவில்சார் கட்டுரைகளை அடிக்குறிப்புகளுடன் ஆசிரியர் விரிவாக அளித்துள்ளார். இவற்றுள் அழகர்கோவில், கள்ளழகர், தமிழும் வைணவமும், மதுரைக்கோவில் அரிசன ஆலய பிரவேசம் ஆகியன பற்றிய கட்டுரைகள் சிறந்தன. தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகளை புதிய பரிமாணத்தில் பல இயல் சான்றுகளுடன் எழுதப்பட்டிருப்பினும் சிலவற்றை எளிதில் ஏற்பது இயலாது. உதாரணமாக, கறுப்பு என்னும் தலைப்பில் தமிழகத்தில் நிற வேற்றுமை தொடக்கம் பற்றிய கட்டுரை. நிற வேற்றுமைக் கருத்து உலகம் தழுவிய ஒன்று. அது எவ்வாறு தமிழகத்திற்கு மட்டும் பொருந்தும் என்னும் விளக்கம் தரப்படவில்லை. மேலும் இசுலாமிய மதத்தாக்கம் எவ்வாறு தமிழர் பண்பாட்டில் மாற்றம் விளைவித்தது என ஆர்வத்துடன் விளக்கும் ஆசிரியர் பிராமண வருகையால் ஏற்பட்ட தமிழ்ப் பண்பாட்டு மாற்றங்களை தவறென்பதுபோல் அளித்திருப்பது *அறியப்படாத தமிழகம்* நூலுக்கு அணிந்துரை எழுதிய அ.இரா. வெங்கடாசலபதி கூறியுள்ளதுபோல் பண்பாட்டு நிகழ்வுகளுக்கு விளக்கம் அளிக்கும்போது ஒருவகையான செயல்பாட்டு வாதத்திற்குள் (functionalism) வழுக்கி விடுகிறாரோ என்று எண்ணத்தோன்றுகிறது. இவ்வாறு சில கருத்து வேறுபாடுகள் இருப்பினும் இந்நூல் அனைவருக்கும் மிகப் பயனுடையது.

**ந. அதியமான், தஞ்சாவூர்.**

***59:6***

***Kaveri: Studies in Epigraphy, Archaeology and History*, Editor: S. Rajagopal, Panpattu Veliyeetakam, Chennai, 2001, 714 pages.**

இந்த நூல் பேராசிரியர் எ. சுப்பராயலு அவர்கள் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவின்போது அவர்பால் பற்றுடைய அவரது மாணவர்களும் நண்பர்களும் அவருக்கு அளித்த பரிசுப் பேழை ஆகும். தொல்பழங்காலம் முதல் தற்காலம் வரையிலான வரலாற்று ஆய்வுக் கட்டுரைகள்

தொகுக்கப்பட்டுள்ளது இன்னூலின் சிறப்பாகும். நான்கு பெரும் பகுதிகளாக இன்னூல் பகுக்கப்பட்டுள்ளது. முதல் பகுதியில் பேராசிரியரின் 12 ஆய்வுக்கட்டுரைகள் அளிக்கப்பட்டுள்ளன. சோழ அரசு, ஆட்சிமுறை, நிலத்தீர்வை, நிலப்பிரிவுகள், நில அளவை, சமுதாய மாற்றம், அஞ்சுவண்ணம் என்ற வணிகக் குழு ஆகியன பற்றிய ஆய்வுக்கட்டுரைகள் உள்ளன. இப்பகுதி தனிநூலாகவும் (குஜுதஜீடிஹுண் டிண இணிடுச் ஏடிண்ஞுணிஜுதா, குதஜுாச்ஞுடடி கச்ஞுஜுடிணீணீச்டுச்ட், இடஹுணணச்டி, 2001, 152 ணீச்ஞ்ஹுண்) வெளியிடப்பட்டுள்ளது. இரண்டாம் பகுதியில் கல்வெட்டு மற்றும் தொல்லியல் தொடர்பான 11 கட்டுரைகளும், மூன்றாம் பகுதியில் தென்னிந்திய வரலாறு தொடர்பான 16 கட்டுரைகளும், நான்காம் பகுதியில் கலை, சமயம், மொழி, பண்பாடு தொடர்புடைய ஆய்வுக் கட்டுரைகள் 26ம் தரப்பட்டுள்ளன. நான்காம் பகுதியில் தமிழில் எழுதப்பட்ட 14 கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இன்னூலுக்கு பெருமை சேர்க்கும் வண்ணம் பல மூத்த ஆய்வாளர், வெளிநாட்டு அறிஞர்களோடு இளைய தலைமுறையினரும், பேராசிரியரின் மாணவர்களும் அவர்பால் பற்றுடையோரும் கட்டுரைகள் நல்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது. புதிய கண்டுபிடிப்புக்கள் வரிசையில், ஒரிசாவில் கிடைத்த சோழர் கால முத்திரை, கம்பூசியாவில் கண்டெடுக்கப்பட்ட புதிய வடமொழிக் கல்வெட்டு, கருநாடகத்தில் காணப்பட்ட புதிய நாணயங்கள், தொல்பழங்காலத் தொல்லியல் வளர்ச்சி, தென் தமிழகத்தில் கற்கால பண்பாட்டுத் தடயங்கள், செஞ்சி வட்டத்தில் புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள் போன்றவற்றைக் குறிப்பிடலாம். வரலாற்று அண்மைக்கால தொல்லியல் ஆய்வுகளுடன் தொல்பழங்கால மக்கள் பயன்பாட்டில் இருந்த கார்நீலியன் மணிகள் பற்றிய ஆய்வும் இடம்பெற்றுள்ளது. தமிழக வரலாற்று வரைவியலில் மு. இராகவ ஐயங்காரின் பணி பற்றிய ஒப்பாய்வும் இடம் பெற்றுள்ளது. புராண இதிகாசத்திலிருந்து கிடைக்கப்பெறும் அரச குலங்களின் வரலாறு, மௌரியர் கால சமுதாய அமைப்பு, தென்னிந்தியாவில் மௌரியர் ஆதிக்கம், சங்ககால அரசுருவாக்கம் போன்ற முக்கிய பண்புகளும் ஆராயப்பட்டுள்ளன. நகராக்கம், பிரமதேயங்களின் வளர்ச்சி, பிராமணர் குடிப்பெயர்வுகள், இடைக்கால உழவர் போராட்டங்கள், திருமண மரபுகள், ஓவியங்கள் மற்றும் அவற்றால் அறியப்படும் சமுதாய வாழ்க்கை, 19ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட உழவர் போராட்டங்கள் ஆகியனவும் ஆராயப்பட்டுள்ளன. கல்வெட்டாய்வு, நாணயங்கள் ஆய்வு, தமிழ் மொழி வளர்ச்சி, சமணசமய வளர்ச்சி, கட்டிடக் கலை மற்றும் சிற்பக்கலைப் பண்புகள் பலவும் இக்கட்டுரையில் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இது போன்ற பல்திறம் வாய்ந்த ஒரு நூலைத் தொகுப்பது என்பது எளிதான காரியமன்று. பல துறை சார்ந்த ஆய்வாளர்களிடமிருந்து ஆய்வுக் கட்டுரைகளைக் காலத்தே பெற்று முறையாகத் தொகுத்துள்ளமை மிகப் பெரும் பணியாகும். அவ்வகையில் இன்னூலை முறையாகத் தொகுப்பித்தோரும், தொகுப்பாசிரியரும் நம் பாராட்டுக்கு உரியவர்கள்.

**ப. சண்முகம், சென்னை.**

59:7

***அளக்குடி ஆறுமுகசீதாராமன், தஞ்சாவூர் நாயக்கர் காசுகள், தனலெட்சுமி பதிப்பகம், தஞ்சாவூர், 2002, 50 பக்கங்கள்.***

தஞ்சை நாயக்க அரசைத் தோற்றுவித்த செவ்வப்ப நாயக்கரின் (கி.பி. 1532-1563) காசுகள் எளிதில் கிடைப்பதில்லை. அவற்றை மிகச் சிறப்பாகச் சேகரித்து வெளியிட்டுள்ளது பாராட்டத்தக்கது. அவரைத் தொடர்ந்து வந்த அச்சுதப்ப நாயக்கர் (கி.பி. 1560-1600), இரகுநாத நாயக்கர் (கி.பி. 1600-1645), விஜயராகவ நாயக்கர் (கி.பி. 1631-1673), அளகிரி நாயக்கர் (கி.பி. 1674) காசுகளும் தஞ்சாவூர் நாயக்க மன்னர்களின் சமயப் பற்றையும், அவர்களுடைய சிறப்பையும், விஜய நகர சாம்ராஜ்யத்துடன் அவர்களுக்கிருந்த தொடர்பையும் நன்கு விளக்குகின்றன. காளையின் உருவம், கண்டபேருண்ட பறவை போன்ற சின்னங்கள் விஜயநகரத் தொடர்பை எடுத்துக் காட்டுகின்றன. சிவன், பார்வதி, முருகன், கணேசர், ராஜகோபால ஸ்வாமி போன்ற தெய்வ உருவங்கள் சமயம் பற்றின சான்றுகள். தஞ்சை நாயக்க மன்னர்களின் காசுகளைப் பற்றி இதுவரை விரிவான நூல்கள் வெளிவரவில்லை. அவ்வப்போது சில காசுகளைப் பற்றி மட்டுமே விவரங்கள் வந்துள்ளன. தஞ்சை நாயக்கர் வரலாற்றோடு அம்மன்னர்கள் பெயர் பொறித்து வெளியிடப்பட்ட பல புதிய காசுகளையும் காலவாரியாக எடுத்துக் கூறி ஒளிப்படங்களுடன் விளக்கியிருக்கிறார். இந்நூல் நாணயவியலுக்கும் வரலாற்று ஆய்வுக்கும் மிக முக்கியமானது.

**ஆர். வனஜா, சென்னை.**

**(நன்றி: தினமணி).**

59:8

***அளக்குடி ஆறுமுகசீதாராமன், தமிழகக் காசுகள் (அண்மைக்காலக் கண்டுபிடிப்புகள்), தனலெட்சுமி பதிப்பகம், தஞ்சாவூர், 2002, 44 பக்கங்கள்.***

அண்மைக்காலங்களில் கண்டுபிடிக்கப்பட்ட தொல்லியல் மதிப்புவாய்ந்த காசுகளின் தொகுப்பு இந்நூல். மொத்தம் நாற்பது தலைப்புகளில் காசுகள் வெளியிடப்பட்டுள்ளன. அவற்றில் முத்திரைக் காசு, சங்க காலச் சேரர், சோழர், பாண்டியர், மலயமான், பல்லவர் காசுகள் முதல் தமிழகத்தில் இடைக்காலத்தில் ஆட்சி செய்த சோழ, பாண்டிய, விஜயநகர், நாயக்கர் காசுகள் மற்றும் பிற்காலத்தைச் சேர்ந்த இந்தோ-டச்சு காசுகள் வரை உள்ளமை குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு காசுக்கும் உரிய விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. வரலாற்றுக்கு மூல ஆதாரங்கள் கிடைப்பது என்பது மிக அரிது. அந்த வகையில் வரலாற்று ஆய்வாளர்களுக்கு பல அரிய காசுகளை ஆசிரியர் இந்நூலின் வாயிலாக வழங்கியிருக்கிறார். அனைவரும் வாங்கிப் பயன்பெறத்தக்க வகையில் குறைந்த விலையில், சிறப்பான ஒளிப்படங்களுடன் இச்சிறிய நூல் நல்ல முறையில் வெளியிடப்பட்டுள்ளது

**பா.ஜெயக்குமார், தஞ்சாவூர்.**

**59:9**

***அளக்குடி ஆறுமுகசீதாராமன் மற்றும் சங்கரன்ராமன், மதுரை நாயக்கர் காசுகள், தனலெட்சுமி பதிப்பகம், தஞ்சாவூர், 2002, 55 பக்கங்கள்.***

மதுரை நாயக்க அரச மரபினர் வெளியிட்ட எண்பத்தாறு வகை காசுகளைப் பற்றியது இச்சிறிய நூல். தமிழ், தெலுங்கு, நாகரி எழுத்துக்களில் ஆட்சியாளர்களின் பெயர் பொறிக்கப்பட்டுள்ளன. இராணிமங்கம்மாள் வெளியிட்ட காசுகள் அதிகமாக உள்ளமை குறிப்பிடத்தக்கது. பாண்டியர்களின் சின்னமான இணைக்கயலை நாயக்கர்களும் தங்களது காசுகளில் பயன்படுத்தியுள்ளமை, காசுகளில் அவர்கள் வணங்கிய தெய்வங்களின் உருவங்களைப் பொறிப்பதற்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளமை, தமிழிலும், தெலுங்கிலும் மதுரை எனப் பெயர் பொறித்து மதுரைக்குப் பெருமை சேர்க்கும் வகையில் காசுகளை வெளியிட்டமை எனப் பல வரலாற்றுச் சிறப்புகளை இந்நூலில் காணமுடிகிறது. *ஸ்ரீரங்க* என்று தெலுங்கில் பொறிக்கப்பட்ட காசுகள் மதுரை நாயக்க மன்னர்கள் வெளியிட்டவை எனத் தெளிவுபடுத்தியுள்ளார். இந்நூலில் வெளியிடப்பட்டுள்ள காசுகளின் மூலமாக மதுரை நாயக்கர் கால அரசியல், பொருளாதார, சமய, பண்பாட்டுக் கூறுகளை அறிய முடியும்.

**பா. ஜெயக்குமார், தஞ்சாவூர்.**

**59:10**

***எஸ்.எம். கமால், மறவர் சீமை மாவீரன் மயிலப்பன், ஷர்மிளா பப்ளிஷர்ஸ், இராமநாதபுரம், 2001, 240பக்கங்கள்.***

கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிக் காலகட்டம் ஆங்கிலேயரின் கை ஓங்கத் தொடங்கிய காலம். சிற்றரசுகளிடையே பிளவும் மக்களிடையே ஒற்றுமைக் குறைவும் நாடு அடிமைப்படக் காரணங்களாக அமைந்தன. ஆங்கிலேயர் தமது பிரித்தாளும் சூழ்ச்சி எனும் உத்தி வழி மெல்ல மெல்ல நாட்டைத் தங்கள் வசம் மேற்கொள்ளும் பணி தொடர்ந்து கொண்டிருந்தது. இருப்பினும் தென்னகத்தே விடுதலை உணர்வும் ஆங்கிலேய எதிர்ப்பும் ஆங்காங்கே உருவாகி நாடு கொந்தளிப்பான சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டது. இராமநாதபுரம், பாஞ்சாலங்குறிச்சி சிவகங்கைச் சீமைகளில் இச்சூழ் நிலையைக் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் காண்கிறோம். இராமநாதபுரம் சேதுபதி மன்னர் சிறை வைக்கப்பட்டு இருந்தார். இக்காலகட்டத்தே சேது சமஸ்தானப் பகுதிகளில் ஆங்கிலேய எதிர்ப்பைத் தெரிவிக்கும் முயற்சியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட மறவர் சீமையைச் சேர்ந்த மயிலப்பன் என்பவரின் தனித்த முயற்சியுடன் தென்பாண்டிச் சீமை போராட்ட வரலாறு இந்நூலில் விளக்கப் பட்டுள்ளது. கி.பி.1799-1802 ஆண்டுகளில் நடந்த நிகழ்ச்சிகளையும், போராட்டங்களையும் இறுதியில் நாடு ஆங்கிலேயர் வசம் வீழ்ந்ததையும் ஆசிரியர் கோர்வையாக,

நிரல்பட, தக்க ஆதாரங்களுடன் எழுதியுள்ளார். மன்னர்களைப் பற்றியே எழுதிவந்த ஆசிரியர் சாதாரண ஆனால் பொறுப்புள்ள குடிமகன் ஒருவரின் போராட்ட வாழ்க்கையை உணர்ச்சி பொங்க எழுதியுள்ளார். சில இடங்களில் நாம் வரலாற்றைப் படிக்கிறோமோ அல்லது வரலாற்றுப் புதினத்தைப் படிக்கிறோமோ என்ற உணர்வு தோன்றத் தக்க வகையில் ஆசிரியர் நூலைப் படைத்துள்ளார். மயிலப்பனின் இலட்சியம் சிறப்பானதாக இருந்தாலும் அடிப்படைக் கட்டுமான வசதிகள் இல்லாநிலையில் அவரது போராட்டம் அவல முடிவுக்கு வந்து விடுகிறது. இம்முடிவுக்கு அவரின் மாமனாரே காரணம் என அறிகிறபோது நாம் துடித்துப் போகிறோம். பணம் என்னவெல்லாம் செய்யும் என்பதற்கு இவ்வரலாறு ஒரு நல்ல எடுத்துக்காட்டு.

**கோ. விசயவேணுகோபால், பாண்டிச்சேரி.**

**59:11**

***வேதநாயகி அம்மன் சதகம், உரையாசிரியர் புலவர் அ. பழனியப்பன், சம்பூரணம் பதிப்பகம், சம்பை, 2001, 172 பக்கங்கள்.***

ஓலைச் சுவடிகளைப் படிக்கும் திறன் குறைந்துவரும் இக்காலத்தில் சுவடியைப் படித்தோடு, பா வடிவில் பதிப்பித்துத் தெளிவுரையும் எழுதியுள்ளார் புலவர் அ. பழனியப்பன். பவானி கூடல் சங்கமத்தில் அமைந்துள்ள கோயில் இறைவி வேதநாயகியின் மீது பாடப்பட்ட 100 பாடல்களைக் கொண்டது இச்சதகம். ஒவ்வொரு பாடலும் நாலடியார் முதலிய நீதிநூல்களின் அடியொட்டி, செய்ய வேண்டியவை, செய்ய வேண்டாதவை என்று வாழ்க்கை நெறிகளைச் சொல்கின்றன. இரண்டாவது பாடலில் ஆறில் ஒன்று கடமை பெற்று துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்தல் குறிக்கப்படுகின்றது. மூன்றாவது பாடலில் முறி எழுதி நூற்றுக்கு அரைக்காற் பணம் சேர என்று கடன் வழக்குமுறையைச் சொல்லப்படுகிறது. 97ஆவது பாடலில் வரும் குறிப்பிலிருந்து கி.பி.17ஆம் நூற்றாண்டில் மைசூர் அரசர் சிக்கையனின் (கி.பி.1672-1676) நண்பரான விசைய தாண்டவராயவேளைப் போற்றி இச்சதகம் அமைந்துள்ளது என்று உரையாசிரியர் கருதுகின்றார். இந்த தாண்டவராயவேளே சதக ஆசிரியராக இருக்கலாமோ? என்று தோன்றுகிறது. பவானி கோயிலின் கல்வெட்டுச் செய்திகள் மற்றும் பிறவும் முன்னுரையில் தரப்பட்டுள்ளன.

**சு. இராசகோபால், சென்னை.**

**59:12**

**சு. குலசேகரன், *சேரரின் வஞ்சியும் கருவூரும்,* திருமகள் வெளியீடு, சென்னை, 1998, 142 பக்கங்கள்.**

சங்ககாலச் சேரரின் தலைநகர் இருப்பிடம் மற்றும் வரலாற்றுச் சிக்கல்களை மையப்படுத்தி எழுதப்பட்டுள்ளது இந்நூல். சேரர் வஞ்சி

மேலைக் கடற்கரைப் பக்கத்ததே என்றும், கொங்கு நாட்டுக் கருவூரே என்றும் முன்னைய ஆய்வாளர்கள் பலரும் முனைந்து மேற்கொண்ட விவாதங்களை இந்நூல் ஏற்குமளவில் எடுத்துக்கொண்டு, இரண்டு இடங்களிலும் சேரரின் தலைநகர் மாறி மாறி இருந்ததாக இயம்புகின்றது. சேரரின் வஞ்சியென்பது முதலிலும் முடிவிலும் மேலைக் கடற்கரை சார்ந்தே விளங்கியதென்பதும், சங்ககாலத்தின் ஒரு பகுதியில் அவ்வஞ்சி உள்நாட்டுக் கருவூராய்த் திகழ்ந்ததென்பதும் இந்நூலின் திரண்ட கருத்துக்களாய் அறிய வருகின்றன. இக்கருத்துக்கள் ஆய்வாளர்களால் கருதத்தக்கனவே. ஆயின், இக்கருத்துக்களை எட்டுவதற்கு இந்நூல் பெரும்பாலும் எடுத்துக்கொண்டுள்ள இலக்கியச் சான்றுகளின் பொருள்கோள்களும் விளக்கங்களும் ஆங்காங்கே பொருத்தமுறப் புலப்படாமையால், முடிபுகள் எவ்வாறாயினும் அவற்றை ஏற்பதில் இடர்ப்பாடாகின்றது. முதலாவதாக, புறநானூற்றை உள்ளிட்ட சங்க இலக்கியப் பாடல்கள் பலவற்றை இந்நூல் சிலப்பதிகாரத்தின் பின்வந்தனவாகக் கொண்டுள்ளது குழப்பமே. இலங்கையரசன் கயவாகுவையும் அழைத்துக் கண்ணகிக்கு விழா எடுத்த சேரன் செங்குட்டுவன் ஆட்சியிறுதியை கி.பி.126 எனக் கொண்டுள்ளது (ப.48) ஏற்புடையதாயில்லை. இவ்வாறே சங்கப் புலவர் பரணர் ஒருவரையே நால்வராகப் பகுத்துள்ளதும் (பக்.95-99), சங்ககால அரசர் பலரைக் காலமுறைப்படுத்தியுள்ளதும் (ப.131) ஆகிய இந்நூலின் கருத்துக்கள் நம்பகத்தன்மைக்கு அப்பாற்பட்டு அமைந்துள்ளன. சங்க காலச் சேரர் வரலாறுகளைப் பரவலாகப் பார்க்கும்போது இருகிளைச் சேரர் கொள்கையை எவ்வகையிலும் ஒதுக்க இயலாது. ஒத்த காலத்திலேயே வஞ்சி, தொண்டி, மாந்தை போன்ற பல நகர்களில் இருந்து வேற்றுமையின்றித் தாயத்தார் பலரும் ஆட்சிபுரிந்து வந்த ஒற்றுமை யுணர்வே சேரர் குடியின் சிறப்பாகச் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றது. வேறுபல சிக்கல்களுக்குத் தீர்வாகும் இச்சிறப்புக் கொள்கையையும் இந்நூல் முனைந்து மறுப்பதிலேயே இடர்ப்படுவதாகத் தோன்றுகின்றது (பக்.77-85). சங்ககால அரசர்களுள் ஒருவரே பல பெயர்களாலும் ஒரே பெயரால் பலரும் குறிக்கப்படுகின்ற இடங்களில் அப்பெயர்களையும் அரசர்களையும் அவர்களின் செய்திகளோடும் இடங்களோடும் ஆழ்ந்து நோக்கி அமைதியான முறையில் ஒருங்கிணைத்தும் வேறுபடுத்தியும் காணும்போதுதான் உண்மை விளங்கும். ஆயினும், சேரரின் வஞ்சியையும் கருவூரையும் இடங்கண்டு தடங்காட்ட முனைந்த இந்நூலின் முயற்சி பாராட்டுக்குரியது.

**வ. குருநாதன், தஞ்சாவூர்-5.**

***59:13***

***சு. இராசவேல், அ.கி.சேஷாத்திரி, தமிழ்நாட்டுக் குடைவரைக் கோயில்கள், பண்பாட்டு வெளியீட்டகம், சென்னை, 2000, 214 பக்கங்கள்.***

தமிழகத்தில் 70 இடங்களுக்கு மேலுள்ள குடைவரைக் கோயில்களைப் பாண்டியர், பல்லவர், அதியர், ஆய், முத்தரையர் என்று 5 அரசகுல

பகுப்புகளில் இந்நூல் தொகுத்துச் சொல்கிறது. 53 குடைவரைக் கோயில்களின் வரைபடங்களும் 14 குடைவரைக் கோயில்களின் நிழற்படங்களும், இரு குடைவரைக் கோயில்க் கல்வெட்டுகளின் பார்வைப்படிகளும் நூலிற்கு அணி செய்கின்றன. நூலாசிரியர்கள் பெரும்பாலான குடைவரைக் கோயில்களுக்கு நேரில் சென்று குறிப்புகள் சேர்த்து குடைவரையின் அமைப்பு, தூண்கள், சிற்பங்களின் விளக்கங்கள், குடைவரை ஊரில் உள்ள பிற தொன்மைச் செய்திகள் என்று சுருங்கச் செய்திகள் தந்துள்ளனர். கே. ஆர். சீனிவாசன், சி. சிவராம மூர்த்தி ஆகியோரும் பிறரும் பல்லவர், பாண்டியர், குடைவரைக் கோயில்கள் மற்றும் பிறவற்றை ஆங்கிலத்தில் எழுதிக் தொகுத்திருந்த போதிலும் அவை கிடைப்பதற்கு எளிதாக இல்லாத இக்காலச் சூழ்நிலையில் இந்நூலாசிரியர்களின் தொகுப்பு தமிழுக்கு நல்லதொரு வரவாகும். இத்தொகுப்பில் விடுபட்ட சிற்பங்கள், செய்திகள் மற்றும் ஊர்களைச் சுட்டும் பாங்கில் சிறு தவறுகள் இருந்தபோதிலும் விரிவாக ஆய்வு செய்யும் ஆய்வாளர்களுக்கு இது ஒரு நல்ல கையேடு என்பதில் ஐயமில்லை.

***சு. இராசகோபால், சென்னை.***

***59:14***

***ஆ. தசரதன் , தி. மகாலெட்சுமி, சூ. நிர்மலாதேவி, த. பூமிநாகநாதன், (பதி.ஆ) தமிழில் ஆவணங்கள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2001, 341 பக்கங்கள்.***

கல், உலோகம், ஓலை, ஓடு, தாள் ஆகியவற்றில் பதிவான தொன்மைத் தகவல்கள் பற்றிய கருத்தரங்குக் கட்டுரைகள் இருபத்தாறை (26) உள்ளடக்கியது இந்நூல். முதற்கட்டுரை கல்வெட்டாய்வு பற்றியது. ஏரிகளில் கல் ஆவணங்கள் என்ற கட்டுரை 39 கல்வெட்டு வாசகங்களுடன் நீர்ப்பாசன அமைப்புகளை விளக்குகிறது. கோணேசர் கல்வெட்டு என்ற தலைப்பிலான கட்டுரை இலங்கை திருகோணமலை கோயில் வரலாறு தொடர்பான பாடல் செய்திகளைத் தொகுத்துத் தருகிறது. தஞ்சை நாயக்கர், சேதுபதிகள் செப்பேடுகள், சாத்தூர் சமுதாயச் செப்பேடு ஆகியவை மூன்று கட்டுரைகளில் பேசப்படுகின்றன. பட்டயம் என்ற பெயரோடு கூடிய கொங்குநாட்டுச் சமுதாயச் சுவடி ஆவணங்களில் வரும் சமுதாயச் செய்திகளும், தஞ்சை சரஸ்வதிமகால், தமிழ்ப் பல்கலைக்கழகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சோழிங்கநல்லூர், திருச்சிராப்பள்ளி மாவட்டம் லால்குடி ஓலை மற்றும் காகித ஆவணங்கள் பற்றிய செய்திகள் ஆறுகட்டுரைகளில் தரப்பட்டுள்ளன. இவை கடந்த இரண்டு நூற்றாண்டுகளில் நிலவிய பல்வேறு வகையான ஆவணப் பெயர்கள் அவற்றின் அமைப்பு பற்றிச் சொல்லி நிற்பது இக்காலக்கட்ட ஆய்வு எவ்வளவு விரிவாகச் செல்லக் கூடியது என்பதை அறியும் வகையில் உள்ளது. காசுகள், அகழாய்வில் கிடைத்த பானைஓட்டுக் கீறல்கள் பற்றிய கட்டுரைகளும் உள்ளன. பானை ஓட்டுக் கீறல்கள் யாரைக் குறிக்கும் என்ற ஆய்வும் இதனில் இடம் பெற்றுள்ளது. 19ஆம் நூற்றாண்டில் நன்கறியப்பட்ட திருவள்ளுவர் 17ஆம் நூற்றாண்டிலேயே அறியப்பட்டு

இருந்ததை ஆவணங்களில் திருவள்ளுவரும் திருக்குறளும் என்ற கட்டுரை வெளிப்படுத்துகிறது. ஆவணங்கள், பாதுகாப்புப் பற்றிய கட்டுரைகளும் உள்ளன. இந்நூலிற்கான சொல்லடைவு 69 பக்கங்களில் நூலின் 5இல் 1 பங்கு அளவிற்கு அமைந்திருக்கப் படங்கள் ஒன்றும் வெளியிடாதது ஒரு குறையே. படங்களைச் சுட்டிச் செல்லும் கட்டுரைகளுக்கான படங்கள் கூட வெளியிடப்படவில்லை என்பதைக் கவனிக்க வேண்டும்.

**சு. இராசகோபால், சென்னை.**

### *59:15*

*பெ. மாதையன், வரலாற்று நோக்கில் சங்க இலக்கிய பழமரபு கதைகளும் தொன்மங்களும், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 2001, 347 பக்கங்கள்.*

கடந்த சில தசாப்தங்களாக பாதை தவறிய பயணங்கள் சில தமிழாய்வுச் சூழலை மாசு படுத்தி வந்துள்ளன. இந்தச் சூழலில் நம்பிக்கையூட்டும் வகையாய் முனைவர் பெ. மாதையனின் நூல் வெளிவந்துள்ளது. ஏழு இயல்களாக வகுக்கப்பட்டுள்ள இந்நூலில் சங்க இலக்கியங்களிற் காணப்படும் பழமரபுக் கதைகள் (legend) தொன்மங்கள் (myth) பற்றி அக்கால அரசர்கள் அவர்களது காலமுறை, சமூக உருவாக்கம், மாற்றங்கள் என்ற அம்சங்களினூடாக ஆராயப்படுகின்றது. பாரதப்போரில் பெருஞ் சோறிட்டது, சிபியும் சோழ மரபும், கடல் பிறகோட்டுதல், இமயத்தில் இலச்சினைப் பொறித்தது, வானிலிருந்து கரும்பு கொணர்ந்தது, தூங்கு எயில் அழித்தது, ஒளவைக்கு நெல்லிக்கனி அளித்தது, முல்லைக்குத் தேரும்-மயிலுக்குப் போர்வையும் வழங்கியது முதலிய பழமரபுக் கதைகள் அதன் இயல்பு நிலையிலும், உரையாசிரியர்களது கூற்றுநிலையிலும், இவற்றை ஆதரித்தோர், மறுத்தோர் பார்வையிலும் விரிவாக நோக்கித் தள்ளுவன தள்ளி கொள்வன கொண்டு தம் ஆளுமையைத் தெளிவாக நிறுவுகின்றார். இதுபோலவே சங்க காலக் கடவுளர்களான முருகன், சிவன், மாயோன், ஒரு முலையறுத்த திருமாவுண்ணி முதலான தொன்மங்களை வரலாற்று நோக்கில் ஆராய்கின்றார். மேற்குறித்த தொன்மங்கள் முன்பழந்தமிழ் இலக்கியங்களில் குறிப்பிடப்பட்ட இயல்பு நிலையையும் அவை பின் பழந்தமிழ் இலக்கியங்களில் ஆரியமயமாதல் காரணமாக மாற்றமுற்றுச் சமரசமான நிலையினையும் ஆதாரங்களுடன் நிறுவுகின்றார். ஒரு முலையறுத்த திருமாவுண்ணி தொடர்பான ஆய்வு ஆசிரியரின் ஆய்வுப் புலமைக்கு ஒரு பதச் சோறு. தான் வரித்துக்கொண்ட கருத்தினை மேலும் விரிவுபடுத்துவதற்காக ஐந்தாவது இயலில் முன்பழந்தமிழ்ப் புலவர் கால நிரல் ஒன்றை அமைத்துள்ளார். எஸ். வையாபுரி பிள்ளையும், கே.என். சிவராஜபிள்ளையுமே இவ்வியலில் நூலாசாரியரின் முன்னோடிகளாக விளங்குகின்றனர். பெரும்பாலும் சிவராஜபிள்ளையின் மன்னர் காலநிரலை அடிப்படையாகக் கொண்டு ஒரு காலநிரலை வகுத்துக்கொண்டு அதன் அடிப்படையில் பழமரபுக் கதைகளும் தொன்மங்களும், எக்காலத்தில் எவ்வாறு புனையப்பட்டன என்பதை நிறுவுகின்றார். சங்ககால சமுதாயச்

சூழலும் பழமரபுக் கதைகளும் தொன்மங்களும் என்ற இயலில் சீறூர் மன்னர், முதுகுடி மன்னர், குறுநில மன்னர், வேந்தர் ஆகிய சங்ககால சமூகத் தலைமகன் பற்றியும் இவை ஒவ்வொன்றிற்கிடையே நிலவிய ஊடாட்டம் பற்றியும் விளக்கிய பின்னர் பழமரபுக் கதைகள், தொன்மங்கள் எவ்வெச் சமூகத் தலைமைக் காலங்களில் இடம்பெற்றன என்பதையும் ஓரளவு அவற்றிற்கான காரணங்களையும் விளக்குகின்றார். நூலாசிரியர் இயன்ற அளவிற்கு கருத்தாடலிலும் கவனம் செலுத்தியுள்ளார். சங்க இலக்கியங்களை இன்னும் பல பரிமாணங்களில் நோக்க இயலும் என்பதற்கு இது ஒரு முன்னுதாரண நூலாக விளங்குகின்றது.

**வ. மகேஸ்வரன், பேராதனை (இலங்கை).**

***59:16***

***வ. குருநாதன், சங்ககால அரச வரலாறு, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 2001, 409 பக்கங்கள்.***

சங்ககால அரச வரலாறு, சமூகவியல் குறித்த ஆய்வுகள் கடந்த நூற்றாண்டில் பெருமளவு நடைபெற்றது. வெ. கனகசபை, மு. இராகவையங்கார், பி.டி. சீனிவாச ஐயங்கார், கே.என். சிவராசப்பிள்ளை, கா. கோவிந்தன், கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, ந. சுப்பிரமணியன் போன்ற ஆய்வாளர்கள் இப்பணியில் சிறந்த முடிவுகளை அளித்தோராவர். இவ்வாய்வாளர்களின் ஆய்வு முடிவுகளின் குறை நிறைகளை கருத்தில் கொண்டும் சங்ககால இலக்கியங்களைக் கொண்டும் சங்ககால அரசர்களின் வரிசையை முழுமையாக ஆசிரியர் இந்நூலில் அளித்துள்ளார். இலக்கியங்களில் காணப்படும் மூவேந்தர், வேளிர், குறுநிலமன்னர், சீறூர் மன்னர் ஆகியோர் பற்றிய குறிப்புகளையும், உறவு முறைப்படி ஆராய்ந்து இம்மன்னர்களின் வரிசையை நிரல்பட ஆசிரியர் அளித்துள்ளது பாராட்டத்தக்கது. சேர, பாண்டிய, சோழ வேந்தர்களின் காலத்தை வரலாற்றில் அறியப்பெறும் செங்குட்டுவன் - கயவாகு தொடர்பை மையமாகக் கொண்டு முன்னும் பின்னும் தொடர்ந்து கணித்துள்ளார். இக்காலக் கணிப்பு கூடிய மட்டும் பொருந்தியமையும் எனக் கூறும் ஆசிரியர் இக்கணிப்பிற்கான ஆய்வு முறையைக் கூறாதது இக்காலக் கணிப்பின் நம்பகத்தன்மையை குறைக்கிறது. இலக்கியச் சான்றுகள் முழுவதும் உண்மை எனக் கருதி வேந்தர்களின் பெருமையைக் கூறிச் செல்வது சரியன்று. உதாரணமாக கடல்பிறகோட்டிய செங்குட்டுவன் வில்லெறிந்து கடலை பின்னோக்கி அனுப்பியமையைக் குறித்த ஆய்வு. இந்நூலை எளிய தமிழில் ஆசிரியர் அளித்திருக்கலாம். சங்ககால மன்னர் வரிசை பற்றி தெளிவுடன் விளக்கும் இந்நூல் வரலாற்றாய்வாளர்களுக்கு பயனுடையதாகும்.

***ந. அதியமான், தஞ்சாவூர்.***

## 59:17

**Noboru Karashima, *A Concordance of Nayakas: The Vijayanagar Inscriptions in South India* , Oxford University Press, 2002, 350 pages.**

இந்நூல் விஜயநகரக் கல்வெட்டுகளிலிருந்து நாயக்கர்களின் பெயர்களைத் தொகுத்து அவர்களது பதவிகள், செயல்பாடுகள் குறித்து ஆய்கிறது. பட்டப்பெயர்களின் அடிப்படையில் மட்டுமே நாயக்கர்களை அடையாளம் காண்பது இயலாது என்று சொல்லி அவர்களை அடையாளம் காண்பதற்கு ஆசிரியர் தரும் 3 காரணிகள் மிக முக்கியமானவை. இக்காரணிகளை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப்பட்ட 1030 நாயக்கர்களின் செயல்பாடுகளை இந்நூல் பகுப்பாய்வு செய்கிறது. அண்மைக்கால நாயக்கர் ஆய்வுகளின் தன்மைகளை முக்கியமாக பர்டன் ஸ்டெயினின் கூறாக்கக் கொள்கையை விமர்சிக்கிறார். நாயக்கர்களின் பணிமுறை பற்றியும் விவரித்துள்ளார். வட ஆற்காடு, தென் ஆற்காடு மாவட்டங்களைச் சார்ந்த பல நாயக்கர்களையும் அவர்களது ஆட்சி முறையையும் தெளிவாக விவாதிக்கிறார். விசயநகரப் பேரரசு காலத்தில் ஏற்பட்ட வியாபார முன்னேற்றம் போன்ற தன்மைகளையும் ஆய்வுக்கு உட்படுத்தியுள்ளார். நாயக்கர்கள் இடமாற்றம் பெற்றுள்ளனர் என்பதை தக்க சான்றுகளுடன் நிறுவியுள்ளார். முக்கியமாக, மல்லப்ப நாயக்கரின் குடும்ப வரலாறு குறித்தும் அவரது பதவி மற்றும் இடமாற்றம் செய்யப்பட்டதையும் அதற்கான காரணங்களையும் ஒரு கட்டுரையில் ஆய்ந்துள்ளார். நாயக்கத்தனம், சீர்மை என்ற இரண்டு சொற்கள் நாயக்கர் ஆட்சியின் தன்மையைத் தெளிவாகத் தெரிவிக்கும் சொற்கள் எனக் குறித்து அவை நாயக்கர்களின் உரிமைப் பகுதியைச் சுட்டுவன என்று விளக்கியுள்ளார். விசய நகரப் பேரரசுடன் நாயக்கர்கள் மேற்கொண்ட தொடர்புகளும் தெளிவாக்கப்பட்டுள்ளன. நாயக்கர்களின் பல விவரங்கள் அடங்கிய நான்கு பட்டியல்கள் தரப்பட்டுள்ளன. நாயக்கர்களின் 1030 பேர்களை அகரவரிசைப்படுத்தி, அவர்களது நடவடிக்கைகள், காணப்பட்ட கல்வெட்டு மூலங்கள், கிடைத்த இடம் போன்ற முக்கிய தகவல்களையும் அளித்துள்ளார். நீண்ட நூல் பட்டியல் அனைவருக்கும் பயன்படும் வண்ணம் உள்ளது. பொருள் அகரவரிசை தரப்பட்டுள்ளது ஆய்வாளர்களுக்கு மிகப் பயனளிப்பதாகும். நன்கு வரையப்பட்ட நான்கு நிலப்படங்கள் தரப்பட்டுள்ளன. தமிழக வரலாறு, விசய நகர வரலாறு, ஆட்சிமுறை, பொருளாதார ஆய்வாளர்களுக்கும் மாணவர்களுக்கும் பேருதவியாக முக்கிய சான்று நூலாக இன்னூல் விளங்கும்.

**ப. சண்முகம், சென்னை.**

## 59:18

**Noboru Karashima (ed.), *Ancient and Medieval Commercial Activities in the Indian Ocean : Testimony of Inscriptions and Ceramic-sherds,* , Taisho University, Tokyo, 2002, 308 pages.**

தோக்கியோ தைஷோ பல்கலைக்கழகப் பேராசிரியர் நொபொரு கராஷிமா அவர்கள் தலைமையில் சப்பானிய, இந்திய மற்றும் இலங்கை ஆய்வுக் குழுவினரால் இந்தியா, இலங்கை மற்றும் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் கடந்த பத்தாண்டுகளாக மேற்கொண்ட ஆய்வுப் பணிகளின்

வெளிப்பாடு இந்நூல். இக்குழுவினர் பழங்கால, இடைக்கால தென்னிந்திய வணிகக் குழுக்களின் நடவடிக்கைகள், தென்னிந்தியப் பகுதிகளில் நடைபெற்ற சீனப் பீங்கான் வாணிகம் மற்றும் தென் கிழக்கு ஆசிய நாடுகளில் இந்தியப் பண்பாட்டின் தாக்கம் போன்ற தலைப்புகளில் மேற்கொண்ட ஆய்வுகளின் முடிவுகள் இந்நூலில் தரப்பட்டுள்ளன. தென்னிந்திய, இலங்கை வணிகக் குழுக்களைப் பற்றி தகவல் தரும் கல்வெட்டுகள் பற்றிய ஓர் ஒப்பாய்வு தரப்பட்டுள்ளது. மேலும் தென்கிழக்கு ஆசிய நாடுகளில், தகுவாபா (தாய்லாந்து), பாரோசு (இந்தோனேசியா), பகான் (மியான்மர்) மற்றும் குவாங் சூ (சீனா) ஆகிய இடங்களில் காணப்படும் தமிழ்க் கல்வெட்டுகளிலிருந்து பெறப்படும் வணிகக் குழுக்களின் நடவடிக்கைகள் விரிவாக ஆராயப்பட்டுள்ளது. வணிகக் குழுவினரின் கல்வெட்டுகளில் தரப்பட்டுள்ள முன்னுரையிலிருந்து தெரியவரும் செய்திகள், ஐநூற்றுவர் மற்றும் பதிநெண்விஷையத்தாரின் பன்முக நடவடிக்கைகள் விரிவாக ஆராயப்பட்டுள்ளன. வணிகர்கள் தங்கள் விற்பனைப் பொருள்கள் மீது தாங்களே விதித்துக்கொண்ட பட்டினப்பகுதி வரிவிதிப்பும் அதனால் அறியப்படும் வாணிகப் பொருள்கள் பற்றியும் ஒரு கட்டுரை ஆய்வு செய்கிறது. வணிகக்குழுக் கல்வெட்டுக்களில் காணப்படும் குறியீட்டுச் சின்னங்கள் பற்றி ஒரு ஆய்வு தெளிவுபடுத்துகிறது. இலங்கையில் வணிகக் குழுவினரின் நடவடிக்கைகளும், அநுராதபுரத்தில் நானாதேசிகளின் செயல்பாடுகளும், புதுமுத்தாவ கல்வெட்டிலிருந்து அறியப்படும் வீரக்கொடியாரின் வணிக நடவடிக்கைகளும் விரிவாக ஆராயப்பட்டுள்ளன. தென்னிந்தியாவுடனான சீனப் பீங்கான் வணிகத் தன்மைகளை சில கட்டுரைகள் விளக்குகின்றன. இப் பீங்கான் பரிவர்த்தனை மூலம் ஏற்பட்ட வெளிநாட்டுத் தொடர்புகளும் விளக்கப்பட்டுள்ளன. தென்கிழக்கு ஆசிய நாடுகளில் இக்குழுவினரால் கண்டெடுக்கப்பட்ட புதிய கல்வெட்டுகளின் விவரம், அவற்றின் வரலாற்று முக்கியத்துவம் ஆகியன மற்றொரு கட்டுரையில் விரிவாகத் தரப்பட்டுள்ளது. மேலும் தென் கிழக்கு ஆசிய நாடுகளில் புழக்கத்தில் இருந்து வந்துள்ள ஆள் பெயர்களின் மூலம் அறியப்படும் இந்தியப் பண்பாட்டின் தாக்கம் பற்றி வேறொரு கட்டுரை விளக்குகிறது. இந்நூலில் பயன்படுத்தப்பட்ட பல தரவுகள் பின்னிணைப்பாகத் தரப்பட்டுள்ளன. தென் இந்திய மற்றும் தென் கிழக்கு ஆசிய நாடுகளில் காணப்படும் வணிகக் குழுக்கள் தொடர்பான அனைத்துக் கல்வெட்டுகளின் விவரங்களும் அவற்றில் முக்கியமான கல்வெட்டுகளின் மூலபாடம், ஆங்கில மொழிபெயர்ப்பு மற்றும் அக்கல்வெட்டுகளின் கால முறை, இட முறைப் பட்டியல்களும் இடம்பெற்றுள்ளன. முக்கியக் கல்வெட்டுகள், சீனப் பீன்கான்கள் ஆகியவற்றின் தெளிவான ஒளிப்படங்களும் 6 நிலப்படங்களும் இன்னூலை அணி செய்கின்றன. தென்னிந்திய பொருளாதார நடவடிக்கைகளை நன்கு அறிவதற்கு அதன் முக்கிய பகுதியான வணிகக் குழுக்கள் மற்றும் அவர்களது நடவடிக்கைகளை அறிவதற்கான முதன்மை நூலாகவும் சிறந்த சான்று நூலாகவும் இன்னூல் ஆக்கப்பட்டுள்ளது சிறப்பாகும்.

**ப. சண்முகம், சென்னை.**

## 59:19

**N. Athiyaman, *Pearl and Chank Diving of South Indian Coast*, Tamil University, Thanjavur, 2000, 148 pages.**

தமிழகக் கடற்கரையில் குறிப்பாக மன்னார் வளைகுடா, பாக் விரிகுடா கடற்கரைப் பகுதிகளில் பல நூற்றாண்டுகளாக நடைபெற்றுவரும் முத்து, சங்குக் குளித்தல் பற்றிய செய்திகளை ஆய்வுக் கண்ணோட்டத்துடன் இந்நூல் வெளிக்கொணர்ந்துள்ளது. குறிப்பாக முத்துச்சிப்பி, சங்கு குளித்தலில் தமிழர்கள் மரபுவழியாக இன்றுவரை பின்பற்றிவரும் தொழில்நுட்பத்தைக் கள ஆய்வின் வழியாக ஆசிரியர் வெளியிட்டிருப்பது இந்நூலின் தனிச்சிறப்பாகும். தொடர்புடைய இலக்கியச் சான்றுகள், கல்வெட்டுச் சான்றுகள், பயணக் குறிப்புகள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. மூழ்குதலில் தற்பொழுது பின்பற்றப்படும் முறைகள், பயன்பாட்டிலுள்ள கருவிகளைப் பற்றி ஆய்வு செய்யப்பட்டுள்ளதோடு தேவையான வரைபடங்கள், நிழற்படங்களுடன் விளக்கப்பட்டுள்ளன. முத்து, சங்கு, சிப்பிகளின் சமூக முக்கியத்துவம், முத்துக் குளிப்போருக்கும் ஆட்சியாளர்களுக்கும் இடையே காணப்பட்ட தொழில் ரீதியான வரலாற்று நிகழ்வுகள், மூழ்குவோரின் தற்போதைய நிலை, சுறா மீன்களால் இத்தொழில்புரிவோருக்கு ஆபத்து ஏற்படாவண்ணம் அவைகளை மந்திர சக்தியால் மாற்றும் கடல் கட்டிகளின் சமூகப் பங்கு போன்றவை இந்நூலில் சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**கா. ராஜன், தஞ்சாவூர்.**

## 59:20

**K. Rajan, *Archaeology of Palar Basin*, Tamil University, Thanjavur, 2000, 217 pages.**

அகழாய்வுகள் பெரும்பாலும் நகரங்களை அடிப்படையாகக் கொண்டே நடத்தப்பெறுகின்றன. கிராமங்கள் சார்ந்த நிலப்பகுதிகளில் காணப்படும் மக்கள் வாழ்விடங்களில் இன்னும் முழுமையாக ஆய்வுகள் மேற்கொள்ளப்பெறவில்லை. இப்பகுதிகளில்தான் தமிழரின் பண்பாட்டு எச்சங்கள் அதிகமாகக் கிடக்கின்றன. இதனடிப்படையில் பாலாறு ஆற்றுப் படுகையில் அமைந்துள்ள தொல்லியல் இடங்களை கள ஆய்வு செய்து வருங்கால வரலாற்றாய்வுக்கு உதவும் வகையில் ஆசிரியர் இந்நூலில் பல தொல்லியல் தரவுகளை வெளிக்கொணர்ந்துள்ளார். இக்கள ஆய்வில் திருவண்ணாமலை, திருப்பத்தூர், வேலூர் மாவட்டங்களின் பகுதிகள் அடங்கும். மக்களின் வாழ்விடச் சூழலுக்கு ஏற்றவாறு அவர்களது சமூகப் பொருளாதார நிலை வேறுபடும் என்பதால் வள ஆதாரம் உள்ள இடங்களாகத் தேர்வுசெய்து வரலாற்றுக் காலத்திற்கு முந்தய காலகட்டத்தைச் சேர்ந்த நூற்றுக்கும் மேற்பட்ட தொல்லியல் முக்கியத்துவம் வாய்ந்த இடங்களை புதிதாகக் கண்டுபிடித்து ஆசிரியர் வெளிக்கொணர்ந்துள்ளார். இதில் பழைய கற்காலம், புதிய கற்காலம், பெருங்கற்படைக் காலத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்த இடங்கள் அடங்கும். இதன் வாயிலாக பல்வேறு

காலகட்டத்தில் வாழ்ந்த மக்களின் பலவகையான பண்பாட்டுக் கூறுகளை அறியமுடியும். பல்வேறு காலகட்டத்தைச் சேர்ந்த இடங்களில் அறிவியல் பூர்வமான தொல்லியல் அகழாய்வுகள் போதுமான அளவு மேற்கொள்ளப்படாத இப்பகுதிகளின் தொல்லியல் சிறப்புகளை இந்நூல் வெளிப்படுத்துகிறது. கள ஆய்வில் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட இடங்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. நடுகல் குறித்து இந்நூல் சிறப்பாக விளக்குகிறது. தமிழ்நாட்டில் கிடைத்துள்ள கி.பி.5ஆம் நூற்றாண்டு முதல் 18ஆம் நூற்றாண்டு வரையிலான நடுகற்கள் பட்டியலிடப்பட்டுள்ளதோடு நடுகல் குறித்த சங்க இலக்கியக் குறிப்புகளோடு ஒப்பீட்டாய்வும் மேற்கொள்ளப் பட்டுள்ளது. தொல்லியல் ஆய்வாளர்களுக்கு இந்நூல் சிறந்த ஒரு நோக்கீட்டு நூலாகும்.

**பா. ஜெயக்குமார், தஞ்சாவூர்.**

***59:21***

**K. Ganesh, *The Coins of Tamilnadu*, K. Ganesh, Bangalore, 2001, 234 pages.**

தமிழ்நாட்டில் கி.பி.9-18 ஆம் நூற்றாண்டுகளின் இடையே புழக்கத்தில் இருந்த காசுகளைப் பற்றி தகவல் அளிப்பதே இந்நூலின் நோக்கம். சோழர், பாண்டியர், கொங்கு சேரர், பாணர், மதுரை சுல்தான்கள், மதுரை நாயக்கர்கள், தஞ்சாவூர் நாயக்கர்கள், செஞ்சி நாயக்கர்கள், மராத்தியர், சேதுபதிகள் மற்றும் ஆற்காட்டு நவாபுகள் வெளியிட்ட காசுகளைப் பற்றிய பல தகவல்களை அளிக்கிறது. தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களில் வெளியிட்ட சுமார் 700 வகைக் காசுகள் முறைப்படுத்தித் தொகுக்கப்பட்டுள்ளன. இந்நூலில் விவரிக்கப்பட்டுள்ள காசுகளில் பல முந்தைய நூல்களில் வெளியிடப்பட்டுள்ளன. சில காசுகள் நூலாசிரியருக்குச் சொந்தமானவை. பலநூல்களிலிருந்து முக்கிய செய்திகளையும் காசின் படங்களையும் மிகுந்த சிரமம் பாராது தொகுத்தளித்துள்ளார். இந்நூலுள் தரப்பட்டுள்ள காசுகளில் காணப்படும் பெயர், குறியீடுகள் பின்னமடைந்துள்ளபோதும் அவற்றின் முழு விவரம் தரப்பட்டுள்ளது. அடிப்படை விவரங்களுக்குக் கீழேயே காசுகளின் படங்கள் நல்லமுறையில் அச்சிடப்பட்டுள்ளமை ஆய்வாளர்களை மகிழ்விக்கும் செய்தியாகும். சோழர் காசுகளில் சங்ககாலப் பிசிராந்தையார் காணப்படுவதாக (பக்.11) ஊகிப்பதும், பெரும்பாணப்பாடி அரசகுலம் என்று பாண அரச குலத்தைக் குறிப்பதும் (பக்.137), எழுத்து வடிவத்தைத் தமிழ் கிரந்தம் என்று குறிப்பது போன்ற வரலாற்றுக்கு ஒவ்வாத சில பிழைகளைத் தவிர்த்திருக்கலாம். தமிழகக் காசு ஆய்வாளர்களின் கையில் இருக்கவேண்டிய சான்று நூல்களுள் இந்நூலும் ஒன்று.

**ப. சண்முகம், சென்னை.**

# 60. தமிழகத் தொல்லியல் கழக 11ஆம் கருத்தரங்க அறிக்கை

தமிழகத்தொல்லியல் கழகத்தின் பதினொன்றாம் ஆண்டு கருத்தரங்கமும் பன்னிரண்டாவது ஆவணம் இதழ் வெளியீட்டு விழாவும் 2001 ஜூலைத் திங்கள் 21, 22 ஆகிய இரு நாட்கள் மதுரையில் உள்ள தருமபுர ஆதீன மீனாட்சி சொக்கநாதர் திருமண மண்டபத்தில் நடைபெற்றது. இக்கருத்தரங்கின் உள்ளூர் செயலராக முனைவர் வெ. வேதாசலம் செயல்பட்டார். 21.7.2001 அன்று காலை 10.00 மணிக்கு தொடக்கவிழா நடைபெற்றது. தொடக்கவிழாவிற்கு கழகத்தலைவர் முனைவர் கொடுமுடி ச. சண்முகன் தலைமையேற்றார். வரவேற்புரையையும் அறிமுகவுரையையும் பேராசிரியர் எ. சுப்பராயலு வழங்கினார். மதிப்புமிகு திரு. ஐராவதம் மகாதேவன் இ.ஆ.ப. (ஓய்வு) ஆவணம் இதழை வெளியிட்டு தொடக்கவுரை ஆற்றி சிறப்பித்தார். ஆவணம் இதழைப் பெற்றுக்கொண்ட திருமிகு பி.டி. கமலத் தியாகராசன் கழகத்தை வாழ்த்தி உரையாற்றினார். கழகச் செயலர் முனைவர் கா. ராஜன் நன்றி நவில விழா இனிதே நிறைவடைந்தது.

திரு. ஐராவதம் மகாதேவன் அவர்களால் நிறுவப்பட்ட தி.நா. சுப்பிரமணியம் அறக்கட்டளைச் சொற்பொழிவினை இந்தியத் தொல்லியல் ஆய்வுத்துறையின் முன்னாள் இணை மேலாண் இயக்குநர் முனைவர் கே.வி.இரமேஷ் *கர்நாடக மாநிலத்தின் தமிழ் கல்வெட்டுகள்* என்ற தலைப்பில் சிறப்புரையாற்றினார். கோயிலூர் ஆதீன அறக்கட்டளைச் சொற்பொழிவினை இலங்கையில் உள்ள பேராதனைப் பல்கலைக்கழகத்தின் வரலாற்றுத் துறைத்தலைவரும் பேராசிரியருமான முனைவர் எஸ்.பத்மநாதன் *இலங்கையில் இந்துசமய சிற்பங்கள்* என்ற தலைப்பில் உரை ஆற்றினார். இவ்விரு அறக்கட்டளைச் சொற்பொழிவிற்கும் முனைவர் எ. சுப்பராயலு தலைமை தாங்கினார். இக்கருத்தரங்கத்தில் 5 அமர்வுகளில் 23 கட்டுரைகள் வழங்கப்பட்டன.

நாள் : 21.07.2001 **அமர்வு - 1** நேரம் : 11.30-13.00

தலைவர் : முனைவர் கோ. விஜயவேணுகோபால்

1. க. இலக்குமி நாராயணன் - வேலூர் மாவட்ட சமணப்படிவம் இயக்கி அம்பிகா
2. சு. இராசவேலு - புதிய கல்வெட்டுகள்
3. சி. வீரராகவன் - ஆசூர்க் கல்வெட்டுகள்
4. வீ. மங்கையர்க்கரசி - சேஷுங்கனூர் கல்வெட்டு
5. .செல்வநாயகி - பிற்காலப்பாண்டியர்கள் பழனியில் புரிந்த இறைத்தொண்டுகள்
6. கா. சந்தானலட்சுமி - ஆய்த எழுத்து

நாள் : 21.07.2001 **அமர்வு -2** நேரம் : 14.30-15.30

தலைவர் : முனைவர் ஜேம்ஸ் ஹெயிட்ஸ்மேன்

7. ஜெ. இராஜாமுகமது - புதுக்கோட்டை நடுகற்கள்
8. த. தமிழாதன் - ஒரு புதிய சிற்பம்
9. குருசாமி தேசிகர் - தருமபுர ஆதீனமும் கோவிந்த தீட்சிதரும்
10. ச. கிருஷ்ணமூர்த்தி - மதுரை நாயக்கரும் திருவாடுதுறை ஆதீனமும்

நாள் : 21.07.2001 — அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் — நேரம் : 15.45-17.15

தலைவர்: முனைவர் எ. சுப்பராயலு

முதல் பொழிவு - தி.நா. சுப்பிரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவு
சொற்பொழிவாளர் - முனைவர் கே.வி. இரமேஷ், இணை மேலாண்மை இயக்குநர் (ஓய்வு), மத்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறை
தலைப்பு - கர்நாடக மாநிலத்தில் தமிழ்க் கல்வெட்டுகள்

இரண்டாம் பொழிவு - கோயிலூர் ஆண்டவர் அறக்கட்டளைச் சொற்பொழிவு
சொற்பொழிவாளர் - பேராசிரியர் எஸ். பத்மநாதன், தலைவர் வரலாற்றுத் துறை, பேராதனைப் பல்கலைக்கழகம், இலங்கை
தலைப்பு - இலங்கையில் வெண்கலப் படிமங்கள்

நாள் : 22.07.2001 — **அமர்வு -3** — நேரம் : 9.30-11.00

தலைவர் : முனைவர் து. தயாளன்

11. ச. இரவி - முதலைவாய்ப்பிள்ளை கற்சிற்பம், வீரராயர் பொற்காசு
12. செ. கோவிந்தராஜ் - கொடும்பாளூர் மூவர் கோயில் - ஒரு புதிய ஆய்வு
13. த. தவசிமுத்து - இடைக்கற்கால பிரமிடு வடிவ குவார்ட்ஸ் அணிகலன் (சாயர்புரம் தேரி)
14. கே.பி. நல்லமுகமது - திருக்கோயிலூர் காகித ஆவணம்

நாள் : 22.07.2001 — **அமர்வு -4** — நேரம் : 11.15-13.00

தலைவர் : முனைவர் தொ. பரமசிவன்

15. தே.கோபாலன், - சுமைதாங்கிக் கல்லில் படைவீரர் இராமன் பிள்ளை
16. செந்தீ. நடராசன் - கடைசர்குல பட்டங்கெட்டியார்
17. குருசாமி சித்தர் - தமிழக அரசியல் மற்றும் சமூக வரலாற்றில் புதிய செய்திகள், புதிய பார்வை
18. அழ. முத்துப் பழனியப்பன் - ஒரு பாளைக்காரரின் சோககீதம்
19. பா. சாம் சத்யராஜ் - மதுரை அரசு அருங்காட்சியகத்தின் அண்மைக்கால சேகரிப்புகள்
20. மா. காந்தி - கொரட்டி சூரியன் கற்சிலை

நாள் : 22.7.2001 — **அமர்வு - 5** — நேரம் : 14.00 - 15.30

தலைவர் : முனைவர் நா. வள்ளி

21. கரு. இராசேந்திரன் - தனிச்சயம் மடைக் கல்வெட்டு
22. ஆர். பாலச்சந்திரன் - திருத்தங்கல் பகுதிக் கள ஆய்வுகள்
23. நா. வள்ளி - செட்டிநாடு வளர்த்த ஓவியக்கலை

**கா. ராஜன், தஞ்சாவூர்.**

## திருத்தம்

1. ஆவணம் இதழ் 12இல் பக்கம் 5இல் வெளியிடப்பட்டுள்ள *கொரட்டி நடுகல்* என்னும் கல்வெட்டின் இரண்டாம் வரியில் *வலியடக்கியார் போஹூர் நாடைந்நூறாபூமி* என அச்சாகியுள்ளது. இதில் உள்ள *போஹூர்* என்னும் ஊரைக் *கோஹூர்* என திருத்திப் படித்தல் வேண்டும். ஒளிபடத்தில் கோஹூர் என்பது தெளிவாக உள்ளது.
2. இதழ் 12இல் பக்கம் 9இல் திருமால்பூர் தூண் கல்வெட்டு வெளியிடப்பட்டு உள்ளது. இதில் 3 மற்றும் 14ஆம் வரிகளில் *சம்பமூலை ஊர்* எனத் தவறாக வெளியாகியுள்ளது. இது *சம்மழலை* என்று வாசிக்கப்பட வேண்டும்.

**(பதிப்பாசிரியர்)**

# கட்டுரையாளர்கள்

திரு. ந. அதியமான்
இணைப் பேராசிரியர்
நீரகழாய்வு மையம்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

திரு. அலோக் திரிபாதி
மாமாகா பஜார் லஸ்கர்
குவாலியர் – 471 001

திரு. அ. ஆறுமுக சீதாராமன்
12 ராஜராஜன் நகர்
மானோஜிபட்டி தெற்கு
தஞ்சாவூர்–613004

முனைவர் ச. இரவி
தமிழ் விரிவுரையாளர்
பூ சா கோ கலை அறிவியல் கல்லூரி
கோயம்புத்தூர் – 641 014

முனைவர் சு. இராசகோபால்
ராஜாஜி இல்லம்
8 முதல் தெரு
வெங்கடேசுவரா நகர்
அடையாறு சென்னை – 600 020

திரு. கரு. இராசேந்திரன்
ஆசிரியர் (ஓய்வு)
மேலப்பனையூர்
விராச்சிலை வழி – 622 420
புதுக்கோட்டை மாவட்டம்

திரு. பொ. இராசேந்திரன்
கல்வெட்டாய்வாளர்
த அரசு தொல்லியல்துறை
திருமலை நாயக்கர் அரண்மனை
மதுரை – 625 001

திரு. சீ. இலட்சுமணன்
உலகத் தமிழ்க்கல்வி இயக்கம்
தமிழூர், அடைக்கலப்பட்டணம்
திருநெல்வேலி – 627 808

திரு. கண. ஈஸ்வரன்
82 நெடும்பிறை
செய்யாறு மாவட்டம் – 604 407

திரு. கோ. உத்திராடம்
நடுத்தெரு
அன்னம்பாக்கம்
பாங்குளத்தூர்
திண்டிவனம் வட்டம் – 604 101

திரு. நாக. கணேசன்
காப்பாட்சியர்
தொல்லியல்துறை அகழ்வைப்பகம்
ஜவஹர்பஜார்
கரூர் – 639 001

முனைவர் எஸ். எம். கமால்
21 ஈசா பள்ளிவாசல் தெரு
இராமநாதபுரம் – 623 501

திரு. மா. கலைவாணன்
காப்பாட்சியர்
தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை
தருமபுரி – 631 001

திரு. ப. காசிலிங்கம்
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
சேலம் – 636 001

திரு. ம. காந்தி
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
கோட்டை, வேலூர்

திரு. ச. கிருஷ்ணமூர்த்தி
தொல்லியல் அலுவலர்
த அரசு தொல்லியல்துறை
ஓ. எஸ். தீன் லாட்ஜ்
சிதம்பரம் – 608 001

திரு. கி. குமார்
இ.103, பொதுப்பணித்துறை
குடியிருப்பு
தாடண்டர் நகர்
சைதாப்பேட்டை
சென்னை – 600 015

முனைவர் குருசாமி சித்தர்
தமிழர் பண்பாட்டு சமூக ஆய்வு மன்றம்
102 நால்வர் நகர்
பாரதியார் பல்கலைக்கழகம் அஞ்சல்
கோவை – 641 046

முனைவர் வ. குருநாதன்
இணைப்பேராசிரியர்
இலக்கியத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

முனைவர் கொடுமுடி சண்முகன்
16 பி 2 ஆம் நிழற்சாலை
இந்திரா நகர்
அடையாறு
சென்னை – 600 020

திரு. தே. கோபாலன்
தொல்லியல் அலுவலர்
மாவட்ட ஆட்சியர் அலுவலக வளாகம்
நாகர் கோயில் – 629 001

திருமதி கா. சந்தானலட்சுமி
விரிவுரையாளர், தமிழ்த்துறை
இராஜாதுரைசிங்கம் அரசு
கலைக்கல்லூரி
சிவகங்கை – 630 561

திரு. சொ. சந்திரவாணன்
காப்பாட்சியர்
தொல்லியல்துறை அகழ்வைப்பகம்
சன்னதி தெரு
குற்றாலம்

முனைவர் ப. சண்முகம்
பேராசிரியர் மற்றும் தலைவர்
பழம் வரலாறு மற்றும் தொல்லியல்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை – 600 005

புலவர் கா. சண்முகம்
26 பூக்கார வஸ்தாத் தெரு
தஞ்சாவூர் – 613 001

திரு. பா. சாம் சத்தியராஜ்
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
மதுரை – 625 020

திரு. சொ. சாந்தலிங்கம்
தொல்லியல் அலுவலர்
திருமலை நாயக்கர் அரண்மனை
மதுரை – 625 001

முனைவர் சாந்தி பப்பு
பி4 – 28 சித்தேஸ்வர் நகர்
விஸ்ரந்வாடி
பூணெ – 411 015

முனைவர் மா. செந்தில்
செல்வக்குமரன்
தொல்லியல் அலுவலர்
த அரசு தொல்லியல்துறை
பாளையங்கோட்டை

திரு. ச. செல்வராஜ்
தொல்லியல் அலுவலர்
த அரசு தொல்லியல் துறை
தருமபுரி – 631 001

முனைவர் எ. சுப்பராயலு
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613005

முனைவர் பா. ஜம்புலிங்கம்
நிகர்நிலைக் கண்காணிப்பாளர்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

முனைவர் பா. ஜெயக்குமார்
கல்வெட்டியல்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005

திரு. ஆ. திருநீலகண்டன்
டி–36 முதன்மைச் சாலை
பெருமாள்புரம்
திருநெல்வேலி – 627 007

திரு. ஆ. துரைரங்கம்
தலைவர், தத்துவம் – உளவியல் துறை
தாகூர் கலைக் கல்லூரி
புதுச்சேரி – 605 008

திரு. து. துளசிராமன்
காப்பாட்சியர்
தொல்லியல்துறை
அகழ்வைப்பகம்
ஆர்க்காடு – 632 503

திரு. செந்தீ நடராஜன்
36 121 செந்தில் இல்லம்
கல்படித்தெரு
நாகராசாகோவில் அருகில்
நாகர்கோவில் – 629 001

திரு. கே. பி. ஏ. நல்லமுகமுது
1.11 பழக்கடை சந்து
நேரு பஜார் சிவகங்கை – 630 561

முனைவர் சி. பத்மநாதன்
பேராசிரியர் வரலாற்றுத்துறை
பேராதனைப் பல்கலைக்கழகம்
இலங்கை

திரு. இரா. பாஸ்கரன்
46 சங்கரமடம் வீதி
புதுக்கோட்டை – 622 005

திரு. ப. பூபாலன்
9 பாட்டைத் தெரு
நவல்பூர்
இராணிப்பேட்டை – 632 402

திரு. வா. மகேஸ்வரன்
முனைவர்பட்ட ஆய்வாளர்
கல்வெட்டியல்துறை–தொல்லியல்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 005
(விரிவுரையாளர், தமிழ்த்துறை
பேராதனைப் பல்கலைக்கழகம்
இலங்கை)

திரு. எல். முகமது நாசர்
1003 மங்கம்மாள் சாலை
பள்ளிவாசல் எதிரில்
கிரசண்ட் நகர்
கே. டி. நகர் வடக்கு
பாளையங்கோட்டை – 627 011

முனைவர் கே. வி. ரமேஷ்
மதிப்புறு இயக்குநர்
கீழ்த்திசை சுவடிகள் நூலகம்
மைசூர் பல்கலைக்கழகம்
மைசூர் – 575 00

முனைவர் கா. ராஜன்
இணைப் பேராசிரியர்
கல்வெட்டியல் – தொல்லியல்துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர் – 613 005

முனைவர் ஜெ. ராஜாமுகமது
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
புதுக்கோட்டை – 622 002

திரு. ஐ. ராமசாமி
இக்கரை போளுவாம்பட்டி
தொண்டாமுத்தூர் வழி
கோவை – 641 109

திருமதி சீ. வசந்தி
அகழாய்வாளர்
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை
சி. பி. டி. வளாகம் தரமணி
சென்னை – 600 113

முனைவர் ஆர். வனஜா
காப்பாட்சியர் (ஓய்வு)
தேசிய அருங்காட்சியகம்
புது தில்லி

முனைவர் கோ. விசயவேணு
கோபால்
புதுச்சேரி பிரெஞ்சு நிறுவனம்
புதுச்சேரி 605001

திரு. சி .வீரராகவன் & மங்கை ராகவன்
66 முத்துவேல் லே அவுட்
கே. கே. சாலை
விழுப்புரம் – 605 606

திரு. ந. வெங்கடேசன்
11 கிழக்கு சந்நிதி வீதி
வில்லியனூர்
பாண்டிச்சேரி – 605 110

திரு. ப. வெங்கடேசன்
3/ 178 கம்பன் தெரு காவேரி பாக்கம்
பெல்லியப்பா நகர்
வாலாஜாப் பேட்டை – 632 513

திரு. கி. ஸ்ரீதரன்
324 முதல் தெரு நடேசன் நகர்
விருகம்பாக்கம்
சென்னை – 600 092

## TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY; THANJAVUR

### RECEIPTS AND PAYMENTS ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2002

| | | | |
|---|---|---|---|
| To Opening Balance: | | By Bank FD | 1,10,000.00 |
| " Cash in hand | 460.59 | " Printing | 21,299.00 |
| Cash at Bank " Indian Bank, Thanjavur | 758.00 | " Xerox&Stationery | 3,116.50 |
| " SBI, Thanjavur | 23,797.32 | " Audit Fees | 500.00 |
| " Bank FD | 1,10,000.00 | " Salary | 550.00 |
| " Sale of Books | 5,010.00 | " Honorarium | 4,000.00 |
| " Membership fees | 7,900.00 | " Postage | 2,879.00 |
| " Donation | 12,001.00 | " Bank Charges | 188.00 |
| " Interest | 20,617.30 | " Freight | 2,195.00 |
| " ICHR Grant for Publication | 5,000.00 | " General Expenses | 4,643.32 |
| | | " Furniture | 6,000.00 |
| | | **Closing Balance**: | |
| | | " SBI, Thanjavur | 29,007.90 |
| | | " Indian Bank | 788.00 |
| | | "Cash in hand | 377.49 |
| | **1,85,544.21** | | **1,85,544.21** |

## TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

### INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2002

| | | | |
|---|---|---|---|
| To Printing Charges | 21,299.00 | By Sales of Books | 5,010.00 |
| "Xerox & Stationery | 3,116.50 | "Membership Fees | 7,900.00 |
| " Audit Fees | 500.00 | " Interest | 20,617.30 |
| " Salary | 550.00 | " Donation | 12,001.00 |
| " Honorarium | 4,000.00 | " ICHR Grant | 5,000.00 |
| " Postage | 2,879.00 | | |
| " Transport (Freight) | 2,195.00 | | |
| " Bank Charges | 188.00 | | |
| " General Expenses | 4,643.32 | | |
| " Excess of Income Over Expemditure | 11,157.48 | | |
| | **50,528.30** | | **50,528.30** |

### BALANCE SHEET AS ON 31.03.2002

| **LIABILITIES** | | **ASSETS** | |
|---|---|---|---|
| FUND ACCOUNT: | | Fixed Deposit | 1,30,000.00 |
| Opening Balance | 1,55,015.91 | Furniture | 6,000.00 |
| Add: Income | 11,157.48 | Cash at Bank: | |
| | | Indian Bank, Thanjavur | 788.00 |
| | 1,66,173.39 | | |
| | | SBI, Thanjavur | 29,007.90 |
| | | Cash in hand | 377.49 |
| | **1,66,173.39** | | **1,66,173.39** |

# அஞ்சலி

## கே.ஜி. கிருஷ்ணன்

பிறப்பு : 27.2.1923 மறைவு : 11.12.2001

முதுபெரும் கல்வெட்டறிஞர் கொடிகாநல்லூர் கணபதி சாஸ்திரிகள் கிருஷ்ணன் அண்மையில் காலமடைந்தார். தமிழ்க் கல் வெட்டியல் ஆய்வாளர்களுக்கும், ஆர்வலர்களுக்கும் இது ஒரு பெரிய இழப்பாகும். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் இலக் கியத்தில் முதுகலைப் பட்டம் (1943) பெற்ற இவர் இந்திய அரசின் தொல்லியல் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவில் 1950 இல் சேர்ந்து 1978 இல் முதன்மைக் கல் வெட்டியல் அலுவலராக (Chief Epigraphist) ஓய்வு பெற்றார். பல கடினமான கல்வெட்டுகளைப் படித்து எபிகிராபிகா இண்டிகா தொகுதி களில் பதிப்பித்துள்ளார். பாண்டியர் கல்வெட்டுகள் தொகுதி (தெக. 14), முதல் இராசேந்திர சோழனின் கரந்தைச் செப்பேடுகள் ஆகியவை அவர் பதிப்பித்த தொகுதிகளில் குறிப்பிடத்தக்கவை. உட்டங்கித அறக்கட்டளை நிறுவனத்திற்காக வடமொழிக் கல்வெட்டுகளை இரண்டு தொகுதிகளில் பதிப்பித்துத் தந்துள்ளார். பல இளம் கல்வெட்டாய்வாளர் களுக்குப் பயிற்சி அளித்துள்ளார். 1988 இல் சில மாதங்கள் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் வருகைப் பேராசிரியராக இருந்து தமிழ் எழுத்து வளர்ச்சி பற்றிச் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார். அன்னாரின் சிறந்த கல்வெட்டியல் பணிகளைப் பாராட்டித் தமிழகத் தொல்லியல் கழகம், ஈரோட்டில் 1997 இல் நடந்த அதன் எட்டாவது கருத்தரங்கில் செப்புப் பட்டயம் அளித்துச் சிறப்புச் செய்து மகிழ்ந்தது.

## ச. ஹரிஹரன்

பிறப்பு : 22.10.1944 மறைவு : 28.1.2002

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையில் கல்வெட்டாய்வாளராகப் பணியில் சேர்ந்து பதிவு அலுவலர், உதவி இயக்குநர் என பல நிலைகளில் 25 ஆண்டுகளுக்கு மேலாகப் பணியாற்றிய ச. ஹரிஹரன் அண்மையில் காலமானார். செங்கம், தர்மபுரிப் பகுதிகளில் நடுகற்கள், கல்வெட்டுகள் பலவற்றைக் கண்டறிவதில் தீவிரமாக ஈடுபட்டவர். அரிய செப்புத்திரு மேனிகள் பலவற்றைக் கண்டறிந்து பதிவு செய்தவர். வட மொழி, ஆங்கிலம் ஆகியவற்றில் புலமை மிக்கவர். வாழ்நாள் உறுப்பினரான இவரது மறைவுக்குத் தமிழகத் தொல்லியல் கழகம் அஞ்சலி செலுத்திப் பதிவு செய்கிறது.

# ஆவணம்

## *தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆண்டு இதழ்*

**ஆவணம்** தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும் ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய யாவருடைய நூலகங்களுக்கும் இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

*ஆவணம்* 1—2 இருப்பு இல்லை

*ஆவணம்* 3—12 ரூ 100.00 (இதழ் ஒன்றுக்கு)

நொபொரு கராஷிமா, *வரலாற்றுப்போக்கில் தென்னகச் சமூகம் (சோழர் காலம்)* ரூ. 100.00

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெற விழைவோர், சரியான தொகையை வரைவோலை, காசோலை, அல்லது பணவிடை மூலம் பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் ரூ. 600.00 பொருளாளருக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ 50ம் செயலாளருக்கு அனுப்பிவைக்க வேண்டும்.

வரைவோலை, காசோலை, பணவிடைகள் தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால் கூடவே வங்கிப்பிடித்தம் ரூ 25ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும்.

*முகவரி*

செயலர் / பொருளாளர்,

மே/பா கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம்,

தஞ்சாவூர் 613005.

**Contact Address:**

Secretary/Treasurer

Tamizakat tolliyal kazakam (Tamil Nadu Archaeological Society), C/o Department of Epigraphy & Archaeology

Tamil University, Thanjavur 613005